கழக வெளியீடு - ௬௫

உ

திருச்சிற்றம்பலம்

# மெய்கண்ட சாத்திரம்

## பதினான்கு

சென்னை,

நியாய கலாசாலைப் பேராசிரியர்

கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்

எம். ஏ., எம். எல்., அட்வகேட்

எழுதிய

முன்னுரையுடன்

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

குரோதன ௵ ஐப்பசி ௴

# பொருளடக்கம்

# பதிப்புரை

சைவசமய ஆசிரியர்கள் சமயாசாரியர்களென்றும் சந்தானாசாரியர்களென்றும் இருவகைப்படுவர். அவர்களுள் சமயாசாரியர்கள் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசக சுவாமிகளென்னும் நால்வருமாவர். சந்தானாசாரியர்கள் மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியர், மறைஞானசம்பந்த சிவாசாரியர், உமாபதி சிவாசாரியரென்னும் நால்வருமாவர். சமயாசாரியர் நால்வரும் தேவாரம் திருவாசகமென்னும் அருணூல்களைத் தமிழிலே தோத்திர வடிவமாக அருளிச்செய்து சைவசித்தாந்த ஞானத்தை நிலைநிறுத்தியருளினார்கள். சந்தானாசாரியர் நால்வரில் மெய்கண்டதேவர் சிவஞானபோதமென்னும் ஒரு நூலையும், அருணந்தி சிவாசாரியர் சிவஞான சித்தியார், இருபாவிருபஃதென்னும் இரண்டு நூல்களையும், உமாபதி சிவாசாரியர் சிவப்பிரகாச முதலிய எட்டு நூல்களையும் தமிழிலே சாத்திரவடிவமாக அருளிச்செய்து சைவசித்தாந்த ஞானத்தை நிலைநிறுத்தி யருளினார்கள். ஆகவே சைவசித்தாந்தம் இப்பொழுது வழங்கிவரும் முறையில் நிலைபேறடைந்தமை இவ்விருவகையாசிரியர்களின் அருணோக்கம் பற்றியேயாமென்பது நன்கு தெளியப்படும்.

தோத்திர வடிவமாகவும் சாத்திரவடிவமாகவும் செய்யப்பட்ட மேற்கூறிய இருவகை நூல்களுள் தோத்திரவடிவமான தேவார முதலிய அருணூல்கள் தம்மை மெய்யன்போடு விதிப்படி நியமமாக ஓதிவருபவர்களுக்கு அவரவர் விரும்பிய இம்மை மறுமை வீடென்னும் முத்திறப்பயன்களையும் அருளுவன. அவற்றிலே சித்தாந்த ஞானம் அனுபவமுறையாக ஆங்காங்கே சிதறுண்டு காணப்படும். ஆதலின் அவற்றை யோதுவோர் சித்தாந்த ஞானத்தை எளிதிற் பெறுதலும் பெற்று அனுபவத்திற்குக் கொண்டுவருதலும் இயலாத காரியங்களாம். ஆனால் சாத்திர வடிவமான சிவஞானபோத முதலிய

நூல்கள் சித்தாந்தத்திற் கூறப்படும் பொருள்களை அளவைநூன் முறைப்படி பிரமாணம் இலக்கணமென்னுமிரண்டானும் ஆராய்ச்சி செய்து நிறுத்திப், பின்னர் உயிர் இறைவனுடைய பேரானந் தப் பெருஞ் செல்வத்தை நுகர்தற்குச் செய்ய வேண்டிய சாதனத் தையும் அச்சாதனத்தைச் செய்து முற்றிய உயிர் அடையும் மேலாம் பயனெனப்படும் பாசநீக்கம் சிவத்துவ விளக்கமென்பன வற்றையும் தெளிவுபெற ஒழுங்கு படுத்தி விளக்கிக் கூறும். ஆத லின் இந்நூல்களை இலக்கணம் தருக்க மென்னும் இரண்டு நூல் களினும் பயின்ற பொதுவறிவோடு திருவருட்கண் கொண்டு காண் போர் சைவசித்தாந்தப் பொருள்களை எளிதின் அறிந்து சைவ சித்தாந்த ஞானம் எளிதிற் கைவரப்பெற்று வீட்டின்பம் அடைவார் கள்; இடையிட்ட பயனாக ஏனையவும் அவர்களாற் பெறப்படும்.

இவைதன்றியும் தேவார முதலிய அருணூல்களின் மெய்ப் பொருள் சிவஞானபோத முதலிய சித்தாந்த சாத்திரங்களை ஓதி யுணர்ந்தார்க்கே புலனாகும். இச்சித்தாந்த சாத்திரங்களை யுணராது தேவார முதலிய அருணூல்களின் பொருள் தெரியப் புகுவோர் 'கனகவரை குறித்துப்போய்க் கடற்கே வீழ்வார்.' இக்காரணம் பற்றியே போலும் பண்டை ஆன்றோர் பலரும் தேவாரமுதலிய அருணூல்களுக்குப் பொருள்கூற லாகாதென விதித்தனர்.

இக்காரணங்களால் சாத்திர வடிவமாகச் செய்தருளப்பட்ட சிவஞானபோத முதலிய நூல்களின் பெருமை அறியப்படும்.

தமிழ் மொழியிலே சாத்திரவடிவிற் செய்யப்பட்ட ஞான நூல்கள் பதினான்காகும். அவையாவன:—க. திருவுந்தியார், உ. திருக்களிற்றுப்படியார், ங. சிவஞானபோதம், ச. சிவஞானசித்தி யார், ரு. இருபா விருபஃது, சு. உண்மை விளக்கம், எ. சிவப்பிர காசம், அ. திருவருட்பயன், கூ. வினாவெண்பா, ய. போற்றிப் பஃ றொடை, கக. கொடிக்கவி, கஉ. நெஞ்சுவிடுதூது, கங. உண்மை நெறி விளக்கம், கச. சங்கற்ப நிராகரணம் என்பனவாம்.

'உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று'

எனவரும் வெண்பாவால் மேற்கூறப்பட்டமை விளங்கும்.

இவற்றுள் திருவுந்தியார் திருக்களிற்றுப்படியா ரென்னும் இரண்டு நூல்களும் காலத்தால் மிக்க பழமை வாய்ந்தன. திருவுந்தியார் தென்னாடுசெய்த தவத்தானே வடநாட்டினின்றும் எழுந்தருளித் திருவிசலூரில் வீற்றிருந்தருளிய மகா சிவயோகியாராகிய உய்யவந்ததேவ நாயனாராலே அருளிச்செய்யப்பட்டது. இவ்வுண்மை

'வைய முழுது மலக்கயங் கண்டிடு
முய்யவந் தாளுரை யுந்தீபற
வுண்மை யுணர்ந்தாரொன் றுந்தீபற'

எனவருந் திருவாக்கானறியப்படும். திருக்களிற்றுப்படியார் திருவுந்தியாரருளிச் செய்த உய்யவந்ததேவ நாயனாது மாணாக்கராகிய திருவிசலூர் ஆளுடையதேவ நாயனாது மாணாக்கராகிய திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனாராலே அருளிச் செய்யப்பட்டது. இவ்வுண்மை

'என்னறிவு சென்றளவில் யானின் றறிந்தபடி
யென்னறிவி லாரறிக வென்றொருவன்—சொன்னபடி
சொல்லக்கே ளென்றொருவன் சொன்னா னெனக்கதனைச்
சொல்லக்கே ளுனக்கச் சொல்'

எனவும்,

'ஆளுடையா னெந்தரமு மாளுடையா னேயறியுந்
தாளுடையான் றொண்டர் தலைக்காவ—லாளுந்
திருவியலூ ராளுஞ் சிவயோகி யின்றென்
வருவினையை மாற்றினான் வந்து'

எனவும் வரும் திருவாக்குக்களான் அறியப்படும். உண்மைவிளக்க மென்னும் நூல் திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்டதேவ நாயனாரது மாணாக்கர்களுள் ஒருவராகிய திருவதிகை மனவாசகங்கடந்த நாயனாராலே அருளிச்செய்யப்பட்டது. இம்மூன்று நூல்களும், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபாவிருபஃது, சிவப்பிரகாசமுதலிய எட்டு ஆகிய பதினொருநூல்களும் சேர்ந்த தொகை பதினான்காம். இப்பதினான்கு நூல்களும் மெய்கண்ட சாத்திரமெனவும், சித்தாந்த சாத்திரமெனவும் ஆன்றோர்களால் வழங்கப்பட்டு வருகின்றன. இவற்றிற்கு வடநூற் கடலும் தமிழ் நூற் கடலும் நிலை கண்டுணர்ந்த மாதவச் சிவஞான யோகிகள் முதலிய பெரியோர்கள் உரைவகுத்திருக்கின்றார்கள்.

இச்சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனையும் சித்தாந்த சைவரிற் பலர் நியமமாகப் பூசை பாராயண மென்பன செய்துவருகின்றார்கள். அவ்வாறு பூசை பாராயண மென்பன செய்தற்கு மூலமாத்திரமுள்ள புத்தகம் மிகுந்த பயன்படு மென்பதனை அனைவரும் அறிவார்கள். சித்தாந்தசாத்திரமூலம் இதற்குமுன் திருவாளர் மதுரை நாயகம் பிள்ளையவர்களாலும் திருவாளர் சிங்காரவேலு முதலியாரவர்களாலும் வெளியிடப்பட்டிருக்கின்றது. இப்பொழுது அம்மூலபாடப் பிரதிகள் கிடைத்தலரிதாகலின், யாங்கள் சித்தாந்த சாத்திரம் பதினான்கன் மூலபாடத்தை இதுபொழுது சைவ உலகத்திற்கு மகிழ்ச்சியோடு வெளியிடுகின்றோம். இவ்வெளியீட்டில் மெய்கண்ட தேவர் அருணந்தி சிவாசாரியர் உமாபதி சிவாசாரியரென்னும் மூவர் திருவுருவப் படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

எங்களுடைய இப்புதிய பதிப்பில் பல அருமையான பாடங்கள் காணப்படும். அவற்றையெல்லாம் விவரமாக எழுதின் பதிப்புரை விரியுமாதலின் ஒன்றிரண்டு மட்டும் இங்கே குறிப்பிடுகின்றோம்.

திருக்களிற்றுப்படியாரின் ருஉ-வது செய்யுள்

'கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக்—கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற்
றோரறியு மன்பன் றது'

என்று அச்சிட்ட பதிப்புக்கள் அனைத்திலும் காணப்படுகின்றது. எங்களுக்குக் கிடைத்த எட்டுப் பிரதிகளிலும் கையெழுத்துப் பிரதிகளிலும் 'மற், றியாமறியு மன்பன் றது' என்ற பாடமே காணப்படுகின்றது. இப்பாடம் எதுகைநயம் பொருள்நயமென்பன அமைந்து விளங்குதலின் அவ்வாறே பாடம் குறித்திருக்கிறோம்.

சிவப்பிரகாசத்தின் உச-வது செய்யுள் ஈற்றடி

'சடத்திரளும் கர்த்தாவாய்த் தனக்கொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே'

என அச்சிட்ட பதிப்புக்கள் அனைத்திலும் காணப்படுகின்றது. எங்களுக்குக் கிடைத்த ஏட்டுப் பிரதிகளில்,

'சடத்திரளு மகர்த்தாவாய்த் தனக்கொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே'

எனப்பாடம் காணப்படுகின்றது. ஞானராஜதானியாகிய திருவாவடுதுறையாதீனத்திலே மூன்றாவது மகாசந்நிதானமா யெழுந்தருளியிருந்து உலகுடைய நாயனர் முதலிய அடியார்களுக்குச் சிவதீக்ஷை செய்து பலஞானநூல்களும் உரைகளும் அருளிச்செய்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகசுவாமிகள் 'சிவப்பிரகாச சிந்தனை'யில் மேற்காட்டியவாறு 'அகர்த்தாவாய்' என்று பாடங்கொண்டு 'அகத்தாவாகிய தனக்கெனவோரறிவில்லாத ஆன்மாவும்' என்று உரையருளிச் செய்திருக்கின்றார்கள். மதுரைச் சிவப்பிரகாசரும் தாமியற்றியருளிய சிவப்பிரகாசவுரையில் 'அகர்த்தாவாய்' என்றே பாடங்கொண்டு 'கத்தாவல்லனுமாய்த் தானே யறிகைக்கோ ரறிவில்லாத ஆன்மாவும்'

என்று உரைகூறினர். ஆதலின் எங்கள் பதிப்பில் இப்பாடமே கொள்ளப்பட்டிருக்கிறது.

சங்கற்பநிராகரணத்தில் அகவல்கள் உம என்று பதிப்புக்கள் அனைத்தும் கணக்கிடுகின்றன. ஐக்கியவாதி சங்கற்ப நிராகரணத்தின் ஈற்றடி 'ஆயினை யமையு மருணிலை கேண்மதி' என்றிருக்கின்றது. இவ்வடி பொருண்முடியாமையின் செய்யுளி னிறுதியாகாது. பாடாண வாதி சங்கற்பமுஞ் சேர்ந்தே செய்யுள் முற்றுப்பெறுகின்றது. இவ்வாறே பின்வருவன அனைத்துமாம். அன்றியும் பாயிரத்தில் 'எண்மர் நிரையிலிருப்ப, மயங்கு வாத மாயா வாதி, முயங்கிட வொருதலை முதுவெதிர் மணிசேர், பெண்ணை சூழ்ந்த வெண்ணையம் பதிதிகழ், மெய்கண் டவனருள் கைகண் டவர்களி,லொருவரொருதலை மருவி யிருப்ப' எனப்பதின்மர் பொற்றேறாலயத்திருந்தமை கூறப்படுகின்றது. ஆகவே பதின்மர் கூற்றுச் செய்யுட்கள் பத்தும், கடவுள் வணக்கம், பாயிரம் செய்யுளிரண்டும் ஆகச் செய்யுட்கள் பன்னிரண்டேயாகும். இவ்வாறு கணக்கிட்டு எங்கள் பதிப்பிற் குறித்திருக்கின்றோம். மேலும் காணப்படும் விவரங்கள் பல.

இவ்வகை அரிய பாடங்கள் கிடைத்தற்குத் துணையாயிருந்தவை, சூரியனார் கோவி லாதீனம் ஸ்ரீமத் இலக்கணம் முத்துக்குமார சுவாமித் தம்பிரானவர்களும், திருநெல்வேலி திருவாளர் S. பாலவண்ண முதலியாரவர்களும் உதவிய எட்டுப்பிரதிகளும் கையெழுத்துப் பிரதிகளுமேயாம். அவ்விருவர்களுக்கும் எங்கள் புதிய பதிப்பிற்கு முன்னுரையாகச் 'சந்தானசாரியர் வரலாறு' எழுதி யுதவிய சென்னை அடவகேட திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை, M.A., M.L., அவர்கட்கும், பிரதிகள் பலவற்றையும் ஒப்பு நோக்கிப் பாடபேதங்களைக் குறித்துச் செப்பஞ் செய்த திருநெல்வேலி இந்துகலாசாலைத் தமிழ்ப் போதகாசிரியர் திருவாளர் வி. சிதம்பர ராமலிங்க பிள்ளையவர்கட்கும் யாங்கள் எங்கள் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

திருச்சிற்றம்பலம்

சென்னை நியாய கலாசாலைப் பேராசிரியர்

## திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை

## எம். ஏ., எம். எல்., அட்வகேட்

அவர்கள் எழுதிய

# முன்னுரை

### சைவ சித்தாந்த சந்தானாசாரியர்களும் அவர்களது அருள் நூல்களும்

முழுமுதற் கடவுள் சிற்றுயிர்களுக்கு அருள் செய்யும் முறை பலவாக இருப்பினும் அவற்றுள் இருமுறைகள் தெளிவாக விளங்குகின்றன. அவர், ஒவ்வொரு மக்கட் பிரிவினர்க்கும் அவரவர் தகுதிக்கு ஏற்ப வெவ்வேறு வடிவங்கள் வாயிலாக அருள் செய்திருக்கின்ற முறைமை பல சமய வரலாற்றினாலும் நன்கு அறியலாகும். கிறிஸ்துமதம், மகமதிய மதம் முதலிய கடவுள் உண்டென்று கூறும் ஒவ்வொரு சமயத்திலும் அவ்வச்சமயப் பெரியார் வாயிலாகவே சமய அறிவு புகட்டப்பட்டதாக அறிகிறோம். அத்தகைய சமயங்களில் கடவுளையும் அவரது திருவருளையும் தொழுது போற்று மரபும் காணப்படுகின்றது. ஆதலினாலன்றோ,

> “ வேறுவே றுருவும் வேறுவே றியற்கையு
> நூறுநா றுயிர மியல்பின தாகி
> ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக்
> கூறுடை மங்கையுந் தானும்வந் தருளி ”

என்று மணிவாசகப் பெருமான் கீர்த்தித் திருவகவலில் திருவாய் மலர்ந்தருளியதூஉ மென்க. அங்ஙனம் அருள் செய்த முறைகள் பலவும் இரண்டு வகையின் வைத்து ஆராய்ச்சி செய்தல்கூடும். அவ்வகைகள் அன்பு வழியும் அறிவு வழியும் ஆகும். சிறந்த அன்பு நெறியிற் பயின்ற பண்டை நற்றவத்தினர்க்கு இறைவன் தானே வெளிப்பட்டு ஞானம் நல்கி வீட்டின்பத்தை அருளுவன். சைவசித்தாந்த சமயத்தில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் என்னும் பெரியோர்க்கும் ஏனை அறுபத்துமூன்று நாயன்மார்க்கும் அருள்செய்த முறையால் அஃது இனிது விளங்கும்.

"பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்திபண்ணுந்
தொண்டரைத் தானே தூய கதியினிற் றொகுப்பன்"

என்ற சிவஞானசித்தித் திருவாக்குங் காண்க. அங்ஙனம் அன்பு வழியிற் செல்வதன்முன் அறிவினாலே கடவுள், உயிர், உலகம் என்பவற்றின் இயல்பையும் தொடர்பையும் பற்றிய உண்மையை யுணரவேண்டுமென்ற விருப்பமுடைய உயிர்களின் பொருட்டு அவ்வுண்மை ஞானத்தைக் கடவுள் தக்க தவத்தினர்க்கு முதற்கண் உணர்த்தி அவர்கள் பரம்பரை வாயிலாக ஏனை உயிர்கள் அதனை யுணர்ந்து உய்யுமாறு கருணை செய்யுமுறை அறிவு வழிப் பாலதாகும். இந்த அறிவுமுறையைச் சிவபெருமான் முதன் முதல் நான்கு முனிவர்க்கு ஓர் ஆலநீழற் கீழ்க்காட்டி யருளியதாகத் திருமுறைகள் முழங்குகின்றன. அஃது

"ஓரா னீழ லொண்கழ லிரண்டு முப்பொழு
தேத்திய நால்வர்க் கொளிநெறி காட்டினை"

என்ற ஞானசம்பந்தப் பெருமான் திருவெழு கூற்றிருக்கைத் திருவாக்கினால் இனிது விளங்கும். அந்நான்கு முனிவர் உலகத்திற்கு வெளிப்படுத்திய நெறி திருநெறி யென்றும் மறைவழி யென்றும் பொதுநெறி யென்றும் கூறப்படும். அஃது அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கினையுந் தருவது. அந்நெறிக்குரிய கருத்துக்கள் பலவும் பிற்காலத்தில் தமிழிலே சித்தர் நூல்களுள் வரையப்பட்டன.

இனி வீட்டின்பத்தையே விழைந்து அதற்குரிய நெறியை அறிய விரும்பிய ஐந்து பெரியோர்க்குத் தென்றமிழ் நாட்டிற் றிகழ்ந்தோங்கிய பெருமணிமலை யென்னும் மகேந்திரத்தில் சிவபெருமான் அருநெறியை உணர்த்தினதாகத் திருவாசகம் கூறுகின்றது.

"மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்"

"மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்து
உற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்."

(கீர்த்தித் திருவகவல்.)

என்றமையால் அது விளங்கும். (இதைப்பற்றிய விரிந்த ஆராய்ச்சிக் குறிப்பு நமது கழகப் பதிப்பாகிய தொல்காப்பிய எழுத்ததிகாரம் - நச்சினார்க்கினியம் - முகவுரையில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது.) அவ்வைம் முனிவரது மரபில் வந்தோரே பண்டைத் தமிழ் நாட்டில் பார்ப்பார் என்ற பெயர்பெற்றுச் சிறந்தனர். அம்மரபினர்க்கு இக்காலத்து ஆதிசைவர் என்ற பெயர் அமைக்கப்பட்டுள்ளது.

அவர்களது நெறியே ஆகம நெறியாகும். அவ் ஆதிசைவ மரபில் தோன்றிய மாணிக்கவாசகப் பெருமானுக்குத் திருப் பெருந்துறையில் சிவபெருமான் ஞானோபதேசஞ் செய்த முறையும் ஆகம முறையே யாகும். அவ்வாறே திருக் கைலாய மலையின்கண் சிவபெருமான் திருநந்தி தேவர்க்கு அறிவு நெறியினை அருளிச்செய்து அவர் வாயிலாக எண்ம ருக்கு வெவ்வேறு காலத்தில் ஞானத்தை நல்கி யருளினர். அவ்வெண்ம ராவார்: சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனாதனர், சிவயோகமாமுனி, பதஞ்சலி, வியாக்கிர பாதர், திருமூலர். அது,

> நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடி
> னந்திக ணால்வர் சிவயோக மாமுனி
> மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிர
> ரென்றிவ ரென்னோ டெண்மரு மாமே

என்ற திருமூலர் திருவாக்கானும் உணரப்படும். இவருள் சனற்குமார மகா முனிவரே மெய்கண்ட சந்தானத்திற்குத் தலைவர். இவரையே சமயப் பொதுக் கழகத்தார் (Theosophical Society) தங்கள் பெரியோர் உட்கழகத் (Esoteric Society) திற்குத் தலைவராகக் கொள்ளுகின்றார்கள். வெள்ளி மலையில் அவரும் அவரைச் சார்ந்தாரு மிருப்ப தாக நமது புராணங்கள் கூற வெள்ளி மண்டலத்தில் அன் னோர்கள் இருப்பதாக அக்கழகத்தார் கூறுகின்றார்கள். இவர் வாயிலாக விஞ்ஞான தேவர் சந்தானம் மெய்கண்ட தேவர் சந்தானம் என்ற இரண்டு பரம்பரை முதற்கண் ஏற்பட்டுப் பின் பலவாயினவென்று அறிகின்றோம். அப் படியே திருமூலர் முதலிய பிற எழுவர் வாயிலாகவும் பல

பரம்பரைகள் உலகத்தில் சைவசித்தாந்த ஞானத்தை வெவ் வேறு காலங்களில் பரவச் செய்தன. அவற்றின் விவரம் கீழ்க்குறித்த அட்டவணையிற் காண்க.

**திருமூலதேவராற்** பிரமதேவர், இந்திர தேவர், விஷ்ணு தேவர், உருத்திர தேவர், கந்துரு மகா விருடிகள், காலாக்கினி யுருத்திரர், கஞ்சனூர் மலையமான் என எழுவர் சந்தான மேற்பட்டன.

**வியாக்கிரபாத** முனிவரால் சத்தியோஜாத தேவர் சந்தானம் ஏற்பட்டது.

**பதஞ்சலி** முனிவரால் நிறைந்த நாயனுர் சந்தானம் ஏற்பட்டது.

**சிவயோக முனி**வரால் வாமதேவர் சந்தானம் ஏற்பட்டது.

**சனுதனராற்** பிரமதேவர் சந்தானமும், சிங்கநாத தேவர் சந்தானமும் என இரண்டு ஏற்பட்டன.

**சனந்தனராற்** சிவமண்ணிய தேவர் சந்தானம், பரமதேவர் சந்தானம், சிவானந்தபோதர் சந்தானம் என மூன்று ஏற்பட்டன.

**சனற்குமாரரால்** விஞ்ஞான தேவர் சந்தானம் மெய்கண்ட தேவர் சந்தானம் என இரண்டு ஏற்பட்டன.

**சனகராற்** சம்பு சந்தானம், மலையமான் சந்தானம் என இரண்டு ஏற்பட்டன.

ஏறக்குறைய எட்டு நூற்றுண்டுகட்குமுன் இத்தமிழ் நாட்டிலே தோன்றி நிலைபெற்ற **மெய்கண்டதேவர் சந்தானமே** நமது ஆராய்ச்சிக்கு உரியதாகும். உலகந் தோன்றிய

காலந்தொட்டுப் பலபல காலங்களில் பலபல சந்தானங்கள் சித்தாந்தஞானத்தை உலகிற்கு விளக்கிய போதினும் அதன் ஒளி பல காரணங்களால் சில நூற்றாண்டுகட்கு முன்னே நமது நாட்டிற் குன்றுவ தாயிற்று. புத்தசமயம் மிகுந்த காலத்தே ஸ்ரீமணிவாசகப் பெருமான் தோன்றி யருளி தமது அருள் நூலாலும் அருள் வாழ்க்கையாலும் சித்தாந்தஞானத் தைத் தமிழ்நாட்டிலே நிலைநாட்டினர். தேவார முதல்வர்கள் அன்பு நெறியில் நின்று தமது திருவருட் பாடல்களினாலே சித்தாந்த சமயத்தை நிலைநாட்டிச் சமண சமயத்தால் வந்த இடர்களை நீக்கியருளினார்கள். அவர்க்கு முன்னோ பின்னோ திருமூலமா முனிவரும் பதஞ்சலி முனிவரது பரம்பரையில் நிறைந்த நாயனார் சந்தானத்தில் வந்த ஞானாமிர்த நூலாசிரிய ராகிய வாகீச முனிவரும் சைவசித்தாந்த உண்மைகளை உலகிற்கு வெளிப்படுத்த இயற்றிய நூல்கள் இன்றும் உள்ளன.

ஒன்பதாவது நூற்றாண்டிற்குப் பின்னே, வேத வியாச 'ரியற்றிய பிரம சூத்திரத்திற்குச் செய்யப்பட்ட நால்வகைப் பேருரைகளாகிய நீலகண்ட பாடியம், சங்கர பாடியம், இராமாநுஜ பாடியம், மாத்துவ பாடியம் என்னும் மாறுபட்ட விரிநூல்கள் தமிழ்நாட்டிலே பரவி சமயக் கொள்கைகளைப் பற்றிப் பெருங் குழப்பத்தைக் கிளப்பின மையால் சைவ நன்மக்கள் திருமுறைகள் முதலிய சித்தாந்த நூல்களின் உண்மைப் பொரு ளுணராது அலமந்தனர். ஆதி மறைக் கருத்துக்களைச் சிறுபான்மை யுள்ளடக்கிய வடமொழி உபநிடதங்களுட் போந்த அத்துவித மென் னும் சொல்லிற்குப் பொருள் இன்னதென்று தெரியாமல்

அறிவுநூல் கற்போர் பலரும் மயங்கித் தியங்கினர். அம்மயக்கந் தீர்த்தற் பொருட்டும் திருமுறைப் பெருமையை உலகில் நாட்டற் பொருட்டும் சிவபெருமானது திருவருளினல் மெய்கண்ட சந்தானம் இத்தமிழ் நாட்டில் ஏற்பட்டதாகத் தெரிகின்றோம்.

'நல்வியாத முனியுரைசெய் சூத்திரத்தின்
பாடியமோர் நான்குங் கொண்ட
சொல்வாய்மை பொருள் வாய்மை தெளிதலுற்ற
தோராது சோக முற்றோ
ரெல்லாரு மத்துவித சுத்தநிலை
யினிதெய்திச் சோக மேயப்
பொல்லாத சமயிகளு மதிசயிப்பப்
புவனிமிசைப் போத மேற.'

என்று ஸ்ரீமெய்கண்டார் பிறப்பிற்குக் காரணங் கூறும் சந்தானசாரிய புராணசங்கிரகத் திருப்பாட்டால் அது இனிது விளங்கும். மெய்கண்டதேவ நாயனாரால் சித்தாந்த ஞான பரம்பரை இந்நிலவுலகிலே பிறசந்தானங்கள் மறைவெய்தியபின் நிலைநாட்டப்பட்டது. அப்பரம்பரையி லுள்ளோர் மெய்கண்ட சந்தானத்தைச் சேர்ந்தவர்கள் என்று அழைக்கப்படுகின்றார்கள்.

மெய்கண்ட சிவாசாரியர் புராணம் பதினெண்புராணத்துள் பவிஷ்ய புராணத்துள் கூறப்பட்டதாகச் சந்தானசாரியர் புராண சங்கிரகம் என்னும் நூலியற்றிய சுவாமிநாத தேசிகரவர்கள் தெரித்துள்ளார்.

"பம்பிட நவில் புராணம் பதினெட்டுள் பவிடியத்தி
லெம்பெரு மக்கள் காதை யிணையன திகழுமன்றே."

பவிடியத்துள் அவர் வரலாறு கேட்கப்படுவதற்குக் காரண மில்லை. மெய்கண்ட தேவர் காலம் ஏறக்குறைய 800-ஆண்டு கட்கு முன்னரென்று ஊகிக்க இடமுண்டு. ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் தமது சங்கற்பநிராகரணத்துள் அந்நூல் இயற் றப்பட்ட காலம் "ஏழஞ்சு இருநூறெடுத்த வாயிரம், வாழு நற்சகனம் மருவா நிற்ப" என்ற விடத்துச் சாலிவாகன சகாப்தம் 1235-வது ஆண்டெனக் குறித்துள்ளாராகலின் அவர் காலத்திற்குச் சுமார் இரண்டல்லது மூன்று தலை முறைக்குமுன் ஸ்ரீ மெய்கண்ட தேவர் ஞானவொளி பரப் பத் தொடங்கினர் என்பது தெளிவாம். ஆயின் அவர் காலத்திற்குப் பின் பவிடிய புராணத்துள் அவர் வரலாறு கேட்கப்படக்கூடியது அவர் காலத்திற்கு முன்னேயே பவிடியம் அவரது வரலாற்றோடு தோன்றியிருக்குமென்று கோடல் சரித்திரவாராய்ச்சிக்குப் பொருத்தமானதல்ல. எதிர்காலத்துச் செய்திகளை முற்கூறல் சோதிட நூலுக்கே பெரிதும் பொருத்தமாம். பவிடியபுராணம் சோதிட நூலு மல்ல. பாரத முதலிய சில நூல்களுள் கால வியல்பு முத லியவற்றைக் கூறியிருத்தல் காலத்தின் பொதுவியல்பு கூறிய தாகுமேயன்றி வருங்கால மக்கள் சரித்திரங்களை விதந் தோதியதாகாது. தமிழ்ப் பெரியோரது சாத்திரங்கட்கு வடநூல் மூலம் வேண்டுமென்ற தப்புக் கொள்கை சில நூற்றாண்டுகளாக நம்மவர் மனதில் புகுந்து நிற்பதே இங் ஙனம் மெய்கண்ட தேவர் முதலிய சந்தான குரவர் சரித்தி ரத்திற்கு வடநூல் மேற்கோள் கூறியதற்குக் காரணமா கும். இவ்வாறே உண்மையில் வடநூல் மேற்கோளில்லாத தலமான்மியங்களுக்கு வடநூல் மேற்கோள் கூறும் பொய்

நெறியும் நமது நாட்டில் நிலைவுதலாயிற்று. இங்ஙனம் தமிழையும் தமிழ்ப் பெரியோரையும் வடநூலுக்கும் வடநூலாசிரியர்க்கும் தாழ்ந்த நிலையில் வைத்துப் பேசும் பொய் வழக்கத்தைத் தமிழ்ப் பற்றுடையார் கைவிடுதல் வேண்டும். உண்மையாக வடநூலிலுள்ளவற்றைத் தமிழில் மொழி பெயர்ப்பதானுல் அம்மொழி பெயர்ப்புக்கு வடநூல் மேற்கோள் கூறுதலைப்பற்றி ஒருவருங் குறைகூருர். வடநூல்களிலில்லாதவற்றைத் தமிழினின்றும் அதனுள் மொழி பெயர்த்து அவ்வடநூல் மொழிபெயர்ப்பையே தமிழ்மூலத்திறகு மூலம் என்று கூறுதலே அறிவுடையாரால் கடியப் படத்தக்கது. தில்லையம்பலவ ரடியெடுத்துக் கொடுக்கத் திருத்தொண்டத் தொகையையும் நம்பியாண்டார் நம்பி திருவந்தாதியையுங் கருவியாகக் கொண்டு சேக்கிழார் சுவாமிகளருளிச் செய்த பெரிய புராணம் முதனூலாக விருப்பவும் அதன் மொழிபெயர்ப்பாகிய உபமன்னிய பத்த விலாசம் அதற்கு முதனூலென்று கூறும் பொய்யுரையும், அவ்வாறே சிவரகசிய மென்னும் வடமொழி நூலுள் அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திரங்களைச் சிவபெருமான் உமையம்மையார்க்குத்தெரிவித்ததாகப் புகுத்திக் கூறுங் கட்டுமொழியும் உண்மைக்கும் சேக்கிழார் சுவாமிகள் பெருமைக்கும் நேர் பகையாம். ஸ்ரீமத் உமாபதி சிவாசாரியரவர்கள் சிவப்பிரகாச அவை யடக்கத்துள் "தொன்மையவா மெனும் எவையும் நன்ருகா இன்று தோன்றிய நூலெனு மெவையுந் தீதாகா" என்று திருவாய் மலர்ந்தருளியதை நம்மவர்கள் கடைப்பிடிக்கவேண்டும். அங்ஙனம் கடைப்பிடித்துத் தமிழுக்கு உண்மையிலுள்ள பெருமையைக் காவாவிடின் திருவள்ளு

வர் குறள் முதலியனவும் வடநூலின் திரிபென்னும் பொய்க் கொள்கையானது தமிழ் நாட்டில் நிலைபெற்றுவிடும். அதற் கிப்பொழுதே பலர் கங்கணங் கட்டிக்கொண்டு திரிகின்ற னர். ஔவையாரது ஆத்திசூடிக்கும் கொன்றைவேந்தனுக் கும் திருவள்ளுவரில் ஒருபகுதிக்கும் ஆரியத்தில் (வட மொழியில்) மொழிபெயர்ப்புகள் ஏற்பட்டு விட்டன. இப் பொழுது அவை மொழி பெயர்ப்பு நூலென்றே கூறப்படு கின்றன. இன்னுஞ் சிலகாலந் தமிழ் மக்கள் தூங்குவார்க ளென்றால் அம் மொழிபெயர்ப்பு நூல்கள் தமிழ் மூல நூல் களுக்கு மூல நூலாதலுங் கூடும். இது நிற்க.

சைவசித்தாந்த சந்தானகுரவர் வரலாறு புராண வடி வமாகத் திருவாரூர் சுவாமிநாத தேசிகரவர்களால் இயற் றப்பட்டதென்று மேற்கூறினும். அவர் காலம் தெளிவாக விளங்கவில்லை. சந்தான குரவரைப்பற்றித் தருமபுர ஆதீனத்தைச்சார்ந்த சண்முக சுவாமிகள் என்பவர் சந் தானதேசிகர் போற்றிக் கலிவெண்பா வென்னும் நூல் செய்துள்ளார். சந்தானகுரவர் நான்மணி மாலை யென்ற நூல் காலஞ்சென்ற திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையால் பாடப்பட்டது. சந்தானகுரவர் தோத்திரம் பல புராணங்களுள்ளும் காணப்படுகின்றது. முதற்கண் மெய்கண்ட தேவர் சரித்திரமாராயற் பாலது.

## மெய்கண்டதேவர் புராணம்

தொண்டை நாட்டிற்குஞ் சோழ நாட்டிற்கும் நடுவே யுள்ளதாய்த் திருநாவுக்கரசு நாயனாருஞ் சுந்தரமூர்த்தி நாயனாருந் தோன்றியிலங்கிய திருமுனைப்பாடி என்னும்

நடுநாட்டிலே **திருப்பெண்ணாகடம்** என்னுமூரிலே சைவ வேளாள குலத்திலே **அச்சுத களப்பாளர்** என்னும் குல திலகருக்குத் தவப்புதல்வராக **ஸ்ரீ மெய்கண்ட தேவர்** தோன்றி யருளினர். பண்டைத் தமிழரது செந்நெறிக் கொள்கையாகிய சித்தாந்த ஞானத்தை உலகில் நிலைநாட்டுவான் வந்த அருட்பேராசிரியர் பண்டைத்தமிழ் மக்களது சிறந்த நாகரிகத்தைப் பழுதுபடாவண்ணம் போற்றிவரும் சைவ வேளாளர் மரபிலே உதித்தல் மிகவும் பொருத்த முடையதே அவர் தவங்கிடந்து பெற்ற தனிப்புதல்வ ரென்பது யாங்ஙனமெனின், கூறுதும்.

நாயனாரது தந்தை அச்சுத களப்பாளர்க்குப் பன்னாளாகப் பிள்ளைப் பேறில்லாக் குறை யேற்பட்டிருந்ததால் தமது குலகுருவாகிய திருத்துறையூர் **அருணந்தி சிவாசாரி** யாரிடம் சென்று அக்குறை நீங்குதற் பொருட்டுச் செய்வது யாதென அவர் வினவினர். அப்போது ஆசிரியர் திருமுறையைப் பூசித்துக் கயிறு சாத்திப் பார்த்தனர்.

“ பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே ”

என்னுந் திருப்பாட்டு அகப்பட்டது. அச்செய்யுளுள் திருவெண் காட்டிலுள்ள முக்குள நீரில் நீராடுபவர்க்குப் பிள்ளையினோடு எண்ணிய யாவும் கைவருமென்று அறுதியிட்டுக் கூறியிருத்தலின், ஆசிரியர், அச்சுத களப்பாளரைத் திருவெண்காட்டிற்குச் சென்று முக்குளநீரில் முழுகி

அங் கெழுந்தருளியிருக்கும் பெருமானையும் அம்மையை யும் வழிபட்டு வரும்படிக் கட்டளையிட்டார். அக்கட் டளையைச் சென்னி மேற்கொண்டு அச்சுத களப்பாளர் தமது மனைவியாரோடும் திருவெண் காட்டிற்குச் சென்று ஆசிரியர் விதித்தபடி யொழுகி அறங்கள் பலவுஞ் செய்து வந்தனர். அங்ஙனம் ஓராண்டு அவர் வதியுங் காலத்து ஒரு நாள் அவருக்குக் கனவில் சிவபெருமான் றோன்றி 'அன்ப, இப்பிறவியில் மகப்பேறெய்தும் பான்மை நினக்கு இல்லை' என்றுரைத்தனர். அதுகேட்ட அச்சுத களப்பாளர் 'ஞான சம்பந்தப் பெருமானது திருவருட் பாடலை நம்பி ஈண்டுத் தவங் கிடந்ததின் பெரும்பயனாக இம்மையிலேயே நற்புதல்வனை நீவிர் அடியேற் கருளுதல் வேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்து பன்முறை பணிந் தனர். அப்போது அம்மையப்பராகிய சிவபெருமான் கருணை கூர்ந்து 'ஞானசம்பந்தன் நம்மைத் துதித்த பாட்டின்கண் உறுதி வைத்து எம்மை வழிபட்டமையால் அன்னவன் போன்ற மகவினை நீவிரும் பெற்று வாழ்திர்' என்று திரு வாய் மலர்ந்தருளினர். அதனைக்கேட்ட அச்சுத களப்பா ளர் அளவில்லாத மகிழ்ச்சி யடைந்து நனவெய்தியபின் முன்போலவே சிவபெருமானை வழிபட்டு அறநெறியில் ஒழுகுவாராயினர்.

கனவிற் கண்டதெல்லாம் பொய்யென்று ஒதுக்கி விடு தல் தவறு. கனவென்பது நுண்ணுடம்பின் நுகர்ச்சியாக வுள்ளது. நமது கண்ணிற்குப் புலனாக நின்ற வுடம்பே தூல வுடம்பென்று கூறப்படும். அவ்வுடம்பு கொண்டு நன விலே உயிர் போதல் வருதல் முதலியன செய்யும். தூங்

கும்போது கட்புலனாகாத நுண்ணுடம்பு பலவித நுகர்ச்சி களை யடைதல் கூடும். அருந்தவத்தினரது கட்புலனுக்கு அருள் செய்யுங் கடவுள் அவரது நுண்ணுடம்பிற்கு மாத் திரையே புலனாகும் வண்ணம் தோன்றுதலு மியல்பே. தமது நுண்ணுடம்பைப் பருவுடம்பினின்றும் வேறு பிரிக்கு மாற்றலுடைய யோகிகள்கூட ஏனையோரது நுண் ணுடம்பிற்குப் புலனாகும் வன்மை யுடையாரென்பது இவ் வாராய்ச்சியில் (Psychic Research) வல்ல மேலைநாட்டுப் பண்டிதர் சிலரும் ஒப்புக் கொள்ளக் கூடியதே. நனவிற் கண்டது கனவில் உருவெளித் தோற்றம்போல் புலனாவது இதனின் வேறாகும். கடவுளும் யோகிகளும் கனவில் தோன்றும் முறை வேறு. பின்னது பிறபயன் விளைப்பது, முன்னது கைகண்ட பயனொன்றும் விளைப்பதில்லை. கனவில் தோன்றிய பெருமக்கள் தாம் அங்ஙனந் தோன்றியதை நனவில் உரைத்தல் கூடுமாதலின் அன்னவர் தோற்றத் தைக் கனவின் பொய்த் தோற்றத்தோடு பிறழக்கொள்ளு தல் தவறாகும். இதன் நுட்பங்கள் இவண் விரிக்கிற் பெரு கும். இது நிற்க, வரலாற்றின் தொடர்ச்சியை நோக்கு வோமாக.

பின்னர், அச்சுத களப்பாளரது மனைவியார் வயிறு வாய்த்ததறிந்து பத்துத் திங்களிலும் செய்யற் பாலனவா கிய சடங்குகளனைத்தையும் அவர் உவகையோடு செய்து முடித்தனர். சைவசித்தாந்த இளஞ் செஞ்ஞாயிறாகிய மெய் கண்ட தேவர் நல்வேளையிலே நிலவுலக முய்ய உதித்தருளி னார்.

பண்டைமறை வண்டாற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவிரு தயகமல முகைக ளெல்லாங்
கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம்.

(சிவஞானசித்தியார்-பரபக்கம்)

அக்காலத்துச் செய்யவேண்டிய சடங்குகளையு முடித்துத் திருவெண்காட்டடிகளிடம் விடைபெற்று, சுற்றத்தார் புடைசூழப் பிள்ளையோடும் மனைவியோடும் அச்சுத களப்பாளர் திருப்பெண்ணாகடஞ் சென்று தமது மாளிகையில் வதிந்தனர். அவ்வூராரெல்லாம் பிள்ளைப் பேறெய்திய நற்செய்தி கேட்டுக் களிப்படைந்தனர். அவ்வருட் குழந்தைக்கு முதலில் சுவேதவனப் பெருமா ளென்ற திருவெண்காட்டடிகள் திருப்பெயரிடப் பெற்றது. சிலநாட் சென்றபின் திருவெண்ணெய் நல்லூரிலுள்ள நன்மாமனார் குழந்தையை எடுத்துத் தமதில்லத்திற்குக் கொண்டுபோய் வளர்த்து வந்தனர். அங்ஙனம் வளர்ந்துவரு நாளிலே சுவேதவனப் பெருமாள் முற்பிறவியிலேயே சரியை கிரியை யோகம் முதலியன முடித்துச் சிவஞான மடைதற்குரிய பெருந்தவத்தினராதலின் இரண்டு வயதளவிலே 'அடிசேர் ஞானம்' அடைதற்குரிய சாமுசித்திக நிலை எய்தினர். முற்பிறவியில் உறுதியாகப் பயின்ற கல்வி இப்பிறவியில் இளமையில்

எளிதாகத் தழைத்தோங்கி ஒளிர்வதை இயற்கையிலேயே கணித நூல் வன்மை பெரிதும் படைத் திலங்கும் சில பிள்ளைகளிடம் கண்கூடாக இன்றுங் காண்கின்றோம். இலக் கியங்களை மூன்று அல்லது நான்கு வயதில் படித்துப் பொருள்கூறும் குழந்தை ஒன்று சமீபகாலத்தில் பர்மா வில் தோன்றியதாகக் கேள்விப்படுகிறோம்.

> " ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்கு
> எழுமையு மேமாப் புடைத்து "

என்றார் திருவள்ளுவர். ஒரு பிறவியிற் கற்ற கல்வியின் பயனாகிய நல்லறிவு பல பிறவிகளிலும் உயிரோடு கலந்து வளர்ந்து நிலைபெறுதல்போல பல பிறவியிற் கற்ற பெரும் பயன் ஒரு பிறவியிலே இளம்பருவத்திலேயே அளவிலடங் காது பொங்கி மிளிர்தல்கூடும். அத்தகைய கல்விபோல பல பிறவிகளிற் கடவுள் மாட்டு அன்பு செலுத்தி இயற்றப் படும் அருந்தவமானது ஒரு பிறவியிலே அத்தவத்தின் எல்லையற்ற பயனாகிய கடவுளது அருட்காட்சியை யளிக்க வல்லது. சைவசித்தாந்த சமயத்திற்கு முதற்றலைவராகிய ஞானசம்பந்தப் பெருமானும் சித்தாந்த ஞான பரம்பரைக்கு முதற்றலைவராகிய மெய்கண்ட தேவநாயனாரும் உலகமுய் யவே தோன்றி யருளினார் என்பது அவர்கள் குழவிப் பரு வத்திலேயே உலக நெறி செல்லாது கடவுளது அருண் ஞானநெறியிலேயே நிற்கும் உயர் நிலை எய்தினமையால் விளங்கும்.

சுவேதவனப் பெருமாள் திருவெண்ணெய் நல்லூரி லிருந்த காலையில் திருக்கைலாயத்திலிருந்து சனற்குமார

முனிவரது ஞானப்புதல்வராகிய சத்திய ஞான தரிசனிக ளிடம் உபதேசம் பெற்ற பரஞ்சோதி மாமுனிவர் என் பார் ஆகமத்தலைவராகிய ஐம்முனிவருள் தலைசிறந்த அகத் திய முனிவர் வீற்றிருக்கின்ற பொதியமலை நோக்கிச் செல் லுங் காலத்தில் அவரது ஒளிவிமானமானது திருவெண் ணெய் நல்லூருக்கு நேராக வந்தவுடன் நின்று விட்டது. அதன் குறிப்பை யுணர்ந்த **பரஞ்சோதியார்** சுவேதவனப் பெருமானைக் கண்டு அவருக்கு மெய்யுணர்வளித்து **மெய் கண்டார்** என்ற தமது ஞானத் தந்தையின் திரு நாமத் தைச் சூட்டி யருளினர்.

சிவபெருமான் தக்க பக்குவமுடையார்க்குக் குருவாய் வந்துணர்த்துவது பெரும்பான்மையும் தமது பேரன்பரை நிலைக்களமாகக் கொண்டேயாம். பரஞ்சோதிமா முனிவர் மெய்கண்ட தேவர்க்கு மெய்யுணர் வளித்தகாலை அவர் கடவுளோடு இரண்டறக் கலந்து நிற்கும் நிலையினின்று அருள் செய்தாராகலின் சிவபெருமானே நமது நாயனா ருக்கு உண்மைப் பொருள் உணர்த்தியதாகக் கொள்ள வேண்டுமே யொழிய பரஞ்சோதி முனிவர் தாமே அவ் வாறு உணர்த்தினார் என்று கோடல் பொருந்துவதன்றாம். இவ்வாறே உபமன்னியர் கண்ணனுக்கு உபதேசஞ் செய்த தாகவும் கண்ணன் பார்த்தற் கறிவுறுத்தியதாகவுங் கூறுப.

மெய்கண்டார் கலைஞானமனைத்தையும் திருவெண் ணெய் நல்லூரில் எழுந்தருளிய பொல்லாப் பிள்ளையாரிடங் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தனர். பின் அவர் தாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறவேண்டுமென்ற திருவுள்ளக் கருத்தால் **சிவஞான போத**மென்னும் சைவசித்தாந்தத் தலை

மணி ஞானநூலினை இயற்றி யருளினர். அச் சிவஞான போதநுண்பொருளை அவர்பால் கேட்டுத்தெளிந்தோர் நாற்பத்தொன்பது மாணவராவர். அந்நாற்பத்தொன்பதின்மரது பரம்பரை வாயிலாகவே இத்தமிழ் நாடெங்கும் சித்தாந்த அறிவுச்சுடர் கொளுத்தும் ஒளி நிலையங்களாகிய திருமடங்கள் ஏற்பட்டன. முதல் மாணவர் பரம்பரையில்வந்த ஸ்ரீநமசிவாய தேசிகரால் நிலைபெறெய்திய மடம் திருவாவடுதுறையாதீனமாகும். அதே பரம்பரையில் வந்த ஞான சம்பந்த தேசிகரால் தருமபுர வாதீனம் ஏற்படுத்தப்பட்டது. ஸ்ரீ மெய்கண்ட தேவருடைய மாணவருள் முதல் நின்றவர் அவரது தந்தையார்க்குக் குல குருவாகிய அருணந்தி சிவாசாரியார் என்பது அவர் வரலாற்றுள் விரித்துரைக்கப்படும். பதினன்கு சித்தாந்த நூல்களுள் ஒன்றாகிய உண்மை விளக்க வாசிரியராகிய மனவாசகங்கடந்தவரும் அவர்களுள் ஒருவர். சிற்றம்பலநாடிகளும் அவருள் ஒருவரென்ப. மெய்கண்ட தேவநாயனார் தமது மாணவருக்கு உண்மைப் பொருளுணர்த்திய பின்னர் நனவிலேயே அதீதத்தைப் புரிபவராய் இடையறாது சமாதி நிலையிலிருந்து ஐப்பசித் திங்களில் சோதி நாளில் சிவபெருமானோடு இரண்டறக் கலத்தலாகிய பரமுத்தியை யடைந்தனர்.

## அருணந்தி சிவாசாரியார் புராணம்

அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் ஆதிசைவ மரபினர். அவர் நடுநாட்டிலேயுள்ள திருத்துறையூரிலே வதிந்தவர். அவர் மெய்கண்ட தேவநாயனாருடைய தந்தையார்க்குக்குல குருவென்றும் மெய்கண்ட தேவர் பிறப்பதற்குக் காரண

மான தேவாரத் திருப்பாட்டினைக் கயிறு சாத்திக் கண்டவர் என்றும் முன்னமே கூறப்பட்டது. அவர் சிவாகமங்களனைத் தையுங் கற்றுத் துறைபோகியவராதலால் சகலாகம பண் டிதரென்னும் உயர்ந்தபட்டம் பெற்றிருந்தார். அவர் வட மொழியில் வேத முதலிய கலைகள் யாவற்றையும் நன்கு கற்றதனோடமையாது செந்தமிழிலே பன்னிரு திருமுறைகள் முதலிய பன்னூல்களையும் நுட்பமாக ஆய்ந்து தெளிந்தவர். அவருக்குத் தேவாரத்தின்கணிருந்த பெரும்பற்று அச் சுத களப்பாளர் பிள்ளை வேண்டிய காலத்து வேறு வட நூல்களில் கயிறு சாத்தாது ஞானசம்பந்தப் பெருமான் திரு முறைக்குறிப்பினை உணரப்புகுந்தமையால் இனிது விளங் கும். இற்றைக் காலத்திலே திருக்கோயில்களில் பூசனை புரியும் குருக்களாகிய ஆதிசைவர்களிற் பலர் தேவாரத் திரு முறைகளிற் சிறிதும் பற்றிலாதவராய் ஆகமநூல் கிடந்த மூலையுந் தெரியாதவராய்த் தம் பெருமை யுணராது காலங் கழிக்கும் நிலை எத்துணையோ பரிதாபத்திற் கிடமாக விருக் கிறது! அவர்கள் தங் குலமுதல்வராகிய அருணந்தி சிவா சாரிய மூர்த்திகளது சரித்திரத்தைக் கருத்துடன் கற்பார்க ளாயின் தமது நிலையைத் திருத்திக் கொள்ள முயல்வது திண்ணம். சைவ சமயத்திற்கு ஆசிரியர்களாய் விளங்கும் இவர்கள் இழிந்த நிலையிலிருப்பதனாலேயேதான் அச்சம யத்திற் பிறந்த பலருந் தங்நெறி யீதெனை உணராது புறச் சமயங்களைத் தம்மதமெனக்கொண்டு மயங்குவதற்கு ஏது வாயிற்று. அகத்தியர் முதலிய பெருமுனிவர்களும் ஸ்ரீ சுந் தரமூர்த்தி சுவாமிகள், ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்முத லிய சமயாசாரியர்களும் ஆதிசைவ மரபைச் சார்ந்தவர்க

னென்பது இக்காலத்திலுள்ள சைவக் குருக்கள் மனதில் பதியவேண்டியதொன்று.

அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் தம் நாட்டிலுள்ள சைவர்கள் பலருக்கும் குலகுருவாக இருந்து ஐந்தெழுத்து ஓதுவித்தும் தமது பெரும்போதனையால் சைவநெறி நிலை நாட்டியும் சைவசித்தாந்தத்திற்கோர் தலைவராய் விளங்கினார். அவர்பால் ஞான நூல்களைப் பாடங் கேட்டவர்கள் எண்ணில்லாதவர்கள். எவ்விடத்திற்குச் சென்றாலும் தமது மாணவர்க்கு நல்லது போதித்தற் பொருட்டும் சித்தாந்த வுண்மைகளை நிலை நாட்டுதற் பொருட்டும் சிவாகமங்களைத் தனி வண்டியில் ஏற்றிக்கொண்டு போவதாக அவர் புராணங் கூறுகின்றது. அவர் சரியை கிரியை யோகம் ஞானமென்னும் நான்கு பாதங்களையுங் கூறு மூலாகமங்களையும் உபாகமங்களையும் பாது காத்தது போல அவர்க்குப் பின் வந்தோர் பாது காவாமையால் இப்போது ஆகம இலக்கிய முழுதும் அகப்படாமலும் வெளிப்படாமலு மிருக்கின்றது. மூலாகமங்கள் இருபத்தெட்டு. உபாகமங்கள் இருநூற்றேழு. இவற்றுள் சிற்சிலவே இப்பொழுது கிடைக்கின்றன. அவற்றுள்ளும் ஒவ்வொரு பகுதியே அச்சிற்கு வந்துள்ளது. காமிகம், காரணம் முதலிய மூலாகமங்களுள் கிரியாபாத மாத்திரமே அச்சுவாகனம் ஏறப்பெற்றன. ஏனைய பகுதிகள் கிடைக்கப் பெறவில்லை. உபாகமங்களுள் பௌஷ்கரம், மிருகேந்திரம், சர்வ ஞானோத்திரம், சிவதருமோத்திரம் என்னுஞ் சில நூல்களே வெளிவந்துள்ளன. வடநூல்களை அச்சிடுவோர் தமிழில் அவற்றிற்குச் செம்மையான மொழிபெயர்ப்பில்லாமல் வெளிப்படுத்துதல் தமிழ் மக்களுக்குப் பெரும்பயன் விளைக்

காது. சிவாகம சங்கங்கள் ஆகமநூல்களைத் தேடிக் கண்டு பிடித்தெழுதி அவற்றைச் செவ்வையான மொழிபெயர்ப் போடு திருத்தமான அச்சில் வெளிப்படுத்த முயலுமானுல் தமிழ் மக்களுக்கு அது பேருதவியாகும். வைதிகப்பக்கத் திலே நூல்களைப் போற்றிப் பாதுகாப்பார்களைப் பார்த்து ஆகமிகளும் அவ்வாறு தங்கள் நூல்களைப்போற்ற ஊக்கங் கொளல் வேண்டும். வைதிகப்பக்கத்திலே வேத நான்கும் ஆயுர்வேத முதலிய உபவேதங்களும் வேதாந்த நூல்களும் வேதாங்கங்களும் உபநிடதங்களும் மிருதி பதினெட்டும் பதினெண் புராணங்களும் அவற்றைச்சார்ந்த பிறநூல்களும் பெரும்பாலும் செம்மையான அச்சில் வெளிப்பட்டு விட் டன. வேதாந்த சூத்திரமும் அதன் பாடியங்களும் பெரும் பான்மையும் மொழி பெயர்ப்போடு வெளிவந்துள்ளன. இவைகளால் தமிழ் மக்களுக்குப்பெரும்பயன் விளைவதில்லை. தமிழ்நாட்டிலுள்ள சிவாலயங்களிலுந் திருமடங்களிலும் செய்யப்படும் சடங்குகள் யாவற்றிற்கும் சைவர்கள் வீட் டிற் செய்யப்படும் எவ்வகைச் சடங்குகட்கும் ஆதாரமாகிய ஆகமங்களும் பத்ததிகளும் வெளிவராமலிருப்பது மிகவும் பரிதாபமெய்துதற்குரிய நம் நிலையைக்காட்டுகின்றது. அரு ணந்தி சிவாசாரியரைப்போல ஆகமக்கடலைக் கரைகண் டுணர்ந்த ஒருவர்கூட இக்காலத்தில்லை. இனியேனும் சைவர்களும் ஆதிசைவர்களும் ஒருங்குகூடி ஆகமங்க ளைப் பாதுகாக்க முயலவேண்டும். ஆகமங்கள் யாவற்றையு மொழிபெயர்த்து, கடவுட்டன்மை வாய்ந்த நமது செந் தமிழிலேயே சடங்குகள் யாவற்றையும் நிகழ்த்துதற் குரிய முறைகளை வகுத்துக் கொள்ளுதல் இன்றியமையாத

தொன்று. 'என்றுமுள தென்றமிழி'லே ஆகமங்கள் நிலை பெறுமாயின் அவைகள் சிதைவுண்டு பழுதுபடா. தமிழ் மக்களும் அவற்றின் நலனை யுணர்ந்து போற்றுவர்.

ஸ்ரீ அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் சரியை, கிரியை, யோகங்களில் தலைநின்றவராய்த் தமது மாணவராகிய அச்சுதகளப்பாளரின் அருள்ஞானப் புதல்வராகிய மெய்கண்டாரிடம் ஞானோபதேசம் பெறும் பான்மையுடையவரா யிருந்தார். ஆசிரியர் மெய்கண்டார் குழவிப் பருவத்தினராயிருந்தும் மாணவர் பலர்க்கும் ஞானநூல் கற்பிக்கின்றார் என்பதை ஆதி சைவ திலகர் கேள்வியுற்று வியப்புக்கொண்டு தூதர் சிலரை முன் விடுத்துத் திருவெண்ணெய் நல்லூருக்குத் தமது பரிவாரங்களோடும் விருதுகளோடும் புறப்பட்டார். அப்பதியிலுள்ள சைவ வேளாளர் யாவரும் தெருக்களெங்கும் வாழை, கமுகு, தெங்கு என்பவற்றால்தோரணம்நாட்டி வீடுதோறும் பூரணகும்பமெடுத்து மங்கலவாத்தியங்களொடு தங்கள்குருவை எதிர்கொண்டு வணங்கினார்கள். மெய்கண்ட முதல்வர் மாத்திரம் அருணந்தியார் வரவை எதிர் கொள்ளாது தமது இருக்கையில் வீற்றிருந்தனர். அதைக்கண்ட சிவாசாரியார் மெய்கண்டார்பால் நேரேசென்று அவர் தமது மாணவர்க்கு ஆணவ மலத்தினியல்பினை எடுத்துமொழிவதைக்கேட்டு அவ்வருள்ஞானச் செம்மலை நோக்கிச் செருக்குஞ் சீற்றமும் உடையவராய் ஆணவசொரூபமாவ தென்னை என்று அதிர்ச்சியோடு கேட்டவுடனே மெய்கண்டார் இன்முகத்தோடு அருணந்தியாரை நேர் நோக்கித் தமது விரலால் சுட்டிக் காட்டி அவர் தான்நின்ற நிலையில் ஆணவவடி

வத்தை விளக்கினர் என்பதைக் குறிப்பித்தருளினர். அந்தச் சிவஞானக் கதிரவனது அருளொளி நோக்கால் மலவிருள் அகலப்பெற்றாராய் உண்மையுணர்ந்து அச்சைவ நாதரது திருவடியில் தாழ்ந்திறைஞ்சி தமக்கு ஞானம் நல்கவேண்டு மென்று குறையிரந்தார். அவ்வாதி சைவமுதல்வற்கு நமது சைவ குலதிலகர் உடனே திருநீறளித்து மெய்யுணர் வருளி சிவஞான போதப்பொருள் தெரித்துத்தமது நாற்பத்தொன் பது மாணவருள் முதன் மாணவராகும் பெற்றி நல்கினர். மெய்கண்டார் தமக்குச் செய்தபெருநன்றியை அருணந்தி சிவம் தாம் சிவஞான போதத்திற்கு வழி நூலாக இயற்றிய சிவஞான சித்தியார்ப் பாயிரத்துள்ளும் இருபா விருபஃது என் னும் சித்தாந்த நூலினுள்ளும் மிகவும் அழகுபெற வியந்து துதித்துள்ளார்.

இவரியற்றிய சிவஞான சித்தியார் பதினான்கு நூல் களுள்ளும் விரிந்தநூலாய் புறச்சமய மறுக்கும் பரபக்கமும் அகச்சமயம் விளக்கும் சுபக்கமுமுடையதாய் தாயுமானர் முதலிய பெரியோர்களால் பெரிதும் போற்றப் பெற்றதா யுள்ள அருந்தமிழ்நூல். அதன் பாயிரத்துட் புகுந்த செய்யுள் பின்வருமாறு :

என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளி னாலே தாளிணை தலைமேற் சூட்டு
மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண் டானூல்
சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்க லுற்றாம்'

(சித்தியார் சுபக்கம் - செய்யுள்-உ.)

சில காலங்கழித்து, சிவாசாரிய மூர்த்திகள் தமது மாணவர் களுட் சிறந்தவராகிய மறைஞானசம்பந்த சிவாசாரியாருக்கு

ஞானோபதேசஞ் செய்தபின் பரசிவோகபாவனையால் அகண்ட பூரணமானநிலைமை எய்தினர்.

## மறைஞான சம்பந்தர் புராணம்

திருப்பெண்ணாகடத்தில் பராசரமுனிவர் பரம்பரையில் தோன்றி மறைகளனைத்தையுங் கற்றுத் தெளிந்தமையால் மறைஞான சம்பந்தரெனப் பெயர் பெற்ற அந்தணர் தலைவர் ஸ்ரீ அருணந்தி சிவாசாரியாரிடம் சென்று 'அடிசேர் ஞானம்' பெற்றுத் தில்லையில் ஞானபூசை இயற்றியிருக்கு நாளில் ஸ்ரீ உமாபதி சிவாசாரியாரது பக்குவங்கண்டு அவர்க்குச் சித்தாந்த ஞான முணர்த்தியபின் அத்தலத்திற்கு வடமேற்றிசையிலுள்ள திருக்களாஞ் சேரியில் வீற்றிருந்து சிவ பெருமானோடு இரண்டறக் கலந்தனர். ஞானநூல் போதித்தலேயன்றித் தாமாக அத்தகைய நூலொன்றும் இவரியற்றியதாகத் தெரியவில்லை.

## உமாபதி சிவாசாரியர் புராணம்

தில்லைப்பதியிலே வாழ்கின்ற திருவுடையந்தணர் மரபினில் உமாபதி சிவாசாரியர் பிறந்து வளர்ந்து, பொன்னம்பலவர்க்குப் பூசனைபுரியும் பேறுபெற்றுத் திகழ்ந்தனர். தில்லை மூவாயிரவருள் சிறப்பாக இவர் ஒருவரே சித்தாந்த ஞானத்தை உலகர்க்கு விளக்கினோராவர். தில்லையானது நாவலந்தீவிற்குச் சுழுமுனை நாடிபோன்றது. அதன் பிங்கல நாடி இமய நோக்கிச் செல்லும். இடைநாடி இலங்கைக்கு நேரே போகும். சுழுமுனைநாடியே நாடிகள் மூன்றினுஞ் சிறந்து ஐந்தெழுத்தும் நிலைபெறும் ஆதாரங்களை ஒருமைப்

படுத்தி நிற்கும் சிறப்புவாய்ந்தது. ஐந்தொழிலு மியற்று வதற்கு ஏதுவாகிய திருநடனம் செய்யப்படும் ஒளி நிலைய மாகத் தில்லை விளங்குவதால் அதனை எல்லாத் தலங்களினு முயர்ந்ததாகச் சைவநூல்கள் கூறும். இறைவன் தனது சத்தியையே நிலைக்களமாகக்கொண்டு ஐந்தொழில் நடாத்து தலாலே தில்லையானது சிவபெருமான் நடஞ்செய்யும் ஞானா காசமாகத் துதிக்கப்படும். இத்தில்லையின்கண் வியாக்கிர பாதருக்கும் பதஞ்சலி முனிவருக்கும் சிவபெருமான் திரு நடனங் காட்டியகாலத்தே அத்திரு நடனங் காணவிரும்பி மூவாயிரம் தாபதர்கள் அம்முனிவர்களைச் சூழ்ந்திருந்தார் கள். அவர்களும் திருநடனங்கண்டு தில்லையில் தங்கினார்கள். இங்ஙனம் பெருமுனிவர்களைச் சூழ்ந்து தாபதர்கள் பலர் வீட்டு நெறி நின்றொழுகுதல் தமிழ் நாட்டு வழக்கமென் பது "அறுவகைப்பட்ட" என்னு முதற்குறிப்பையுடைய தொல்காப்பியச் சூத்திரத்தில்

> "மறுவில் செய்கை மூவகைக் காலமு
> நெறியி னாற்றிய வறிவன் றேயமும்
> நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்"

என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறிய உரையால் விளங்கும். "நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்" என்ப தற்கு "அவ்வறிவர் கூறிய ஆகமத்தின் வழி நின்று வீடு பெற முயல்வார்க்கு உரியவாகிய எண்வகை மார்க்கத்துள் தவம் புரியும் கூறும்" என்று பொருள் கூறப்பட்டது. திரு நடனங் கண்ட பெரியோரைக் கூறுமிடத்துச் சிவ பெருமானையே முழுமுதற் கடவுளாக வழிபடும் வைதிகரை யும் தாபதராகிய மூவாயிரவரையும் வேறு பிரித்துக் கூறி

ஞர் கோயிற் புராண முடையார். அது நடராஜச் சருக்கம் 24-ம் பாட்டில்

"நாரணன் வேதா வாசவன் வானோர் நவைசேரா
வாரண மேலோர் தாபதர் மூவா யிரவோர்நற்
சாரணர் தாவா நாரதர் பூதா திகளாசைக்
காரண ரேனோ ராடலை நேரே கண்டார்கள்"

என்ற அடிகளால் விளங்கும். இதனால் தாபதராகிய மூவாயிரவரும் ஆகமநெறி நின்ற தமிழந்தண ரென்பது தெளியப்படும். திருநடனங் கண்டதின் பயனாக இவர்கள் சிவசாரூபமுடையவராய்க் கணநாதரானார்கள் என்று புராணங் கூறும். திருஞான சம்பந்தப் பெருமானுக்கு அவர்கள் சிவகண நாதராய்த் தோன்றினரென்பது பெரியபுராணத்திற் கூறப்பட்டது. அத்தன்மையைச் சம்பந்தப் பெருமான் திருநீலகண்ட யாழ்ப்பாணருக்குங் காட்டினார்.

"நீலத்தார் கரியமிடற்றார் நல்ல நெற்றி மேலுற்ற கண்ணினார்பற்று
சூலத்தார் சுடலைப்பொடி நீறணிவார் சடையார் [தொழக்
சீலத்தார் தொழுதேத்து சிற்றம்பலஞ் சேர்தலாற் கழற்சேவடிகை
கோலத்தா யருளாயுன காரணங் கூறுதுமே"

(கோயில்)

என்ற திருப்பாட்டினால் அவரது வடிவங் கூறப்பட்டது காண்க. சிவவடிவம் பெற்றமையால் அவருள் தாமுமொருவராகக் கூத்தப் பெருமான் இரணியவன்மனென்னும் அரசனுக்குத் தம்மைக் காட்டினதாக அறிகின்றோம். தில்லைத் திருநடனங்கண்டு அவண்வதிந்த மூவாயிரவரும் வடநாட்டில் அயன் செய்த வேள்

விக்கு அத்தேவன் அழைக்கச்சென்று மீண்டார்க ளென்று கோயிற் புராணம் கூறுகின்றது. அதற்குப் பின்பு அவர்கள் முத்தீ யோம்புதலைக் கைக்கொண்டு சிவநெறிச் சார்பாகிய வைதிக நெறியினையும் பொது நன்மைக்காகப் போற்றிவந்தார்களென்று அறிகிறோம். இவ்வாறு சைவ நெறியுங் குற்றமற்ற வேள்விநெறியுங் கைக்கொண்டமை யால் அவர்களைச் சேக்கிழார் சுவாமிகள் முதலியோர் மிகுதி யாகப் புகழ்ந்துள்ளார்கள். வீடுபேற்றிற் கேதுவாகிய திருநீற்றில் மிக்க அன்புடையவராய் உலகின் துன்பம் நீங்குவதற்கு மழைபெய்யும் பொருட்டுக் கேடிலா வேள்வி செய் யந்தணராய் அவர் விளங்கினமையால்

> "மறுவிலா மரபின் வந்து மாறிலா வொழுக்கம் பூண்டா
> ரறுதொழி லாட்சி யாலே யருங்கலி நீக்கி யுள்ளா
> ருறுவது நீற்றின் செல்வ மெனக்கொள்ளு முள்ள மிக்கார்
> பெறுவது சிவன்பா லன்பாம் பேறெனப் பெருகி வாழ்வார்"

(பெரிய புராணம்-தில்லைவா ழந்தணர் சருக்கம்.)

என்று துதிக்கப் பெற்றனர்.

இத்தகைய தில்லைவா ழந்தணர்கள் பலருந் தற்காலத்தே தம்பெருமை யுணராது தமது உண்மை நெறி சிவாகமநெறி யென்று முணராது சிவபெருமானை நோக்கிச் செய்யும் ஊன்பயிலா வேள்வி இயற்றும் உயர்மறை நெறியையும் தழுவி நில்லாது சுமார்த்த மதத்தினரது கொள்கையைத் தழுவிக்கொள்ள முயன்று வருவது மிகவும் இரங்கத் தக்க செய்கையாம். இவர்கள் தங் குலமுதல்வராகிய உமாபதி சிவத்தின் உயர்திரு வாக்கினைக் கடைப்பிடித்து ஒழுகுவா

ராயின் சைவப் பெருமையை உலகில் நாட்டினவ ராவர். இது நிற்க.

ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் சிவாகமங்களெல்லாம் இனிது கற்றுத் தவநெறிஒழுகி இறைவரது ஒப்பற்ற திருவருள் பதிதற்குரிய பருவம் வாய்ந்திருந்தார். அவர் ஒருநாள் கூத்தப் பெருமானுக்கு வழிபாடு முடித்துத் தமது வீட்டிற்கு வழக்கமாக அமைந்த விருதுகளோடு சிவிகைமேற் செல்வாராயினர். அங்ஙனஞ் செல்லுங்கால் வீதியிலே ஒரு திண்ணையில் மறைஞான சம்பந்த சிவாசாரியர் தமது மாணவரோடு வீற்றிருந்தனர். அவர் தமது சீடரை நோக்கி "பட்ட கட்டையிற் பகல் குருடு ஏகுதல் பாரீர்" என்று சொன்னார். இச்சொற்களைக் கேட்ட உமாபதி சிவாசாரியர் சிவிகையினின்று விரைவில் இழிந்து மறைஞான சம்பந்தர் திருவடியைப் பேரன்பொடு தொழுது அவர் சொன்ன வாக்கியத்திற்குப் பொருள் கேட்டார். அவர் அதன் பொருள் தெரித்த பின்பு அவர் திருவடித்தொண்டு பூண்டு உமாபதி சிவம் ஒழுகலாயினர். (பட்டகட்டை என்றது சிவிகை.) பகலினும் உபசார விருதாக விளக்கெடுத்துச் சென்றதன் காரணமாகப் பகற்குருடு என்ற வாக்கியமெழுந்தது. அதனால் நிலையாமை உணர்த்தியவாறும். ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் சிவஞானப் பேறொன்றனையே விரும்பிச் சாதி குலம் பிறப்பென்னும் தடஞ்சுழியைக் கடந்து நின்றார். ஒருநாள் சீடருடைய பக்குவ மறிதற் பொருட்டு மறைஞான சம்பந்தர் கைக்கோளர் தெருவிற் சென்று பாவிற் செலுத்திய கூழின் மிச்சத்தை விடாய் தணித்தற் பொருட்டு வாங்கி உண்டார். அப்போது அவர் புறங்கை

யில் ஒழுகிய மிச்சத்தை உமாபதிசிவம் ஏந்திப் பருகினர். உடனே மறைஞான சம்பந்தர் அவருக்கு ஞானோபதேசஞ் செய்து சிவஞானபோதப் பொருள் உரைத்தனர். இவர் இங்ஙனம் மரபு கடந்து ஞானம் பெற்றதின் சிறப்பை யுணராது ஏனைத் தில்லைவாழந்தணர்கள் இவரைக் குலமுறை பிறழ்ந்தவராகக் கொண்டு நடேசப் பெருமானுக்குப் பூசை செய்யத் தகுதியற்றவ ரென்றிகழ்ந்தனர். ஆதலினால் அவர் சிதம்பரத்திற்குக் கீழ்த் திசையிலுள்ள கொற்றவன் குடி யென்னும் ஊருக்குச்சென்று அங்கே மடமொன்று அமைத்து அதில் தமதடியார் சூழச் சிவபெருமானை விதிப் படி வழிபட்டிருந்தார்.

ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் பொன்னம்பலவருக்குப் பூசை செய்தற்குரிய நாள் வரவும் சிற்சபைக்கு அவரைச் செல்லவொட்டாமல் ஏனையோர் தடுத்துவிட்டபடியால் அவர் தம்முடைய மடமெய்தித் தளர்வுற்றிருந்தார். ஏனைத் தில்லைவாழந்தணர்கள் திருமன்றிற் சென்று அழகிய சிற்றம் பலமுடையாரது பேடகத்தைத் திறந்து பார்க்கவும் அங்கே திருவடிவத்தைக் காணாமையால் அச்சமுற்றுப் பெருங் கவலை யுற்றனர். அப்போது யாவருங் கேட்க வானில் ஒலித்த மொழியாவது: "நம்மைப் பூசையாற்றுந் தகுதி யுடையவன் உமாபதியாதலால் அவன்பா லமர்ந்தோம்" என்பது. இதைக்கேட்டவுடனே யாவரும் ஒருங்குகூடித் தாயிடஞ்செல்லும் கன்றுகள்போல உமாபதிசிவத்தின் திரு மடத்திற்கு ஓடிச்சென்று அவரிடம் தங்கள் குற்றத்தை மன்னிக்க வேண்டுமென்றும் அவர் தில்லைப்பெருமானைப் பூசைசெய்தல் வேண்டுமென்றும் குறையிரந்து நின்றார்கள்.

அவர் அவ்வாறே அம்பலஞ்சென்று கடவுட் பூசைமுடித்துத் தன் திருமடத்திற்கு மீண்டனர்.

அவர் தமது சீடர் பலருள்ளும் புலையர் குலத்தினுதித்த பெற்றான் சாம்பான் என்பார்க்கு முத்திகொடுத்த வரலாறு மிகவும் அதிசயமானது. பெற்றான் சாம்பான் என்பவர் முற் பிறவியிலேயே பெருந்தவம் ஆற்றியும் சிறிது வழுவினால் தாழ்குலத் துதித்தனர். அவர் நடராஜப் பெருமானிடம் அன்புடையவராய்த் திருக்கோயிலுக்கு விறகு வெட்டிக்கொண்டு வந்து சேர்ப்பதையே தமது பணிவிடையாகக்கொண்டார். அவருக்குக் கனவில் நடேசப்பெருமான் தோன்றித் தன்பால் பேரன்புடைய உமாபதியாருக்குப் பணிவிடை செய்யும்படி கட்டளையிட்டார். அவர் அவ்வாறே சென்று உமாபதி சிவாசாரிய சுவாமிகளது திருமடத்திற்கு விறகு கொடுத்துவந்தார். ஒருநாள் பெருமழையினாலே அவர் விறகுகொண்டுவரத் தாழ்த்தமையால் மடத்தில் அமுது சமைக்கக் காலந்தாழ்த்தது. அப்போது அதற்குக் காரணமென்னவென்று சுவாமிகள் தமது மாணவரை வினவச் சாம்பனாரது விறகுவாராமையால் தடையேற்பட்டது என்று அவர்கள் விடையளித்தார்கள். மறுநாள் அவர் வந்தவுடன் தனக்குத் தெரிவிக்க வேண்டுமென்று உமாபதி சிவம் அவர்களுக்குக் கட்டளையிட்டார். மறுநாள் சாம்பனார் மடத்திற்கு விறகுகொண்டு வருவதற்குமுன் கடவுள் ஒருபெரியவர் வடிவம்போல் அவருக்குத்தோன்றி ஒரு சீட்டுக்கொடுத்து அதை உமாபதியாரிடம் அளிக்கும்படி பணித்தனர். மறுநாள் திருமடத்திற்கு இரட்டைப்பங்கு விறகு கொண்டுவந்தவுடன் அங்குள்ள மாணவர்கள் உமாபதி

சிவத்திற்கு அவர் வரவை அறிவித்தார்கள். அப்போது உமாபதிசிவம் அவர் யாரென்று வினவ, அவர் பெரியவர் கொடுத்த சீட்டை அவரிடம் கொடுத்தார். அந்தத் திரு முகத்தைப்பார்த்துக் கண்களில் ஒற்றிக்கொண்டு உடம் பெங்கும் புளகங்கொண்டு கூத்தப்பெருமானது திருவருளை வியந்தனர். அந்தச்சீட்டில் எழுதியிருந்த பாட்டாவது:

"அடியாற் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியாற் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான் சாம்பனுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை."

இத்திருப்பாட்டின் கருத்தின்படி பெற்றான் சாம்பனுருக்கு ஞானதீக்கை செய்யத் தொடங்கவும் அப்போதே அவர் வீடெய்துதற்குரிய பக்குவமுடையவராக விருந்தமையால் அதற்குத்தக்க முறையாக சுவாமிகள் அருள்செய்த வுடன் அவர் முத்தியடைந்தார். இதன் உண்மையுணராத சாம்பனாது சுற்றத்தாரும் மனைவியும் மனங்கலங்கி அரச னிடஞ்சென்று அவரைச் சுவாமிகள் தீயால் எரித்துவிட்ட தாகக் குறைகூறித் துயருழந்தார். அப்போது அரசன் சுவாமிகள்பால் சென்று அதைப்பற்றி உசாவியபொழுது சுவாமிகள் தீக்கையின் மேன்மையை யெடுத்து விளக்கினார் கள். அரசன் அங்ஙனமாயின் மற்றொரு தீக்கை அவ்வாறு செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். அப் போது தமது அடியார் குழாத்தைநோக்கி அவருள் சத்திநி பாதம் பெற்றவ ரிலராகவே சூழ்ந்து பார்த்துச் சிவபெரு மானது திருமஞ்சன நீராலே வளர்ந்ததாய்க் கோமுகையின் பக்கத்தேயிருந்த முள்ளிச்செடியைத் தக்கது என்று கண்

டார். தமது அருட்பார்வையால் அம்முள்ளிச்செடியைப் பார்த்தவுடன் அது ஒளிமயமாகி ஒரு பிழம்பாக வானில் எழுந்து மறைந்து சிவனோடு கலந்தது. அப்போது அதனைக்கண்ணுற்ற அரசன் எல்லையில்லாத வியப்பும் மகிழ்ச்சியுமடைந்து சுவாமிகளுடைய திருவடிகளைவணங்கி அவருக்குப் பொன்னுடை மாலை முதலியன கொடுத்துத் தன் பிழை பொறுக்கும்படி வேண்டிக்கொண்டு தன் அரண் மனைக்கேகினன்.

பின்னர் ஒருநாள் சிதம்பரத்தில் திருவிழாவிற்குக் கொடியேற்ற அங்குள்ள அந்தணர்கள் முயன்றபோது கொடியெழாமை கண்டு அவர்கள் கவலையுற்றனர். அப் பொழுது விசும்பில் 'உமாபதி வந்தக்கால் கொடியேறும்' என்ற திருவாக்கு எழுந்தது. உடனே சுவாமிகளிடம் எல்லோரும் போய் வேண்டினர். அவர்களும் அப்படியே விரைவில் தில்லைக்குச் சென்று கொடிக்கவியென்னும் அழ கிய சிறுநூலிலுள்ள முதற்பாட்டைப் பாடியவுடன் கொடி தானாக ஏறிற்று.

சுவாமிகள் சிவப்பிரகாசமென்னும் சிவஞானபோதச் சார்புநூலொன்றும், உண்மைநெறி விளக்கம், நெஞ்சுவிடு தூது, வினாவெண்பா, திருவருட்பயன், சங்கற்ப நிராகரணம், போற்றிப்பஃறொடை என்னும் பிற ஏழு சித்தாந்தநூல்களும் இயற்றியருளினார்கள். கோயிற்புராணம், சேக்கிழார்புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருப்பதிகக்கோவை முதலி யனவும் இவரால் இயற்றப்பட்டன என்ப. வடமொழியில் பௌட்கரம் என்னும் உபாகமத்திற்கு இவர் இயற்றிய விரி வுரை ஒன்றுண்டு. மாணவர்க்கு ஞானநூல் கற்பித்தலும்

பதிநூல் இயற்றுதலும் தக்கவருக்கு முத்திப்பேறு உதவுத லும் ஆகிய பேருபகாரங்களைச் செய்தலையே தமது கட மையாகக் கொண்டிருந்து பின் சமாதி நிலையில் நின்று சித் திரையத்த நாளில் சிவபெருமானோடு இரண்டறக் கலந்த னர்.

"சத்திய ஞானா னந்த தத்துவ வநுப வத்தாற்
பத்திசெய் யடியார் போற்றப் பரனடிக் கமல மெய்தி
நித்திய சுபாவ முத்த நிராகா ரமூர்த்தி யான
சுத்தவத் துவிதா னந்த சொரூபமே யாகி நின்றார்."
(உமாபதி சிவாசாரியர் புராணம்)

## மெய்கண்ட சாத்திரம்

"உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று."

ஸ்ரீமெய்கண்ட தேவநாயனார் சிவஞான போதம் இயற் றுவதற்கு முன்னேயே திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் என்கிற இரண்டு சைவசித்தாந்த நூல்கள் இயற்றப்பட்டன. திருவுந்தியாரென்பது திருவியலூர் - உய்யவந்த தேவநாயனா ரால் அருளிச் செய்யப்பட்டது. இது வீடு அடைவதற் குறிய நெறியையும் அடைந்தோர் தன்மையையும் ஆசிரி யரது சுவானுபவத்தையும் சிறு கலித்தாழிசையால் விளக்கு கின்ற அருமையாகிய சிறப்பு நூல். திருக்களிற்றுப்படியா ரென்பது திருவுந்தியாரியற்றிய ஆசிரியரது மாணாக்கரின் மாணாக்கராகிய திருக்கடவூர் - உய்யவந்த தேவநாயனாரால் அருளிச் செய்யப்பட்டது. இது திருவுந்தியாரின் கருத்தை

இனிது தெள்ளிதின் விளக்கும் சிறப்புநூல். இது நூறு வெண்பாக்களையுடையது. இது பொன்னம்பலத்தி லுள்ள திருக்களிற்றுப்படியிலே வைக்கப்பட்டபொழுது அப்படியிலேயுள்ள களிற்றின் கையானது நிமிர்ந்து அதனை வாங்கி நடேசப்பெருமான் திருவடியில் கொடுத்தமையால் **திருக்களிற்றுப்படியார்** என்று அதற்குக் காரணப் பெயர் ஏற்பட்டது. இந்நூலின்கண்ணே அறுபத்துமூன்று நாயன் மார் அற்புத நிகழ்ச்சிக்குக் காரணமான **வல்வினை, மேல் வினையைப்பற்றிய** விவரமும் **திருவள்ளுவ நாயனாரது** குறள் கள் சிலவற்றை மேற்கோளாகக்கொண்டு அவற்றின் பொ ருளை விளக்கிய பகுதியும் பிற அரிய சித்தாந்த முடிபுகளும் சிறப்பாக உற்றுநோக்கத்தக்கன. அவையாவன:—

* சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னென்றமையாற்
சார்புணர்த ருனே தியானமுமாஞ்—சார்பு
கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று. (செ. ௩௪)

†வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்
வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது—வேண்டினது
வேண்டாமை வேண்டவரு மென்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால் (செ. ௪0)

அன்பின் சிறப்பைப்பற்றிக் கூறும் செய்யுள் வரு மாறு:—

---

* குறள்-மெய்யுணர்தல். ௧.

† ,, அவாவறுத்தல். ௨.

3

*'அன்பேயென் னன்பேயென் றன்பா லழுதரற்றி*
*யன்பேயன் பாக வறிவழியு—மன்பன்றித்*
*தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்வதெல்லாஞ்*
*சாற்றும் பழமன்றே தான்.'* (செ - ௫௫)

இவ்விரு நூலும் வடநூன் முறையைப் பின்பற்றுது தமிழ் முறைக்கேற்ப எழுதப்பட்டுள்ளன. முப்பொருளின் உண்மையையும் இலக்கணத்தையும் கூறும் பொதுப்பகுதி இவைகளுள் குறிப்பாக அறியக் கிடப்பதே யன்றித் தெளிவாகக் கூறப்படவில்லை.

ஸ்ரீ மெய்கண்டாரது சிவஞான போதம் முப்பொருளின் உண்மையையும் இலக்கணத்தையுங் கூறும் பொதுப் பகுதியும், வீட்டிற்குரிய ஞான நெறியினையும் அந்நெறி நின்றூர் பெறும் பயனையும் கூறுஞ் சிறப்புப் பகுதியையு முடைய முழுமுதல் நூலாகும். தமிழ் மொழிக்குப் பன்னிரண்டு உயிரெழுத்துக்கள் போல இந்நூல் பன்னிரண்டு சூத்திரங்களையுடையது. ஒவ்வொரு சூத்திரத்திற்கும் கருத்துரை கூறப்பட்டிருப்பதுடன் அச்சூத்திரத்தின் பகுதிகளைக் காரண வுதாரணங்களோடு கூடிய அதிகரணங்களாக அமைத்து நூல் செய்யப்பட்டுளது. உதாரணங்களாகக்கூறப் பட்ட செய்யுட்கள் எண்பத்தொரு வெண்பாக்கள். அவை யடக்கம் ஒரு வெண்பாவாலும் காப்பு ஒரு வஞ்சித்துறையாலும் கூறப்பட்டுள்ளன. முதன்மூன்று சூத்திரமும் பிரமாண வியல்; அடுத்த மூன்று சூத்திரமும் இலக்கண வியல்; அடுத்த மூன்று சூத்திரமும் சாதனவியல்; இறுதி மூன்றும் பயனியல் எனப்படும். முதற் சூத்திரத்துள் கடவுள் உண்

மையும் அவர் எல்லாவற்றையும் ஒடுக்கி மீளத் தோற்றுவிக் கும் முதற்பெருமானாகிய சிவபெருமானென்பதும், இரண் டாவது சூத்திரத்துள் கடவுள் உயிர்களுடன் அத்துவிதமாக நின்று அவைகட்கு வினைப்பயனை ஊட்டுமுறைமையும் உயிர் கட்கு மலபந்தத்தால் பிறப்பிறப்பு நிகழு முறையும், மூன் றாஞ் சூத்திரத்தினால் உயிர் உண்மைக்குக் காரணமும் விளக்கப்பட்டன. உலகந்தோன்றி ஒடுங்குவதற்குக் காரண மாகிய இருவகை மாயை உண்மையும் ஆணவமல உண் மையும் முதற் சூத்திரத்துள்ளும் இருவினையுண்மையை இரண்டாஞ் சூத்திரத்துள்ளும் கூறப்பட்டன.

இனி, நான்காஞ் சூத்திரத்தே உயிரினது இலக்கணம் இயம்பப் பெற்றது. அது மலமறைப்பால் அறிவு விளங்கப் பெறாதபொழுது கேவல அவத்தையில் நிற்பதாயும், தத்து வங்களோடு கூடியவழி சகலாவத்தையில் நிற்பதாயும், மல மற்றவிடத்து சுத்தாவத்தை யுடையதாயும் கூறப்பட்டுள் ளது. ஒவ்வொன்றும் கனவு,நனவு, துயில், துரியம், துரியா தீதம் என்று ஐந்து நிலைகளை யுடையது. ஐந்தாஞ் சூத் திரத்துள் தத்துவங்களெல்லாம் இவ்வைந்தவத்தைக்குள் ளாகும் உயிர்க்குத் தொழில் செய்வதற்கண் கருவியாகி நிற் குந் தன்மை கூறுமுகத்தான் பாசவியல்பு கூறப்பட்டது. இச்சூத்திரத்தே உயிர்க்குயிராய் நிற்பவன் கடவுளென் பதை யுணர்த்தி அடுத்த சூத்திரத்தே அக்கடவுளின் இலக் கணம் கூறப்பட்டது. ஆறாஞ்சூத்திரத்தே தோன்றிநின் றழியு முலகம் சுட்டி யறியப்படுவதாகலின் அது அசத்து என்றும் அங்ஙனஞ் சுட்டி யறியப்படாது சுட்டிறந்து உணரப்படும் பரம்பொருள் சத்து என்றும் ஆசிரியர் மிக

நயம்பெற விளக்கியுள்ளார். முதல் ஆறு சூத்திரமும் முப்பொருள்களது பொதுவியல்பு உணர்த்துதலால் பொது வெனப்படும். பின் ஆறு சூத்திரமும் அவற்றின் சிறப்புக் கூறுதலால் உண்மை யெனப்படும்.

ஏழாஞ்சூத்திரத்துள் அசத்தாகிய உலகத்தையும் சத்தாகிய பரம்பொருளையும் அறியவல்லதாய் அசத்தைவிட்டுச் சத்தைப் பற்றக்கூடியது உயிர் என்று உணர்த்து முகத்தான் சாதனத்திற்குரிய அதிகாரியின் தன்மையை ஆசிரியர் குறித்தனர்.

உயிர் ஐம்புலன் வழிச்செல்லுதலால் தன்னையும் தலைவனையும் அறியாது நிற்பதாகலின் அவ் வைம்பொறி வழியிற் பற்றுவிட்டுத் தவநிலையில் நின்றால் பரம்பொருள் குருவாய் வந்து நல்லறிவு அளிக்க அது அவன் கழல் எய்தும் என்று விளக்குமுகத்தான் இருவகைப் பற்றும் அறுதற் கேதுவாகிய தவம் ஞானத்திற்குச் சாதனமாமென்பதும் அதனால் பெறுஞ் சிவஞானம் வீட்டிற்குச் சிறந்த சாதனமாமென்பதும் அத்தகைய ஞானம் சிவபெருமானே ஆசிரியனாய் வந்து அருளற்பாலதென்பதும் எட்டாஞ் சூத்திரத்துள் வலியுறுத்தப்பட்டது.

சிவ வடிவத்தைக்கண்ட மாத்திரையே தன்னைக் காண்கின்ற ஆன்மா அம்முதல்வனை அவனளித்த ஞானக்கண்கொண்டு காணுமிடத்து ஆன்மசுத்தி எய்தும். அவ்வான்மசுத்தி நிலைபெறுதற்பொருட்டு விதிப்படி திருவைந்தெழுத்தைக் ,கணித்தல் வேண்டுமென்பது ஒன்பதாஞ் சூத்திரத்துக் கூறப்பட்டது. இனி, பத்தாவது சூத்திரத்தே மல நீக்கமும், பதினொன்றாவதில் சிவப்பேறும் கூறப்பட்டன.

மலநீக்கத்திற்கு முற்படுவது 'ஏகனாகி இறைபணி நிற்றல்' ஆதலின் அது பத்தாஞ் சூத்திரத்துள் விதந்தோதப்பட்டது. அயரா அன்பினை யுடையோர்க்கு உணர்வில் நேர் வருஞ் சிவபோகமானது ஐம்பொறி யளவினும் வருதலால் ஐம்பொறிக்கு அது புலனாகப்பெறும். அன்பர் கூட்டுறவும் அவரது திருவேடத்தையும் திருக்கோயிலையும் முதல்வன் எனக்காணும் வழிபாடும் சிவப்பேற்றினை நிலை நிறுத்துவான் நிகழுமென்பது பன்னிரண்டாஞ் சூத்திரத்திற் கூறப்பட்டது. எட்டாஞ் சூத்திரத்தினாலே கேட்டலும், ஒன்பதாஞ் சூத்திரத்தினாலே சிந்தித்தலும், பத்தாஞ் சூத்திரத்தினாலே தெளிதலும், பதினொன்றாஞ் சூத்திரத்தினாலே நிட்டை கூடுதலுந் தெரிக்கப்பட்டன.

இனி, சிவஞான சித்தியார் என்னும் நூலானது சிவஞான போதத்தின் வழி நூலாய் புறச்சமயங்களின் நிலையினைத்தெனை அளவிடும் **பரபக்கமும்** சித்தாந்த சமயத்தின் மெய்ப்பொருள் தெரிக்கும் **சுபக்கமும்** ஆகிய இரண்டு பெரும்பகுதியை யுடையது. சிவஞான போதத்துள் அவையடக்கங்கூறிய ஒரு திருப்பாட்டினையே பரபக்கம் அடிப்படையாகக் கொண்டுள்ளது. சுபக்கம், சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரங்களின் பொருளைப் பன்னிரண்டு அதிகாரங்களில் விரித்துவிளக்கும் நூலாகும். பரபக்கத்துள் புறப்புறச் சமயங்களையும் புறச்சமயங்களையுமே ஆசிரியர் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டார். அவைகள் யாவும் சிவாகமப் பிரமாணத்தை ஒப்புக்கொள்ளாமையால் புறச்சமயங்களெனப்பட்டன. வைதிகச்சார்பில்லாத சமயங்களை புறப்புறமெனவும் வைதிகச்சார்புடைய சமயங்களைப் புறமெனவும்

வகுத்துக்கூறினர். புறப்புறச் சமயிகளுள் நாற்பூதங்களை மாத்திரம் உள்பொருளெனக் கொள்ளும் உலோகாயதரும்; சௌத்திராந்திகர், யோகாசாரர், மாத்தியமிகர், வைபாடிகர் ஆகிய நால்வகைப் பௌத்தரும்; நிகண்டவாதி, ஆசீவகன் என்ற இருவகைச் சமணரும் அடங்குவர். புறச்சமயத் துள் பாட்டாசாரியன் மதம், பிரபாகரன் மதம் என்ற இரு வகை மீமாஞ்சக மதமும்; சத்தப் பிரமவாதம், கிரீடப் பிரமவாதம், பாற்கரியவாதம், மாயாவாதம் ஆகிய நால்வகை ஏகான்மவாதமும்; சாங்கிய மதமும், பாஞ்சராத்திர மத மும் அடங்கும். தருக்க மதம், நியாயமதம், யோகமதம் என்றமூன்றும் புறச்சமயத்துள் ஆசிரியர் சிவஞான சுவா மிகளாலே வைத்து ஓதப்படினும் அவை ஒரு முதல்வனை யுடைமையால் சிறப்பாக எடுத்துக் கண்டிக்கப்படவில்லை. சிவஞான போதப்பொருளே சுபக்கத்தில் விரித்தோதப் படுதலின் அதுபற்றிய விபரம் இவண்கூறாது விடுக்கின் றும். ஸ்ரீதாயுமான சுவாமிகள் "பாதி விருத்தத்தால் இப் பார்விருத்த மாகஉண்மை, சாதித்தார் பொன்னடியைச் சா ரும்நாள் எந்நாளோ?" என்று இந்நூலாசிரியரை வணங் கினமையால் இந்நூற் பெருமை அளவிடப்படாதது.

> 'பாரிலுள்ள நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
> ஓர்விருத்தப் பாதி போதும்'

என்றதுங் காண்க.

சிவஞானசித்தியார் எட்டாஞ் சூத்திரத்தில் முப்பதா வது பாட்டில் முதலிரண்டடிகளிற் கூறிய வுண்மையே இங்கு சுட்டப்பட்டது.

“அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே
யறிவுதனை யருளினா னறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்......”

இப்பகுதியுள் உலகச்சார்பு தொலைதற் கேதுவாகிய பாச நீக்கமும் திருவருளினாலே மெய்ப்பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளியு நிலையும் விளக்கப்பட்டன. சுபக்கத்துள்ளடங்கிய திருவிருத்தங்கள் ௩௨அ, பரபக்கத் துள்ளவை ௩௱௧.

இருபா விருபஃது என்னும் நூல் வெண்பா, ஆசிரியப்பா என்னு மிருவகைப் பாக்களால் யாக்கப்பட்டு ஒவ்வொன்றிலும் பத்துப் பாக்கள் கொண்ட ஓர் அழகிய நூல். இது மெய்கண்ட தேவரைத் துதிக்கு முகத்தால் சித்தாந்த வுண்மைகளையும் அருணந்தி சிவாசாரியரது சிவா நுபவத்தையும் தெளிவு படுத்துவதாகும்.

உண்மை விளக்கமென்பது மெய்கண்ட தேவரது மற்றொரு மாணவராகிய மனவாசகங் கடந்தார் என்பவராலியற்றப்பெற்றது. அது ஐம்பத்துமூன்று வெண்பாக்களை யுடையது. அது முப்பத்தாறு தத்துவங்களையும் ஆணவம், இருவினை என்பவற்றினியல்பையும் ஆன்மாவி னியல்பையும், கடவுளி னியல்பையும், ஐந்தெழுத்தின் உண்மையையும் தமது ஆசிரியரிடத்துத் தமக்கு விளக்கும்படி வினவ ஆசிரியர் விடையளித்ததுபோ லியற்றப்பெற்ற நூலாகும்.

சைவசித்தாந்த நூல் பதினான்கனுள், எட்டு உமாபதி சிவாசாரிய சுவாமிகளால் இயற்றப்பெற்றன. அவ்வெட்டி

னுள்ளும் சிவப்பிரகாசமானது சிவஞான போதத்திற் குச்சார்பு நூலாகவுள்ளது. அதன் பாயிரத்துள் தனக்கு முன்னுள்ள திருக்கைலாய பரம்பரை ஆசிரியர்கள் இன்னு ரென்பதும், சைவநூல்களி னியல்பும், தீக்கைவகைகளும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் ஓதப்பெற்றுள்ளன. அதன் அவையடக்கத்தே நூல்களை ஆராய்ந்து உண்மை தெரியு முறையை ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார். பழமைபற்றி யொன்றை நன்றென்றும் அஃதின்மைபற்றியே மற்றொன் றைத் தீதென்றும் கொள்ளுதல் தவறென்று குறித்தமை உற்று நோக்கத்தக்கது.

"தொன்மைய வாமெனும் எவையும் நன்றாகா
இன்றுதோன்றிய நூலெனு மெவையுந் தீதாகா."

இந்நூலானது பொதுவென்றுஞ் சிறப்பென்றும் இரு பகுதியுடையதாய் நூறு விருத்தங்களாலாயது. சிவஞான போதத்திற்குச் சார்பு நூலாதலின் இந்நூலினைப் பன்னி ரண்டு சூத்திரப் பகுதிகளாகவும் பிரித்துக் கூறுவது மரபு. பாயிரம் பன்னிரண்டு பாக்களாலாயது. பாயிரத்திற்குப்பின் வந்த முதற் சூத்திரமாகிய ஆறு பாட்டினுள் பதியிலக்கணங் கூறப்பட்டது. அதற்கடுத்த முப்பத்திரண்டுபாக்கள் இரண் டாஞ் சூத்திரமாக அமைகின்றன. அதனுள் பசு விலக்கண மும், பாச விலக்கணமும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. பசு வின் பொது விலக்கணம் ஒருபாட்டாலும், எஞ்சிய பாட்டுக் களினாலே பாச விலக்கணமும் கூறப்பட்டது. ஆக முதல் ஐம்பது பாட்டும் பொது வியலாகும். பின் ஒரு பாட்டால் உண்மை அதிகாரத்திற் கூறப்படுவனவற்றைத் தொகுத்துச் சுட்டியுள்ளார். பின் எட்டுப்பாட்டுக்களும் மூன்றாஞ் சூத்

திரமெனப்படும். அதனுள் உயிரின் இயல்பை இலக்கணம் தெளிவாக நாட்டப்பட்டுள்ளன. அடுத்த மூன்று பாட்டுக்களும் நான்காஞ் சூத்திரமாகும். அதனுள் கேவல, சகல, சுத்தமென்னு மூன்று அவத்தைகளின்றன்மை நன்கு விளக்கப்பட்டது. அடுத்த ஐந்து பாட்டுக்களும் ஐந்தாஞ் சூத்திரமாகும். அதில் இறைவன் உயிர்களை அறிவிக்குமாறும் உயிர் வினைப்பயனை நுகருமுறையுங் காட்டப்பட்டன. பின்னுள்ள ஆறுஞ்சூத்திரமாகிய ஒருபாட்டு ஒரு சூத்திரமாகும். அதன் கண் பரமசிவன் குருவாய் வந்து ஞானம் நல்கு முறை கூறப்பட்டது. ஏழாஞ்சூத்திரமாகிய அடுத்த இரண்டுபாட்டினுள் ஞானம் பெறுவதற்குரிய ஆன்ம நிலை கூறப்பட்டுள்ளது. பின் ஐந்து பாட்டுக்களுள் ஞானத்தின் பயனை ஆன்ம தரிசனம் கூறப்பட்டுள்ளது. இப்பகுதி எட்டாஞ் சூத்திரமெனப்படும். ஒன்பதாஞ் சூத்திரமாகிய அடுத்த நான்கு பாட்டினுள் ஆன்மசுத்தி கூறப்பட்டது. பத்தாம் சூத்திரமென்னும் பகுதியுள் ஆன்ம லாபமாகிய பாசநீக்கமும் வாசனைமலம் நீங்குதற்குரிய ஐந்தெழுத்து அருள் நிலையுங் கூறப்பட்டன. பதினொன்றாம் சூத்திரமாகிய அடுத்த ஐந்து பாட்டினுள்ளும், பன்னிரண்டாம் சூத்திரமாகிய அடுத்த ஒரு பாட்டினுள்ளும் அணைந்தோர் தன்மை கூறப்பட்டது. நூலின் இறுதிச்செய்யுளிரண்டினும் நூற்கருத்தும் அதனை அறிவுறுத்து முறைமையுங் கூறப்பட்டன. நூலின் மங்கல வாழ்த்து உட்பட பாட்டின் றொகை நூற்றொன்று.

திருவருட் பயனென்னும் அழகிய சிறு நூலானது திருவள்ளுவர் நூல்போலக் குறள் வெண்பாக்களாலாகியது. இது பத்து அதிகாரங்களுடையது. ஒவ்வொரு அதிகாரத்

திற்கும் பப்பத்துக் குறள்களுள்ளன. இறைவனது இயல்பு கூறும் முதலதிகாரம் பதிமுதுநிலை யென்னும் பெயருடைத்து. ஏனை அதிகாரங்களின் பெயர்களும் இவ்வாறே அவை கூறும் பொருளினியல்பை விளக்குந் தன்மையன. அவை உயிரவை நிலை, இருண்மல நிலை, அருளுரு நிலை, அறியுநெறி, உயிர் விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுத்தருணிலை, அணைந்தோர் தன்மை என்பன.

**வினா வெண்பா**வென்பது பதின்மூன்று பாக்களினாலாயது. அது ஆசிரியர் தமது குருவாகிய **மறைஞான சம்பந்தரிடம்** சாத்திர வுண்மைகளை வினவுமுறையால் கூறப்பட்டுள்ளது.

**போற்றிப் பஃறொடை** யென்பது உயிர் தொழிற்படு முறைமை யுணர்த்தும் வாயிலாகத்தமக்குச் சிவஞானம் நல்கிச் சிவாநுபவ மீந்த குருமூர்த்தியைப் பஃறொடை வெண்பாவினால் வாழ்த்திய நூலாகும்.

**கொடிக்கவி** சிவமந்திரங்களி னியல்பு உணர்த்துவதாய்த் தில்லையிலே கொடியேறும் பொருட்டுப் பாடிய சிறு நூலாகும்.

**நெஞ்சு விடுதூது** என்பது ஆசிரியர் தமது திருவுள்ளத்தை **மறைஞான சம்பந்தர்** பால் மாலைவாங்கும்படித் தூது விடுமுகத்தான் பன்னூற்பொருள் முடியையும் இனிது விளக்கும் கலிவெண்பாவினால் இயற்றப்பெற்றுளது.

**உண்மைநெறி விளக்க**மென்பது தத்துவரூபம், தத்துவக் காட்சி, தத்துவ சுத்தி, ஆன்ம வடிவம், ஆன்ம தரிச

னம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் பத்துக் காரியங்களை இனிது விளக்கு நூலாகும்.

**சங்கற்ப நிராகரணம்** என்பது அகச்சமயங்கள் பலவற்றினது கொள்கைகளைக் கூறி அவற்றைச் சித்தாந்தப்பார்வையால் மறுக்கும் நூலாகும். **சிவஞானசித்தியார் பரபக்கமும்** இந்நூலும் சித்தாந்த சைவத்தின் வேறாய சமயக்கொள்கை வேறுபாடுகளைத் தெரிதற்கு மிகவும் பயன்படுகின்ற நூல்களாகும். இந்நூற்குக் காரணம்:—

சாலிவாகன ஆண்டு கஉ௩ரு-ல் சிதம்பரத்தில் நடந்த ஆனித்திங்கள் ஆருவது திருவிழாவில் வெவ்வேறு அகச்சமயங்களின் வழிநின்றொழுகும் ஆசிரியர்கள் எட்டுப்பேர் தேர் மண்டபத்திலொரு புறமிருப்பவும், மாயாவாதி யொருவன் ஒருபுறமிருப்பவும், ஸ்ரீ மெய்கண்ட தேவர் அடியாரொருவர் மற்றொரு பக்கமிருப்பவும், உண்மை உசாவுவான் ஒருவன் தம்பிரானார் திருவருள் எத்தன்மைத் தென்று மாயாவாதியைக் கேட்க அவன் சொன்னதை எட்டு ஆசிரியருள் ஒருவர் மறுக்கப் பின் அவருள்ளேயே ஒருவரை யொருவர் மறுத்துப் பேசித் தத்தங் கொள்கையை உசாவியோனுக்கு உரைத்தனர். அன்னோர் கூறிய கொள்கைகளை அவரவர் சங்கற்பங்களாக வைத்து அவற்றை உசாவியோனைத் தமது **சிவப்பிரகாசங்** கற்று உண்மை யுணரலாமென்று **உமாபதி சிவம்** அவனுக்கு அறிவுறுத்தியதே இந்நூலில் அடங்கிய பொருளாகும். இந்நூலில் மறுக்கப்பட்ட சமயங்கள் மாயா வாதம், ஐக்கிய வாதம், பாடாண வாதம், பேதவாதம், சிவசம

வாதம், சங்கிராந்த வாதம், ஈசுர அவிகார வாதம், நிமித்த காரண பரிணாம வாதம், சைவ வாதம் என்பன. சைவ வாதமென்பது சுத்தசைவம் என்னும் ஓர் அகச்சமய மாகும், சைவசித்தாந்த சமயமல்ல. அது ஆன்மா சகலா வத்தையிலே அறிவா யறியுமென்றும் அந்த அறிவையே சரியை கிரியை யோக முற்றியவிடத்துக்கடவுள் உதவுகிரு ரென்றும் கூறுவது. கேவலத்தில் ஆன்மா அறிவில்லாம லிருக்குமென்ற கொள்கை யுடையது. இச்சங்கற்ப நிரா கரணம் செந்தமிழ் நயமிக்க இருபது அகவற் பாக்களால் அமைந்துள்ளது.

## சிவஞானபோதம் முதனூலுடையதா ?

மேய்கண்ட சாத்திரமெனப்படும் சைவசித்தாந்த நூல்கள் பதினான்கும் மொழிபெயர்ப்பு நூல்களல்லவென்பதும் அவைகளை இயற்றிய ஆசிரியன்மாரின் அனுபூதி ஞானத்தின் பயனாக அமைந்துள்ளன வென்பதும் அவைகளைக் கற்பார் யாவர்க்கும் தெள்ளிதிற் புலனாம். அவற்றுள் ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனார் அருளிச்செய்த சிவஞான போதத்தைவடமொழியிலுள்ள இரௌரவாகமத்திலே பாவ விமோசனப் படலத்திலுள்ள பன்னிரண்டு சூத்திரங்களின் மொழிபெயர்ப்பு என்று இக்காலத்திலே பலர் கருதுகின்றார்கள். அது உண்மைதானா வென்ற ஆராய்ச்சி சைவநூல்களின் வரலாற்றினை அறியவிரும்பும் மாணவர்களது ஒரு தலையாய கடமையாகும். இவ்வாராய்ச்சி ஸ்ரீலஸ்ரீ சுவாமி வேதாசலம் அவர்கள், திருவாளர் பொன்னம்பலம் பிள்ளை முதலிய பெரியோர்களால் முன்னே செய்யப்பட்டுளது. இயைபுபற்றி ஈண்டும் அதுபற்றிய ஆராய்ச்சி நிகழற்பாலது.

ஒரு நூலின் பொருளை ஆராய்வது வேறு; அது வந்த வரலாற்றினை ஆராய்வது வேறு. வரலாற்றினை ஆராயு முயற்சியானது இக்காலத்திலே சிறப்பாக நிகழ்வதுபோல முற்காலத்திலே நிகழ்ந்ததில்லை. முற்காலத்திலே பொருளாராய்ச்சியைச் சிறப்பாகவும் ஏனையவற்றை அத்துணை அவசியமிலவாகவும் கருதப்பட்டதென்பது நமது நாட்டிற்கும் இலக்கியத்திற்கும் சரித்திர நூல் முன்னில்லாமைபற்றி

நன்கு ஊகிக்கப்படும். இதனைச் சிவஞானபோத நூலா ராய்ச்சி செய்வார் மனதில் நன்கு பதித்துக் கொள்ளவேண் டும். நூலின் பொருளினை ஆழமாக ஆராயும் வழக்கம் இற் றைக் காலத்தில் அவ்வளவு செம்மையாக நிலவாவிடினும் சரித்திரவாராய்ச்சி இற்றைக்காலத்திற்றான் சிறந்து விளங்கு கின்றதென்பது திண்ணம். அதற்குக் காரணம் சரித்திர வாராய்ச்சியில் வல்ல மேலைநாட்டுக் கலைஞர் தொடர்பு இப் போது அமைந்திருப்பதுபோல முன்னாளில் அமையா மையே. சரித்திர வாராய்ச்சியினும் நூற்பொருளாராய்ச் சியே சிறப்புடையது என்பார் பின்னையதில் வல்லமை யுடை யவர் முன்னையதினும் வன்மை யுடையாரே என்று அறுதி யிட்டுக் கூறுதல் தக்க வழக்கன்று. ஒன்றில் வல்லார் மற் றொன்றிலும் வல்லார் என்று கோடற்குத்தக்க காரணங்கள் வேண்டும். சித்திரமெழுத வல்லவன் அவ்வன்மை காரண மாக இசையிலும் வல்லவனா யிருத்தல் வேண்டுமென்று கூறமுடியாது. அதுபோலப் பொருளாராய்ச்சியில் வல்லவன் சரித்திர வாராய்ச்சியிலும் வல்லவனாயிருத்தல் முடியாது. சித்திர வேலைக்காரன் இசைகற்றுத் தேறின் இசையிலும் ஓவியத்திற்போல வல்லவனாதல் கூடும். இசைகல்லாத காலத் தும் சித்திரம் எழுதத் தெரிந்த காரணமொன்று பற்றியே அவனை இசையிலும் வல்லனென்று கோடல் சிறிதும் பொருந்துவதன்றாம். அவ்வாறே முற்காலத்தில் பொரு ளாராய்ச்சியில் மிக்க வன்மை யுடையவர்கள் சரித்திர வாராய்ச்சியில் பழகியிருந்தால் அதிலும் இக்காலத்தவர் களைப் பார்க்கிலும் மிக்க திறமை காட்டியிருத்தல் கூடுமென் பது கூறலாமே யொழிய சரித்திர வாராய்ச்சி செய்யாத

காலத்திலும் அவர்கள் அதில் வல்லவர் என்று கூறுவது அறிவிற்குப் பொருந்துவதன்றாம். சரித்திர வாராய்ச்சியினாலே பயனில்லையென்று கொள்ளினுங் கொள்ளுக. அவ்வாராய்ச்சி செய்யப் புகுந்த விடத்து அதனோடு பொருத்தமில்லாதவற்றை எடுத்து இயம்பி அதனை ஒதுக்குதல் ஆராய்ச்சி முறையன்றாம்.

சரித்திர வாராய்ச்சி முறைக்கேற்பச் சிவஞானபோத வரலாற்றினை முற்காலத்திலே ஒருவரும் ஆராய்ச்சி செய்ததாகத் தெரியவில்லை. அங்ஙனஞ் செய்யாமையால் முன்னிருந்தோர்களுக்கு இழுக்கு ஒன்றுமில்லை. இப்போது அதனைச் செய்யுங்கால் அதற்குப் பொருத்த மில்லாதபடி முன்னோர் கூறியதை நாம் கண்ணை மூடிக்கொண்டு ஒப்புக்கொள்ள வேண்டியதில்லை.

> "தொன்மைய வாமெனு மெவையும் நன்றாகா
> இன்றுதோன்றிய நூலெனு மெவையுந் தீதாகா."

> "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்ற திருவாக்குக்களை யுற்று நோக்குக. பெரு முனிவர்களுங்கூட ஆராயாதபோது தவறுதலியல்பே. அவர்களும் ஆராய்ச்சிக்கு ஏது அமைந்த விடத்தேதான் அதனைச் செய்வார்கள். ஐயம் நிகழ்ந்த இடத்தேதான் முனிவரும் யோகக் காட்சியால் உண்மை யுணரத் தொடங்குவதாகப் புராணங்களிற் கேட்கப்படுகின்றது. ஐயம் நிகழாதவரை அவர்கள் பார்வையும் ஏனையோரது போலவே யிருந்ததென்று

கருதுதற் கிடமுண்டு. இதுகாறுங் கூறியவை இந்நூலின் சரித்திர வாராய்ச்சிக்குத் தோற்றுவாயாகும்.

தமிழிலே மொழி பெயர்ப்பு நூல் செய்யப் புகுந்தார் யாவருந் தமது மேற்கோளை விளக்குவது மரபு. அது திரு விளையாடற் புராண முதலிய பல நூல்களிலுங் காணப்படும். ஒரு நூலின் ஆசிரியராதல், பாயிர முரைத்தோ ராதல், நூலாசிரியர் காலத்தே நூலினைப் பற்றி எழுதினோராதல் அது மொழிபெயர்ப்பென்று கூறுதவிடத்து அந்நூல் மொழி பெயர்ப்பல்ல வென்பது நன்கு ஊகிக்கப்படும். பிற மொழி நின்று தமது மொழியிற் பெயர்த்ததை மறைத்துக் கூறும் வழக்கம் தமிழ்ப் பேராசிரியர்கள்பால் யாண்டுங் காணப்படுவதில்லை. வடமொழி நூலோர்க்கு அங்ஙனஞ் செய்தல் இயல்பென்பது பெரிய புராணச் சரித்திரத்தால் இனிது விளங்கும். ஆசிரியர் சேக்கிழார் தமது நூலிற்கு முதனூல் திருத்தொண்டத்தொகையும் நம்பியாண்டார் நம்பி திருவந்தாதியுமென்று கூறியிருப்பவும் அதனை வட மொழியில் மொழிபெயர்த்தோர் தமது மூலத்தைக் கூறுமை யாலும் தங்களுடைய மொழி பெயர்ப்பு நூலே தமிழ்நூற்கு மூல மென்று அபிமானம் பற்றி வாய்ப்பறை யறைந்தமை யாலும் அதனைக் கேட்டு மயங்கிய தமிழர் சிலர் பெரிய புரா ணத்தையே மொழிபெயப்பு நூலென்று கூசாது சொல்லத் தொடங்குகிறார்கள். இது நிற்க.

சிவஞான போத மியற்றிய ஆசிரியர் மெய்கண்டார் தமது நூலிற்கு மூலம் இரௌரவ வாகமம் பாவ விமோசனப் படலமென்று கூறவில்லை. முதற் சூத்திரத்தே "என்மனார் புலவர்" என்று கூறினாரே யன்றி, "என்றார் சிவபெரு

மான், "என்றார் இரௌரவம்" என்று விதந்தோதினு ரில்லை. மங்கல வாழ்த்தும் அவையடக்கமுங் கூறிய ஆசிரி யர் தமது நூற்கு மூலமிருந்திருப்பின் அதனைக் கூறாது விடக் காரணமில்லை. கூறவேண்டியது அவசியமில்லை யென்று சொல்லுவதும் பொருத்தமாகாது. என்னை? சிவ பெருமானது திருவாக்கின் மொழிபெயர்ப் பென்றாதல் இரௌரவ சிவாகமத்தின் ஒரு பகுதியின் மொழிபெயர்ப் பென்றாதல் ஆசிரியர் காட்டியிருந்தால் அது கற்போருக்கு மிக்க ஊக்கத்தைக் கொடுக்க வல்லதாகும். ஆன்றோர் வழக்கின்படி நூன் மரபும் உரைத்தவாறாகும். ஆசிரியர் நூற்கு மூலம் கூறாமையாலே மூலமில்லை யென்றலே பொரு த்த முடைத்து.

இன்னும் தமிழ்ச் சிவஞான போத முதற் சூத்திரத் தையும் வடமொழிச் சிவஞான போத முதற் சூத்திரத்தை யும் ஒத்துப் பார்ப்பின் தமிழ்ச் சூத்திரத்தின் பொருளைச் செவ்விதிற் றெரிக்கும் ஆற்றல் வட மொழிச் சூத்திரத்திற் கில்லை யென்பது புலனாகும். தமிழ்ச் சூத்திரத்தில் 'அவனவ ளது' என்று கூறியிருப்ப வடமொழிச் சூத்திரம் "பெண்ணு ணலியின் ஆதித் தன்மையால்" என்று தொடங்குகின் றது. 'அவனவளது வெனும் அவை' யென்று பிரபஞ்சத்தை முக் கூற்றினுளடக்கிக் கூறியிருக்குஞ் சிறப்பு வடமொழிச் சூத்திரப் பகுதிக்கில்லை. பின்னையது முன்னையதற்கு மூலமா மெனின் ஆசிரியர் மெய்கண்டார் சிவபெருமானது வாக் கென்று சொல்லப்படும் வடநூற் சூத்திரத்திற் கியையத் தமி ழ்ச் சூத்திரஞ் செய்திருப்பார். அவ்வாறு செய்யாமையால் வடமொழிச் சூத்திரத்தின் வழிவந்தது தமிழ்ச் சூத்திர

மல்லவென்று ஊகிக்கப்படும். தமிழ்ச் சூத்திரத்திலுள்ள 'மலத்துளதாம்' என்கின்ற சொற்றொடருக்குநேரான சொற்றொடர் வடநூற் சூத்திரத்தில் காணப்படவில்லை. உலகம் ஒடுங்குமென்பதற்கும் உயிர்களுக்கு ஆணவ மலபரிபாகத்தின்பொருட்டு மீளவும் அது தோன்றுமென்பதற்கும்'மலத்துளதாம்' என்ற ஒரு சொற்றொடர் அமைத்த திறமை ஆசிரியர் மெய்கண்டார்க்கே யுரியது. இவ்வகையான நயம் அமையாத வடமொழிச் சூத்திரத்தை மூலமென்றும் சிவவாக்கென்றுங் கூறுதலும் தமிழ்ச் சூத்திரத்திற்கேற்ப வடமொழிச் சூத்திரத்தை வலிந்து பொருள் கோடலும் சரித்திர வாராய்ச்சியின்மையான் வந்த அபிமானத்தின் பயனேயன்றி வேறில்லை. இவ்வாறே ஏனைத் தமிழ்ச் சூத்திரங்களையும் வடமொழிச் சூத்திரங்களோடு ஒப்பிட்டு நடுவு நிலைமையோடு ஆயுமிடத்துத் தமிழ்ச் சூத்திரமே வடமொழிச் சூத்திரத்திற்கு மூலமென்பது தெளிவாகும். சுருக்கமாக அதனை ஈண்டுக் காட்டுதும்:—

வடமொழிச் சிவஞான போத முதற் சுலோகத்தே 'மூவினைமையின்' என்ற பொருளுள்ள சொற்றொடரில்லை. அதற்குப் பதிலாகக்'காரியம்' என்னும் சொல்லே அமைந்து கிடக்கின்றது. அது அத்துணைச் சிறப்புடையதல்லவென்பது நன்கு விளங்கும். இனி 'அந்தம் ஆதி' என்ற சொற்றொடர்போல நயமான வாக்கியம் வடமொழிச் சுலோகத்தில்லை. 'கர்த்தா ஒருவன் உளன். அவன் பிரபஞ்சத்தை ஒடுக்கி உளதாக்குவன்' என்பது மாத்திரமே கூறப்பட்டது. 'என்மனார் புலவர்' என்பதற்கும் நேரான பதமில்லை.

இரண்டாஞ் சுலோகமானது ஆசிரியர் ஸ்ரீ மெய்கண்டாரது சூத்திரத்திற்கு வியாக்கியானம் போலத் தோன்றுகிறது. 'அவையே தானே' என்பதற்குக் 'கர்த்தா வேறாயினும் வியாபகத்தினால் வேற்றுமையின்றி' என்னும் பொருளுள்ள சொற்றொடர் காணப்படுகின்றது. அது 'அவையே தானே யாய்' என்பது போல் அழகாக வமைந்த தல்ல. 'நீக்கமன்றி நிற்கு மன்றே' என்பதற்கு நேரான சொற்றொடர், 'அமைந்த வளவில் நில்லாது கிருத்தியங்களைச் செய்கின்றான்' என்று பொருளுள்ள வாக்கியஞ் சேர்க்கப்பட்டுள்ளது. 'போக்கு வரவுபுரிய' என்பதற்கு வடமொழிச் சுலோகத்தில் நேரான சொற்றொடரில்லை.

மூன்றாஞ் சூத்திரத்திலே 'உண்டி வினையின்மை' என்ற சொற்றொடரின் பொருளை நன்கு விளக்காத ஒரு சொல்லே வடமொழிச் சுலோகத்திலமைந் துள்ளது. 'உணர்த்த' என்ற முக்கியமான சொல்லின் பொருளை விளக்குமொழி சுலோகத்திலில்லாமை அதற்கு ஓர் குறைவாகும். 'மாயாவியந்திர' என்னும் வாக்கியமும் அதனுளில்லை.

நான்காஞ் சூத்திரத்திலே 'சகசமலத்துணராது' என்பதன் சொல்லாற்றலை இனிது விளக்காது மலத்தினால் மறைக்கப்பட்ட ஞானங் கிரியையையுடைய ஆன்மா என்று பொருள்படும் வாக்கியமே வடமொழிச் சுலோகத்துளமைந்து கிடக்கின்றது. ஞானம் கிரியை என்பதற்கு ஸ்ரீ மெய்கண்ட தேவர் சூத்திரத்தில் சொல்லில்லை. ஞான மறைப்பே சிறப்பாகக் கூறப்பட்டது.

இனி ஐந்தாஞ் சூத்திரத்தே 'அளந்தறிந் தறியா' என்பதற்கு நேராகிய பகுதி வடமொழிச் சுலோகத்தி

வில்லை. உயிர் அறிவிக்க இந்திரியங்கள் அறிவதுபோல சம்பு அறிவிக்க உயிர் அறியும் என்று அது கூறியதே யொழிய இந்திரியங்கள் எப்படி உயிரை அறியமாட்டாவோ அவ்வாறே உயிர்கள் தம்மையுந் தம்மைச் செலுத்துந் திருவருளையும் அறியமாட்டா என்னுங் கருத்தை விளக்கும் வாக்கியங்கள் வடமொழிச் சுலோகத்திலில்லை. முதல்வனது சிற்சத்தியால் என்னும் பொருள்படத் 'தமியருள்' என்று தமிழ்ச் சூத்திரத்திலிருப்ப, வடமொழிச் சுலோகத்துள் 'சம்புவினால் அறிகின்றன' என்று கூறப்பட்டது. 'காந்தங் கண்ட பசாசத்தவையே' என்பதில் 'அவையே' என்ற சொல்லாற்றலால் முதல்வன் விகாரியில்லை என்று ஆசிரியர் மெய்கண்டார் பெறவைத்திருப்ப அதனை விரித்து அவன் விகாரியல்லன் என்று சுலோகத்தில் கூறப்பட்டது.

ஆறுஞ் சூத்திரத்துள் சுருக்கமாகவும் நயமாகவும் சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த்தியதின் நயம் வடமொழிச் சுலோகத்தி லமையவில்லை. ஆசிரியர் அசத்து என்றதை வடமொழிச் சுலோகத்தில் சடமென்ற வார்த்தையால் தெரிவிக்கின்றார். 'சிவசத்து' என்ற சொற்றொடரின் பொருள்வளத்தைச் சம்புவின் ரூபமென்ற சுலோகப் பகுதி பெற்றிலது. 'இன்மையின்' என்பதன் பொருளை 'அசத்பாவக' என்ற சொல்லினால் சுலோகஞ் செய்தார் விளக்கினாரே யொழிய, சத்தும் அசத்தும் என்ற சொற்களை இனிதமைத்துச் சுலோகத்தை யாக்க அறிந்திலர். சூத்திரத்தில் 'இசைக்கு மன்னுலகே' என்பதற்கு நேராக 'ஞானிகள் கூறுவார்கள்' என்ற சொற்றொடரமைக்காது 'ஞானிகள் அறிவார்கள்' என்று பொருள்படும் வாக்கியமே சுலோகத்திற் காணப்படுகின்றது.

அடுத்த ஏழாஞ் சூத்திரத்தே சத்து, அசத்து என்ற சொற்களின் பொருள்நய முணரப் பெருது சித்து, அசித்து என்ற சொற்களை அமைத்தே வடமொழிச் சுலோகம் செய்யப்பட்டுளது. 'இருதிற னறிவுள' என்று சூத்திரம் சுருக்கிக் கூறியிருப்பதை, 'எவன் பிரபஞ்சத்தையுஞ்சிவனையுமறிகின்ருனே' வென்று விரித்துக் கூறுகின்றது சுலோகம்.

எட்டாஞ் சூத்திரத்தில் 'தம்முதல்' என்பதன் பொருளை இனிதுணர்த்துஞ் சொல் வடமொழிச் சுலோகத்திலில்லை. அதனுல் சிவபெருமான் குருவாய் வருகின்ருர் என்ற வுண்மையை அச்சுலோகம் விளக்கவில்லை. அரன் என்பதற்கும் நேராகிய பதமில்லை. 'வளர்ந்து' என்பது போலச் 'சகஸ்தித்வா' என்ற சொல் நயமுடையதல்ல.

ஒன்பதாஞ் சூத்திரத்தே 'ஊனக்கண் பாசமுணரா' என்பதன் பொருளை விளக்கும் பகுதி வடமொழிச் சுலோகத்திலில்லை. 'பாசம்' என்ற சொல்லிற்கு 'விருத்தி' யென்ற சொல்லே சுலோகத்திற் காணப்படுகின்றது. 'விதி' என்னும் பதப் பொருளை விளக்குஞ் சொல் அதில் காணப்படவில்லை.

பத்தாவது சூத்திரம் பாசக்ஷயம் கூறவந்தது. அதனை இனிது விளக்கும் 'மலமாயை தன்னெடு வல்வினை யின்றே' என்பதன் கருத்தை விளக்குதலோடமையாது 'ஸ்வானுபூதிமான்பவதி' என்ற வாக்கியத்தைச் சேர்த்து வருஞ் சூத்திரத்தின் கருத்தையும் வடமொழிச் சுலோகம் விளக்குவதாயிற்று. 'வல்வினை' என்ற சொற்ருெடருக்கு நேராகிய பகுதியில்லை. கூறவேண்டியதைக் கூருது அவசியமில்லாத வாக்

கியத்தைச் சேர்த்து நிற்கின்றது அச்சுலோகம். 'இறைபணி நிற்க' என்ற அழகிய சொற்றொடர் போல 'ததீன ஸ்வவிருத்திகம்' என்ற வாக்கியம் ஆற்றலுடைய தல்ல.

பதினொன்றாஞ் சூத்திரத்தே 'கண்டு காட்டலின்' என்ற சொற்றொடரின் உண்மைப் பொருளை இனிது விளக்குமொழி சுலோகத்தில் இல்லை. காட்டுபவன் என்னும் பொருளையே சுலோகம் விளக்கிற்று. காண்பவன் என்பது தெளிவுபடுத்தப் படவில்லை. 'காட்டலின்' என்ற சொல் லாற்றலினாலே ஆசிரியர் மெய்கண்டார் பெறவைத்த நுட் பத்தை 'ஆத்மோபகாரகே தாஸ்மின்' என்று வடமொழிச் சுலோகம் விரித்தது. 'அயரா' என்பதன் பொருள் நய முணராது மேலான என்ற பொருளுள்ள சொல்லையே வட மொழிச் சுலோகத்தார் அதனைக் குறிக்க வழங்கியுள்ளார். 'அரன் கழல் செலுமே' என்பதின் பொருளை விளக்கும் பகுதி வடமொழிச் சுலோகத்திலில்லை. மேலான பக்தியைச் செய்யவென்ற வளவில் சுலோகம் நின்றுவிட்டது.

பன்னிரண்டாவது சூத்திரத்திலே "செம்மலர் நோன் றாள் சேரலொட்டா அம்மலங்கழீஇ" என்கின்ற கருத்தை வடமொழிச் சுலோகம் விளக்கவில்லை. அதற்குரிய வாக்கி யமும் அதிலில்லை. 'அரனெ‌ன' என்பதற்கும் நேரானசொல் லில்லை. "மாலற நேய மலிந்தவர்" என்பதற்குந் தெளிவான வாக்கியமில்லை. அஃதன்றியும் வடமொழிச் சிவஞானபோத இறுதிச் சுலோகத்தின் இறுதியடிக்கும் சரியான வாக்கியந் தமிழிலில்லை.

இவ்வேறுபாடுகளால் தமிழ்ச்சூத்திரங்களிலுள்ள நயங் களை வடமொழிச் சுலோகங்களிற் காண இடமில்லையென்ப

தாம் ஆசிரியர் மெய்கண்டாரது நூல் நயத்தைச் செவ்வி தின் உணர்ந்து அதனை வடமொழியில் இனிதமைக்கும் ஆற்றலில்லாத ஒரு வடமொழி வாணரால் வடமொழிச் சிவ ஞானபோதம் எழுதப்பட்டதென்பதும் இனிது விளங்கும். ஆசிரியர் மெய்கண்டாரது சூத்திரங்கள் மிக்க நயமுடையன வென்று கூறினால் அவையெல்லாம் வடமொழிச் சுலோகங் களில் தொக்கு நின்றனவென்று தமக்குத் தோன்றியவாறு அபிமானிகள் போலிச் சமாதானங் கூறுவர். ஆசிரியர் மெய்கண்டாரது நூலை மொழிபெயர்ப்பு என்று சொல்லு வது திருவாசகத்துக்கு போப்பையர் என்னும் பெரியோரால் அமைந்துள்ள மொழிபெயர்ப்பைத் தனியே எடுத்து அது மொழிபெயர்ப்பு நூலென்று காட்டாது அச்சிடப்பட்ட பின் நூறு அல்லது இருநூறு ஆண்டுகள் சென்றால் ஆங்கி லப்பற்று மிக்கோர் போப்பையரது ஆங்கிலத் திருவாசகத் தையே மாணிக்க வாசகர் தமிழில் மொழி பெயர்த்து விட்டாரென்று கூறினாற் போலும். ஓவியச் சீர்மை வாய்ந்த ஒரு வடிவத்தையும் அது வாயப்பெறாத மற்றொரு வடிவத்தையும் ஆசிரியர் மெய்கண்டார் நூலை வழிநூலென் றுரைப்பார்க்குக் காட்டினால், பின்னையதிற் புதைந்து கிடந்த தையே முன்னையது விளக்க எழுந்தது என்று அவர் கூறு வர்போலும். இங்ஙனஞ் சாற்றுவார் மயக்கத்திற்கு மருந் தில்லை. உண்மையை நுண்ணிதின் ஆயப்புகுவோருக்கு இதுகாறுங் கூறிய காரணங்களால் ஆசிரியர் மெய்கண்டார் நூலே முதனூலென்பது அங்கை நெல்லியாம்.

மெய்கண்டார் சிவஞான போதத்தை வடமொழியிற் பெயர்த்தவர் அதனை வடநூற் பன்னிரண்டாவது சுலோகத்

தில் குறிப்பித்துள்ளார். வடமொழிச்சிவஞான போதத்தின் பன்னிரண்டாவது சுலோகத்தின் இறுதியில் "ஏவம் வித்யாத் சிவஞானபோதே சைவார்த்த நிர்ணயம்" என்ற வாக்கியங் காணப்படுகின்றது. அதற்குப்பொருள் 'இவ்விதமாகச் சிவஞான போதத்திலே சைவப் பொருள் துணியப்பட்டதென்றறிக' என்பதே. இந்த வாக்கியத்தில் 'சிவஞான போதே' என்ற சொல் உற்று நோக்கத்தக்கது. அந்தச் சொல் வடமொழிச் சிவஞான போதத்தைச் சுட்டுவதல்ல. சுட்டுவதாயின் 'இச் சிவஞான போதத்தே' என்று கூறப்பட்டிருத்தல் வேண்டும். அதற்குரிய சுட்டு அச்சூத்திரத்தில்லை. இல்லாததை இருப்பதென்று கோடல் பொருந்தமில்லை. ஆதலால் அங்கு சிவஞானபோதமென்றது மெய்கண்டாரது நூலையே குறிக்கும். வடமொழிச் சிவஞானபோதம் எழுதப்பட்ட காலத்தே சிவஞானபோதம் என்று பெயருள்ள நூல் ஒன்றுதானிருந்ததாகலின் அதனைத் தமிழ்ச் சிவஞான போதமென்று கூறுவதற்குக் காரணமில்லை. தமிழிலுள்ள திருவாசகத்தை ஆங்கிலத்திலே மொழி பெயர்த்த போப்பையர் அதனைத் தமிழ்த் திருவாசகமென்றும் தமது மொழிபெயர்ப்பை ஆங்கிலத் திருவாசகமென்றும் கூறினாரில்லை. யாண்டும் அவ்வாறே ஆகும். ஒரு மொழியிலுள்ள ஒருநூலை மொழி பெயர்ப்பவர் நூலின் பெயரொடுமொழிப் பெயரையும் இணைத்துக் கூறுவது வழக்கமில்லை. அவ்வாறே நூலாசிரியர் பேரையும் நூலினோடு இணைத்துக் கூறுதல் மரபன்மை யறிக. மகாபாரதத்தின் மொழி பெயர்ப்பு என்றவிடத்து வியாசர் செய்த மகாபாரதத்தின் மொழி பெயர்ப்பு என்று கூறுவது அவசியமில்லை. வியாசரைத்

தவிர வேறு யாராவது மகா பாரதஞ் செய்திருந்தால் வியாச மகா பாரதமென்று கூறுவதற்குக் காரணமுண்டு. சிவஞான போதமென்பது ஒரே நூலாகவும் அது மெய்கண்டார் ஒருவராலே செய்யப்பட்டதாகவும் இருந்தமையாற்றான் வடமொழிச் சிவஞான போதம் எழுதினோர் 'சிவஞான போதே' என்ற அளவில் மெய்கண்டார் நூலையே குறித்தாரென்று கொள்க.

அன்றியும் வடமொழிச் சூத்திரத்தின் மொழி பெயர்ப்பு மெய்கண்டார் நூலின் பன்னிரண்டாவது சூத்திரமென்று கொண்டால் "ஏவம் வித்யாத் சிவஞான போதே சைவார்த்த நிர்ணயம்" என்ற வாக்கியத்திற்கு மொழி பெயர்ப்பு அதன்கண் ஏன் காணப்படவில்லை என்ற வினா வெழும். அதற்கு அவ்வாக்கியத்தை மொழி பெயர்த்தல் அவசியமில்லையென்றவிடை தக்கதன்றாம். சிவாகம முடிபினை அறுதியிட்டுச் சிவபெருமானாலே கூறப்பட்ட சொற்றொடரை அவசியமில்லையென்று ஒதுக்குவது ஆசிரியர் மெய்கண்டார் மாட்டு ஏற்படுத்தப்படும் குற்றமாமன்றோ? அங்ஙனம் மெய்கண்டார் மேற் குற்றமேற்றுதல் தவறாகும். ஆதலால் மெய்கண்டார் நூல்செய்யுமுன் வடமொழியில் சிவஞானபோதம் ஏற்படவில்லையென்றே கொள்ளுதல் பொருத்தமுடைத்து.

இன்னும் இரௌரவாகமத்துள் பல சுலோகங்களையுடைய பாவ விமோசனப் படலத்துள் பன்னிரண்டு சுலோகங்கள் மாத்திரமே சிவஞான போதம் என்ற ஒரு சாத்திரமாயிற்று என்று கோடல் அறிவிற்குப் பொருந்துவதன்றாம். அதன்கணுள்ள பன்னிரண்டு சூத்திரங்களை

வேருக எடுத்து அவற்றை மாத்திரம் சிவஞான போத மென்று கூறினரென்று கொள்ளுவதற்கிடமில்லை. ஏனெனில் அப்பன்னிரண்டு சூத்திரங்களுள் இறுதிச் சூத்திரமே சிவஞான போதமென்ற வார்த்தையை யுள்ளடக்கி நிற்கின்றது. அவ்வார்த்தையுள்ள ஒரு சுலோகம் பாவவிமோசனப் படலத்துள் அமைந்து கிடக்குமாயின் பன்னிரண்டு சூத்திரத்திற்கும் சிவஞான போதமென்ற பெயர் வேருக ஏற்பட்டிருக்க இடமில்லை. ஒரு படலத்தினுள்ளே ஒரு சூத்திரம் அதற்கு முன்னுள்ள பதினொரு சூத்திரங்களையும் ஒரு சாத்திரமாகத் தோற்றுவாயின்றிக் கூறல் நூன் முறைக்கு முற்றுமாறுகும். ஆதலால் வடமொழியில் சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரமும் பாவ விமோசனப் படலத்தின் பகுதியென்று கொள்ள இடமில்லை. இரௌரவத்தின் பகுதியென்று சொல்வதற்குத் தெளிவான சான்றுகள் ஒன்றுமில்லை. இரௌரவத்தின் பகுதியெனப்படும் சில சுலோகங்கள் காலஞ்சென்ற சேந்திநாதய்யரவர்களால் வெளிப்படுத்தப்பெற்றன. அச்சுலோகங்கள் தீக்கை செய்யு முறையைப்பற்றிக் கூறுகின்றன. அங்ஙனங் கூறுமிடத்துச் சீடன் கையில் சிவஞானபோதமென்னுஞ் சாத்திரத்தைக்கொடு என்ற பொருளுள்ள வாக்கியங் காணப்படுகின்றது.

“ பாவநாதீக்ஷயாசைநம் சுத்தம் கிருத்வாயதாவிதி
சிவஞானபோத சாஸ்திரஞ்ச தத்யாத்பத்ய சிந்தநம் ”

சிவஞானபோதமானது இரௌரவத்தின் ஒரு பகுதியாயிருக்குமாயின் தன்னின் வேறுகிய ஒரு சாத்திரமாக இரௌரவம் அதனைக் கூறவேண்டியதில்லை. ஆகவே சிவ

ஞானபோதம் இரௌரவத்தின் பகுதி யென்பதற்கும் வெளிப்பட்ட சுலோகங்கள் இடங்கொடுக்கவில்லை. ஆதலால் சிவஞான போதத்தைஇரௌரவத்திலிருந்து வந்ததென்று சொல்லுவதற்கு மெய்கண்டார் காலத்திற்குப்பின் புதிதாக ஏற்படுத்திய சில சுலோகங்களே இப்போது இரௌரவ மெனப் படுதல் காண்க.

இனி ஸ்ரீமெய்கண்டாரது முதல் மாணவராகிய அருணந்தி சுவாமிகள்தமது நூல்வழிகூறுஞ் செய்யுள் கவனிக்கத் தக்கது. “போத மிகுத்தோர் தொகுத்த” என்னும் முதற் குறிப்பினை யுடைய பாட்டில் மிக்க ஞானமில்லாமலும் மிக்க பேதமையில்லாமலும் நடுத்தரமான நிலையில் நிற்போர்க்கு உய்திகூட நெறி எது என்று ஆராய்ச்சி செய்வோரின் பொருட்டு ஒரு வழியை இறைவன் நந்தி பெருமானுக்கருளிச்செய்ய அவர் அவ்வழியைச் சனற்குமாரருக்கு உபதேசிக்க அந்த நெறியை மெய்கண்டதேவர் கடைப்பிடித்து அருளிச்செய்த ஞானநூலின் வழித்தாயது சிவஞானசித்தியாரேன்று கூறப்பட்டுள்ளது. இதனால் விளங்குவது யாதெனில் சிவஞானபோதத்திற் கூறப்படும் ஞானநெறியானது இறைவனிடத்திலிருந்து நந்திதேவர் பரம்பரை வாயிலாக மெய்கண்டார்க்கு வந்ததென்று தெரிகின்றோம். உபதேச முறையால் பெற்ற அரும்பொருளை அடிப்படையாகக் கொண்டு ஸ்ரீமெய்கண்டார் செய்தருளிய ஞானநூலே சிவஞானபோதமென்று கொள்ள வேண்டுமே யன்றி நூல் தானே கைலாயத்திலிருந்து குவலயத்தில் இழிந்ததென்று கூற இடமில்லை. நெறி எது என்பவர்களுக்கு அதனையுணர்த்த அவ்வழியைக் குருநாதன் கொண்டு நூல் செய்தா

ரென்பதே பொருந்துவதாகும். அது உமாபதி சிவாசாரிய சுவாமிகள் சிவப்பிரகாசத்துப் பாயிரத்துள் நூன்மரபும் சந்தானமரபும் வேறுவேறாகக் கூறினமையாலே தெள்ளிதிற் புலனும். சிவப்பிரகாசம் ஐந்தாவது பாட்டினுள் சந்தான பரம்பரை திருக்கைலாயத்தில் வீற்றிருக்கும் பெருமான் முதலாக மறைஞான சம்பந்தர் ஈறாகக் கூறப்பட்டது.

"தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிக ளடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியாம் வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலான் மாறா
விரவுபுக ழருணந்தி விறலார் செல்வத்
தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவரிச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே."

ஆயின் சிவப்பிரகாசம் பதினொன்றாவது பாட்டினுள் நூன் மரபு கூறப்படுமிடத்து ஸ்ரீமெய்கண்டார் சிவஞானபோதம் செப்பினர் எனவும் அவரது ஞானப்புதல்வராகிய அருணந்தி சிவாசாரியர் சிவஞானசித்தியார் இயற்றினரெனவும் அவ் விரண்டு நூலையும் ஆகம நூலையும் ஆசிரியர் திருவுள்ளத்தில் உறைகின்ற திருவருளையுங் கலந்து சிவப்பிரகாச மியற்றப் படுவதாகக் கூறுவது காண்க.

"தெரித்தகுரு முதல்வருயர் சிவஞான போதஞ்
செப்பினர்பின் பவர்முதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற் றவர்கடிரு வடிகள் போற்றி
விளம்பியநூ லவையிரண்டும் விரும்பி நோக்கிக்
கருத்திலுறை திருவருளு மிறைவ னூலுங்
கலந்துபொது வுண்மையெனக் கருதி யானு

மருத்திமிக வுரைப்பன்வளர் விருத்த நூறு
மாசில்சிவப் பிரகாச மாகு மென்றே."

ஸ்ரீ அருணந்தி சிவாசாரியர் இயற்றிய 'போத மிருத்தோர்' என்று தொடங்கும் சிவஞானசித்தி நூன்மரபுச் செய்யுளி லாதல், சிவப்பிரகாச நூன்மரபுச் செய்யுளிலாதல், இரௌ ரவ ஆகமத்திலிருந்தாதல் பிற ஏதாவது ஓராகமத்திலிருந் தாதல் சிவஞானபோதம் இயற்றப்பட்டதாகக் கூறப் படவேயில்லை. 'தெரித்தகுரு' என்ற செய்யுளில் சிவ ஞான போதத்தையும் சிவஞான சித்தியாரையும் வேறாகவும் இறைவன் நூலாகிய ஆகமத்தை வேறாகவும் கூறியிருத்தல் காண்க. இறைவன் நூலின் ஒரு பகுதியின் மொழி பெயர்ப்பென்று அங்கே ஆசிரியர் கூறிற்றிலர். நூன்மரபு கூறுமுன் சிவாகமத்தி னியல்பினை விரிந்த ஒரு செய்யுளில் விளக்கியிருந்தும் அச்சிவாகமத்துள் ஒன்றினுடைய பகுதி யின் மொழிபெயர்ப்பென்று சிவஞானபோதத்தைக் குறித் துக் கூறவில்லை. சிவாகமமாவது சரியை கிரியை யோகம் ஞானமாகியவற்றைத் தெளிவுற உணர்த்துவதென்று நன்கு வகுத்துக்கூறிய வாசிரியர் அதற்கடுத்த பாட்டில் சிவஞான போதத்தை அச்சிவாகமத்தின் வழித்தென்று எளிதாகக் கூறியிருக்கலாம். இரௌரவப் பகுதியின் மொழிபெயர்ப் பாகச் சிவஞானபோத மிருக்குமாயின் ஆசிரியர் அங்ஙனங் கூறாதுவிடார்.

" கிரியையென மருவுமவை யாவு ஞானங்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கு முண்மை
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூ பங்கண்

மருவியிடு முயர்ஞான மிரண்டா மாறு
மலமகல வகலாத மன்னு போதத்
திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதுஞ்
சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே."

சந்தான குரவர் நால்வருள் நூல் செய்த மூவருஞ் சிவ ஞானபோதத்தை இரௌரவாகமப் பகுதியின் மொழி பெயர்ப்பு என்று கூறிற்றிலராகலான் ஸ்ரீ மெய்கண்டார் காலந்தொட்டு உமாபதி சிவாசாரியர் காலம் இறுதியாகச் சிவ ஞானபோதம் வடநூலின் மொழிபெயர்ப்பு என்ற கொள்கை உலகத்தில் நிலவவில்லை யென்பது திண்ணம். சந்தான குரவர் காலத்திற்குப் பின்னே சிவஞானபோதப் பெருமை தமிழுலகிற் பரவியகாலத்தே வடமொழியிற் சிவஞான போதம் ஏற்பட்டிருத்தல் வேண்டும். அங்ஙனம் ஏற்பட்ட காலத்திற்குப் பின்னேயே அது இரௌரவாகமத்திலிருந்து வந்ததென்ற கட்டுக்கதை தமிழ்நூலுக்கு வடநூல் மூலம் வேண்டுமென்ற தப்புக் கொள்கையில் உற்பத்தியாயிருத்தல் வேண்டும். அதற்குச் சற்று முன்னேதான் சிவஞான போதத்திற்கு முன்னும் பின்னும் எழுதப்பட்ட பாயிரச் செய்யுட்கள் யாக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

சிவஞானபோதமானது ஸ்ரீ மெய்கண்டாரால் இயற்றப் பட்டதென்று கூறியிருப்பவும் "மலர்தலை" என்ற பாயிரச் செய்யுளில் 'மயர்வு அறநந்தி முனிகணத் தளித்த உயர் சிவஞான போத முரைத்தோன்' என்று கூறப்பட்டது. அவ்வாறே சிவஞானபோதத்தின் இறுதியின் கண்ணும் "எந்தை சனற்குமர னேத்தித் தொழ வியல்பாய், நந்தி யுரைத் தருளு ஞானநூல்" என்று கூறப்பட்டது. "ஒட்

டக்கூத்தன் பாடடிற்கு இரட்டைத்தாழ்' போலச் சந் தார்னகுரவர் காலத்திற்குப்பின் ஏற்பட்ட புதுக்கொள் கையை நாட்டுவதற்குச் சிவஞானபோதத்திற்கு முன்னும் பின்னும் அதனை வலியுறுத்தும் பாயிரச்செய்யுட்கள் எழுந்தனபோலும். அங்ஙனமாயினும் அப்பாயிரச் செய் யுட்களில் சிவஞானபோதம் இரௌரவ ஆகமத்தின் பகுதி யென்று கூறப்படவேயில்லை. நந்தி பெருமான் நூல் செய்தால் அது வடமொழியிற்று னிருக்கவேண்டுமென்று துணிவதற்குக் காரணம் யாதோ விளங்கவில்லை. அல்ல தூஉம் நந்தி பெருமான் உரைத்த நூலை ஆகமத்தின் பகுதி யென்று கூறவும் போதிய பிரமாணம் யாதுமில்லை. ஆதலால் இச்சிறப்புப்பாயிரச் செய்யுட்கள் எழுந்த காலத் தும் சிவஞான போதம் இரௌரவத்தின் வழி நூலென்ற கொள்கை உலகத்தில் நிலைபெறவில்லை. இதனால் யூகிக்கப் படுவது யாதெனில் சிறப்புப் பாயிரச் செய்யுட்கள் எழுந்த காலத்திற்குப் பின்னேயே வடமொழிச்சிவஞானபோதத்தை வைப்பதற் கிடமாக இரௌரவாகமப்பகுதியொன்றுஏற்பட் டிருத்தல் வேண்டும். அதற்குப் பின்னேயே வடமொழிச் சிவஞானபோதத்திற்கு விரிவுரை வகுத்த சிவாக்கிர யோகிகள் இரௌரவத்திலே சிவஞானபோதம் உபதேசிக் கப்படுகின்றதென்ற கருத்தைத் தமது பாடியத்துள் கூறுவா ராயினர். சிவாக்கிர யோகிகள் காலந்தொட்டு சிவஞான போதம் மொழி பெயர்ப்பு என்ற கொள்கையானது வலி பெறுவதாயிற்று. திருவாவடுதுறையில் விளங்கிய உலகுடை நாயனு ரென்பாரும் அக்கர்ணபரம்பரைக் கட்டுக்கதையை நம்பினதாக அறிகிறோம். அவர்க்குப் பின்வந்த ஆசிரியர்

சிவஞான சுவாமிகள் இதனைப்பற்றிய சரித்திரவாராய்ச்சியிற் கவனஞ் செலுத்தாது ஐதிகவரலாற்றைத் தான்கேட்ட முறையாகவே தமது நூலிற் குறித்துவிட்டனர். அங்ஙனங் கூறினும் 'சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெய் பயில்வாய்மை மெய்கண்டான்' என்ற விடத்துக் கைலாய பரம்பரையில் வந்தது சிவஞான போதநெறி யென்று குறிப்பித்தமை காண்க. 'காமிக முதலிய சைவாகமங்களுள் ஞானபாதப் பொருளின் இகலறுத்து அவற்றின் பொருளுண்மை போதித்தற்கு இரௌரவாகமத்தில் எழுந்தது சிவஞானபோதம்' என்ற வரலாறு ஸ்ரீ அருணந்தி சிவாசாரியாரால் கூறப்படவில்லை யென்பது காண்க. அது அருணந்தி சிவாசாரியரது "போதமிகுத் தோர்தொகுத்த" என்ற செய்யுளை உற்றுநோக்கில் நன்கு விளங்கும். அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் சுருக்கிக் கூறினதையே ஆசிரியர் சிவஞானயோகிகள் விரித்துக் கூறினரென்று ஒரு சாரார் இரண்டிற்கும் பொருத்தங்கூற முற்படுவாராயின் அருணந்திசிவாசாரிய சுவாமிகள் கூறியது சுருக்கமென்பதற்கும் ஆசிரியர் சிவஞான யோகிகள் கூறியது விரிவு என்பதற்கும் தக்க பிரமாணங் காட்டவேண்டும். இரௌரவாகமத்திலாவது நந்தி பெருமானுக்கு மலைவுதீர்தற்பொருட்டுச் சிவஞானபோதம் கூறப்பட்டதென்று வரையப்பட்டுளதாவென்று ஆராய்ச்சிசெய்தால் அங்ஙனங்கூறும் இரௌரவாகமத்தின் பகுதி இதுவரை காணப்படவில்லை.

இன்னுஞ் சிலர் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளுக்குக் குருந்த மரத்தடியில் சிவபெருமான் குருவாயெழுந்தருளிய காலை அவர் கையிலிருந்த புத்தகம் சிவஞானபோத மென்று

கடவுண்மாமுனிவர் கூறியதைப்பெரிய பிரமாணமாக எடுத்துரைப்பார். அக் கடவுண்மாமுனிவர்தாமும் சிவபெருமான் வைத்திருந்த சிவஞானபோதம் இரௌரவத்தின் பகுதியென்று தெரிவிக்கவில்லை. கடவுண்மாமுனிவர் காலம் சந்தானகுரவர் காலத்திற்கு மிகவும் பிந்தியது. அவர் நூலுட் குறித்த சிவஞானபோதம் ஆசிரியர் மெய்கண்டார் மொழிபெயர்த்த சிவஞானபோதமென்பதற்குப் பிரமாணமில்லை. கடவுள் குருவடிவமாக எழுகின்றகாலை தமது திருக்கையொன்றில் ஏடுவைத்திருத்தல் அவர்கொண்ட திருமேனியின் இலக்கணத்தின்பாற் படும். அதனை ஒரு சாரார் வேதமென்பர். ஒரு சாரார் ஆகமமென்பர். ஒரு சாரார் சிவஞானபோதமென்பர். அவர் கூறுவனவெல்லாவற்றிற்கும்பொருள் அபரஞானக்குறி என்பதே கருத்தாகக் கொள்க. "சீதளப் பளிக்குமேனியும்" என்ற திருவிளையாடற் செய்யுளில் வேத புத்தகம் என்ற வாக்கியங் காணப்படுகின்றது. அச்சொற்றொடரைக்கேட்ட துணையானே வைதிகர்கள் சிவபெருமான் திருக்கையில் வைத்திருந்தது 'எங்கள் வேதமே, எங்கள் வேதமே' என்று முழங்குதல் கூடும். வேதத்திற்குப் பொருளருளிச் செய்ய முன்வந்த பெருமான் எப்படித்தன் கையிலுள்ள வேதத்தை விரித்து ஒவ்வொரு சொல்லிற்கும் பொருள் கூறவில்லையோ அவ்வாறே அவர் குருந்தமரத்தடியில் எழுந்தபோதும் மணிவாசகப் பெருமானுக்குச் சிவஞான போதத்திலுள்ள பன்னிரண்டு சூத்திரங்களையும் விரித்துப் பொருள் கூறவில்லை. ஆதலால் அவர் திருக்கையிலிருந்த திருவேடு ஸ்ரீ மெய்கண்டார் இயற்றிய நூலிற்கு முதனூலென்று கொள்ளப் போதிய சான்றில்லை. எவ்வா

றாயினும் அது இரௌரவப் பகுதியென்று கொள்ளுதற்குப் பிரமாணம் யாது மின்மை யறிக. இதுகாறுங் கூறியவற்றால் திருக்கைலாய பரம்பரையில் வந்த ஞான நெறியினை ஆசிரியர் மெய்கண்டார் உணரப்பெற்றுச் சிவஞானபோத நூலினை முதன் முதலில் இயற்றியருளினாரென்பதும், அவர் காலத்திலும் ஏனைச்சந்தான ஆசாரியர் காலத்திலும் அது மொழிபெயர்ப்பு நூல் என்ற கொள்கை ஏற்படவில்லையென்பதும், அவர்கள் காலத்திற்குப் பின்னே வடமொழியிற் சிவஞானபோதம் மொழிபெயர்க்கப்பட்ட தென்பதும், அதற்கு அவ்வடமொழிச் சிவஞானபோதத்தின் இறுதிச் சுலோகத்தின் இறுதி யடியே தக்க சான்றாகுமென்பதும், சிவஞானபோத நூலே திருக்கைலையிலிருந்து வந்ததென்று கோடல் உமாபதிசிவாசாரியர் கூறிய நூன்மரபொடு முரண்படு மென்பதும், அக்கொள்கையை ஒருவாறு வலியுறுத்தும் சிவஞானபோதத்துச் சிறப்புப்பாயிரச் செய்யுட்கள் எழுந்தபின்னையே இரௌரவாகமப் பகுதியொன்று வடமொழிச் சிவஞான போதத்தைத் தன்னகத்துக் கொள்ளும் வண்ணம் ஏற்பட்டிருத்தல் கூடுமென்பதும், அந்த இரௌரவத்தைத் தழுவிய சிவாக்கிரயோகிகள் காலந் தொட்டே ஸ்ரீமெய்கண்டாரது சிவஞானபோதம் மொழிபெயர்ப்பென்ற பொய்க் கொள்கை உறுதிப்பட்டதென்பதும், அதற்குப்பின்னே வந்த கடவுண்மாமுனி முதலியோர் அக் கொள்கையை ஒருவாறு தழுவினரென்பதும், பின்னர் சிவஞான பாடியத்திலே அது இடம்பெற்றுத் தமிழ் மக்களால் அதற்குப் பின்னே சிலகாலத்திற்கு முன்வரை நம்பப்பட்டதென்பதும் உய்த்துணரப்படும்.

தமிழ்ச் சிவஞானபோதம் முதனூ லல்லவென்ற தப்புக்கொள்கையை நிலை நாட்ட முன்வந்தாருள் மிக்க ஊக்கங்காட்டினவர் காலஞ்சென்ற யாழ்ப்பாணம் திருவாளர் சபாரத்ன முதலியார் என்பார். அவர் கூறு முதற்காரணம் அந்நூல் மொழிபெயர்ப்பென்ற கொள்கை பரம்பரைக் கொள்கை என்பதே. முன்னுள்ள உண்மையை மறைத்துப் பின் ஏற்பட்ட கொள்கையைப் பரம்பரைக் கொள்கையென்று கூறுவது சைவப் பெருநெறிக்கு இடையூறு விளைவிக்க சில நூற்றாண்டுகட்கு முன் எழுந்த ஏகான்மவாதத்தைக் கைக்கொண்ட நம்மவரிற் சிலர் அவ்வேகான்மவாதமே பரம்பரைச் சமயமென்றும் சைவசித்தாந்தம் நேற்று வந்ததென்றும் குழறுவதை யொக்கும். இது சரித்திர வாராய்ச்சியின்மையான் வந்த இழுக்கு. சந்தானகுரவருள் இறுதியில் நின்ற ஸ்ரீஉமாபதிசிவத்தின் காலத்தே சிவஞான போதம் மொழிபெயர்ப்பு என்ற கொள்கை கிடையாது என்று மேலே காட்டினோம். அதற்குப்பின் ஏற்பட்ட கொள்கையைத் திருவாவடுதுறை ஆதீனத்தார் கைப்பற்றிக் கொண்டால் அது எவ்வாறு பரம்பரைக் கொள்கையாகும்?

இனி முதலியார் அகச்சாட்சியத்தைப் பற்றிப் பேசுவதாக முன் வந்து, 'மலர்தலையுலகின்' என்று தொடங்குஞ் செய்யுளில் "நந்திமுனிகணத் தளித்த உயர் சிவஞானபோத முரைத்தோன்" என்ற வாக்கியத்தையும் மற்றொருவிடத்தில் 'நந்தி யளித்த ஞான நூல்' என்ற வாக்கியத்தையும் எடுத்துக் காட்டுகின்றார். அவ்வாக்கியங்கள் உமாபதிசிவாசாரியர் காலத்திற்குப் பிறபட்டிருத்தல் வேண்டுமென்று

முன்னே காட்டப்பட்டது. அவைகளுள் ஸ்ரீ மெய்கண்டார் நூல் வடநூலின் மொழிபெயர்ப்பு என்று காட்டுவதற்குச் சொல்லில்லை. நந்தி சொன்ன நூலென்று கேட்டவுடனே அது வடமொழியிற்றானிருக்கவேண்டு மென்றும், 'உரைத் தார்' என்றதற்கு மொழிபெயர்த்தார் என்பது பொருளென் றுங் கூறுவது மிகத் தவறாகும். நந்திபெருமான் கூறியதை மெய்கண்டார் 'உரைத்தார்' என்ற விடத்து இருவரும் அச்செய்யுளின்படி வெவ்வேறு மொழியில் பேசினார்கள் என்று கருதுகிறவர்கள் சதாசிவமூர்த்தியிடத்தி லிருந்து ஆகமங்களை அனந்ததேவர் கேட்டு ஸ்ரீகண்டருத்திரர்க் குரைப்ப, ஸ்ரீகண்டர் கணங்கட்கும் முனிவருக்கும் அவற் றை அளித்தபோது அனந்தர் பேசிய மொழி வேறு, ஸ்ரீ கண்ட ருத்திரர் பேசிய மொழி வேறு, முனிவருந்தேவரும் வழங்கிய மொழி வேறு, என்று கூறாது எல்லாரும் வட மொழியிலேதான் பேசினார்கள் என்று கொள்ளுவதெப்படி? வடமொழியிலே ஆகமமிருத்தலினாலே அங்ஙனங் கூறலா மென்றால், தமிழிலே சிவஞானபோத மிருத்தலினாலே, நந்திபெருமானும் தமிழிலேயே பேசினாரென்று ஏன் கூறக் கூடாது? வடமொழியிலுஞ் சிவஞானபோதம் இருக்கிற தென்றால் அது தமிழினின்று மொழி பெயர்த்ததென்று சரித்திரவாராய்ச்சியால் மேலே விளக்கப்பட்டது. தமிழி லுள்ள ஆத்திசூடி கொன்றைவேந்தன் முதலிய நூல்களை வடமொழியில் மொழிபெயர்த்தவர் தமது மூலத்தைக் கூறாதுவிட்டால் ஆத்திசூடியுங் கொன்றைவேந்தனுமே மொழி பெயர்ப்பு நூலாமென்று குருட்டு நம்பிக்கையுள்ள தமிழர் கூத்தாடுவதியல்பே. ஆனால் அது உண்மைக்கு

விரோதமா மன்றோ ? இவ்வாறுதான், கபடமும் அறிவு முள்ள மக்கள் கபடமும் அறிவுமில்லாத மக்களைத் தமது வஞ்சனையால் எளிதில் வென்றுவிடுவார்கள். இச்சூழ்ச்சி களை வெளிப்படுத்தித் தொலைக்கவே சரித்திர வாராய்ச்சி முறை மிகவும் பயன்படுகின்றது.

முதலியாரது மூன்றாவது போலிக் காரணமென்ன வென்றால் சிவஞான போதத்தில் வடசொற்கள் காணப்படு கின்றன என்பது. இது ஒரு காரணமாகுமா? அப்படி யானால் வடசொற்கள் சிறுபான்மையுடைய **தேவார திருவா சக** முதலிய எல்லா நூல்களையுமே மொழிபெயர்ப்பு என்று கூறநேரும். முதலியாரைப் போன்ற தப்பு வழக்காளிகள் அத்தகைய கூற்றையும் நிலைநாட்ட முன்வருவார்கள். அவ ரைப்பற்றிப் பேசிப் பயனென்?

நான்காவது காரணம் மந்திரங்கள் வடமொழியிலுள் ளன. அவற்றையும் அவற்றின் கருத்தையும் **சிவஞான போதம்** விளக்குதலால் சிவஞானபோதம் மொழிபெயர்ப்பு என்பதே. மேற்காட்டிய காரணம்போல் இதுவும் தள்ளத் தக்கதே. மந்திரமென்பதின் இயல்பே இன்னதென்று அறியாது, ஆசிரியர் **தொல்காப்பியர்** முதலியோர் தமிழில் மந்திரமுண்டு என்று கூறிய உண்மையையு மறியாது, தமிழானது மந்திரத்திற்குரிய மொழி யல்லவென்று தம் அறியாமையைப் புலப்படுத்தியதே நாம் அவர்பால் இரங்கத்தக்க செய்கையாம். மந்திரம் யாவும் தமிழ்க்கே யுரியன என்பதைப்பற்றிப் பிறிதொரு இடத்திற் கூறப் பட்டது. ஈண்டு விரிவஞ்சி விடுக்கின்றோம். அவர் கூறிய வண்ணமே அவை வடமொழியிலிருந்தாலும் அவற்றை

விளக்குவான் புகுந்த ஆசிரியர் தமிழில் முதனூல் செய்ய வியலாது என்று யூகிப்பதெப்படி ? ஏதாவது ஒரு மந்திர நூலின் மொழிபெயர்ப்பாக சிவஞானபோதத்தைக் கூற முடியுமா ? சிவாகமங்கள் பல மெய்கண்டார் நூலுக்கு முன்னிருந்தமையாலே அவற்ரோடு ஒத்த கருத்தை யுடைய சிவஞானபோதத்தை அவற்றின் மொழிபெயர்ப்பு என்று எவ்வாறு கூற முடியும்? ஆங்கிலத்தில் ஒருவர் இந்துதேச சரித்திரத்தை முதன்முதல் எழுதினால் அவர்கூறுஞ் செய்திகள் இந்திய நாட்டில் நிகழ்ந்தன எனலாமே யொழிய முதன் முதற் செய்யும் ஆங்கில சரித்திரத்திற்கு இந்திய நாட்டிலுள்ள வடமொழியில் மூலமிருக்க வேண்டுமென்று சொல்லுவதெவ்வாறு பொருந்தும்? ஆனால் முதலியாரது மனப்போக்குள்ளவர்கள் பின்னுள்ள யாவும் முன்னுள்ளவற்றின் மொழிபெயர்ப்பென்று கூறத்தொடங்குவார்கள். அங்ஙனமாயின் மொழிபெயர்ப்பு இலக்கணம் யாதுதானென்பது துணிய விடமில்லை. கண்ணனது கீதை மொழிபெயர்ப்பு கிறிஸ்துவின் மலைப்பிரசங்கமென்றும், வடமொழி நீதிசாரத்தின் மொழிபெயர்ப்பு தமிழ் ஆத்திசூடி கொன்றைவேந்தன் முதலியவென்றும், கோரானின் (Quoran) மொழிபெயர்ப்பு விவிலியநூல் (Bible) என்றும், திருவள்ளுவரின் மொழிபெயர்ப்பு உரோமாபுரியிலிருந்த மார்க்கஸ் அரீலியஸ் (Marcus Aurelius) என்பவர் கட்டுரையென்றுங் கூறநேரும்.

முதலியாரது திரிபுணர்ச்சி இதனோடும் நிற்கவில்லை. ஏனெனில், 'சிவஞானபோதத்தை இறைவன் ஆகமங்களூட் புகட்டிவைத்திலனேல் அது அவர் காருண்ணியத்திற்குப் பெருங்குறைவு நாட்டிவிடும்' என்று குழறுகிறார். இவர்

தேவார திருவாசகங்களுக்கு மூலநூல் ஒன்றினை வட மொழி வேதத்துள்ளே சிவபெருமான் புகுத்திவையாத தற்கு அக்கடவுளை குறைகூறத் துணியாத காரண மென்னே விளங்கவில்லை. சிவஞானபோதக் கருத்துக்கள் தேவார திருவாசகத்துள்ளுங் காணப்படுகின்றன. கருத் துக்கள் உலகில் நிலவுமாயின் அவற்றை நூலுள் வகுத் தமைத்த பெருமை கூட ஆசிரியர் மெய்கண்டார்க்கு உள்ள தென்று ஒப்புக்கொள்ள மனக்கோட்டமுடைய முதலி யார்க்கு முடியாத தொன்றே. ஆகமத்தில் சிவஞானபோதத் தைச் சிவபெருமான் அமைக்காவிட்டால் மொழிபெயர்ப்பு மாத்திரஞ் செய்ய ஆற்றலுடைய ஸ்ரீ மெய்கண்டார் தமது நூலியற்றத் திண்டாடித் திகைத்திருப்பார் போலும். இஃது எவ்வளவோர் அறியாமை! இப்படிப்பட்ட அபிப்பிராயங் கள் நகைத்தற்கிடந்தருமே யன்றிப் பிறிதென்னும்.

இனி, ஆசிரியர் ஸ்ரீ மெய்கண்டார் இருவகைப் பாச் செய்யுட்களாலும் உரைச்செய்யுளாலும் நூலியற்றினமை யால் அது மொழிபெயர்ப்பா மென்பது முதலியாருடைய அடுத்தபோலிக் காரணமாகும். பல்வகை யாப்பானும் ஒரு நூல்செய்யப் படலாமென்பதற்குப் போதிய எடுத்துக்காட் டுக்கள் உள்ளன. உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்பது ஒருவகைத் தமிழிலக்கிய விசேட மென்பதனை இவர் உணர்ந்திலர் போலும். இதனை ஸ்ரீலஸ்ரீ சுவாமி வேதாசலம் அவர்களும் நன்கு விளக்கி முதலியாரை மறுத் திருக்கின்றார்கள். சிலப்பதிகார முதலிய பெருங்காப்பியங் களையும் நால்வர் நான்மணி மாலை முதலிய பிரபந்தங்களை

யும் உற்று நோக்குவார் முதலியாரது போலிக்காரணத்தைத் தள்ளி ஒதுக்குவாரென்பது திண்ணம்.

சிவஞான சித்தியாருள் நூல் வழி கூறும் திருப்பாட்டைத் தமக்கு ஆதாரமாகப் பொருள் படுத்துகின்றார் முதலியார். அது தவறென்பதை முன்னே காட்டினோம். இவண் விரிக்கவேண்டியதில்லை. அஃதன்றி எல்லா நூல்களும் 'அருமறை ஆகமத்தே அடங்கு' மென்று சொன்ன வாக்கியத்தை எடுத்துக்கொண்டு அதனாற் சிவஞானபோதமும் மொழி பெயர்ப்பே என்கின்றார். அருமறை யாகமங்களனைத்திற்கும் மூலநூல்கள் தமிழிலே இருந்தன வென்றும் அவையெல்லாம் உளவாதற்குக் காரணமாகிய ஓங்காரம் தமிழெழுத்துக்கூறி அதனாலே சிவஞானபோதம் தமிழிலேயே யுள்ளது என்று பதில் விடுத்தலே முதலியார் கடாவிற்குத் தக்க விடையாகும்.

இறுதியாக, முதலியார் கூறுவதாவது தமிழிலே சிவஞானபோத மிருந்திருந்தால் மெய்கண்டார் காலத்திற்கு முன்னேயே அது தமிழ் இலக்கியத்தில் ஒன்றாக விருக்க வேண்டுமென்கிறார். நந்தி பெருமான் கைலையிலுள்ளவர். அவரிடமிருந்து சிவஞானபோதம் மெய்கண்டதேவருக்கு வந்ததென்று விளக்குவான் தாம் எடுத்துக்காட்டிய மேற் போந்த செய்யுட்களை நம்புவாராயின், அந் நூல் நிலவுலகத்திலே தமிழ் நாட்டிலே தமிழிலக்கியத்தோடு ஒன்றாயிருத்தல் வேண்டுமென்று குழறுவதற்கு என்ன நியாயம் புகல்வார்? இதனால் இவருக்குத் தாமெடுத்துக் காட்டிய செய்யுட்கள் கூறும் வரலாற்றில் நம்பிக்கையில்லை யென்பதே தெளிவாகும்.

தன் கண்ணிலே இருக்கின்ற உத்திரத்தை எடுக்க முயலாமல் அயலார் கண்ணிலேயுள்ள துரும்பைப் பார்த்து இரங்குவதுபோல அறியாமைபற்றி வந்த தனது அபி மானக் கொள்கையைக் கைவிடாது தமிழாராய்ச்சி வல்லோ ரைத் துரபிமானிகளென்று முதலியார் இகழ்வது மிக அழகாயிருக்கிறது. ஆசிரியர் சிவாக்கிரயோகிகளது வாக்கி யத்தையும் அவர்க்குப் பின்வந்த உரையாசிரியர்கள் கூறிய வாக்கியங்களையும் கடவுண்மா முனிவர் கூறியவற்றையும் காலஞ்சென்ற சேந்திநாதய்யர் வசனத்தையும் பிரமாண மாக எடுத்துக்கொண்டு தன் கொள்கையை நாட்ட முயல் கின்றார். அவற்றிற்கெல்லாம் முன்னமே விடைகூறினும். வடமொழியில் சிவஞானபோத மிருத்தலே ஒரு காரண மாகக் கூறுவது எட்டுணையும் பொருந்துவதன்றென்பதை யும் முதற்கண் காட்டினும். இதுகாறுங் கூறியவாற்றால் சபாரத்னமுதலியார் எடுத்துக்கூறிய காரணங்கள் யாவும் அவரது கொள்கையை நிலை நாட்டும் வலியுடையன வல்லவென்பது போதரும். ஈண்டுக் கூறியனயாவும் முத லியாரோடு ஒத்த கொள்கையையுடைய திருவாளர் பொ. முத்தையபிள்ளை யவர்கள் விடுத்த 'போலிக் கார ணங்களையுங் கண்டித்தொதுக்கப் பயன்படும்.

மெய்கண்ட சாத்திரம்-௧

# திருவுந்தியார்

திருவியலூர்

உய்யவந்ததேவநாயனார்

உ

திருச்சிற்றம்பலம்

# திருவுந்தியார்

அகளமா யாரு மறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
 தானாகத் தந்ததென் றுந்தீபற. க

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
யுழப்புவ தென்பெணே யுந்தீபற
 வொருபொரு ளாலேயென் றுந்தீபற. உ

கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவர்
பிண்டத்தில் வாராரென் றுந்தீபற
 பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற. ந

எங்ங னிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகே
னங்ங னிருந்ததென் றுந்தீபற
 வறியு மறிவதன் றுந்தீபற. ச

ஏகனு மாகி யநேகனு மானவ
னாதனு மானனென் றுந்தீபற
 நம்மையே யாண்டானென் றுந்தீபற. ரு

நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்னாதன்
றன்செய லானேயென் றுந்தீபற
 தன்னையே தந்தானென் றுந்தீபற. சு

உள்ள முருகி லுடனாவ ரல்லது
தெள்ள வரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற. ௭

ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தேசெல்க வுந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற. ௮

ஆக்கிலங் கேயுண்டா யல்லதங் கில்லையாய்ப்
பார்க்கிற் *பரமதென் றுந்தீபற
பாவனைக் கெய்தாதென் றுந்தீபற. ௯

அஞ்சேயஞ் சாக வறிவே யறிவாகத்
துஞ்சா துணர்ந்திருந் துந்தீபற
துய்ய பொருளீதென் றுந்தீபற. ௰

தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பர
நோக்கிற் குழையுமென் றுந்தீபற
நோக்காம னோக்கவென் றுந்தீபற. ௰௧

மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென் றுந்தீபற
தவத்திற் றலைவரென் றுந்தீபற. ௰௨

ஓட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித்
தேட்டற் றிடஞ்சிவ முந்தீபற
தேடு மிடமதன் றுந்தீபற. ௰௩

பற்றை யறுப்பதோர் பற்றினைப் பற்றிலப்
பற்றை யறுப்பரென் றுந்தீபற
பாவிக்க வாராரென் றுந்தீபற. ௰௪

---

* பரமதன்று என்பதும் பாடம்.

கிடந்த கிழவியைக் கிள்ளி யெழுப்பி
யுடந்தை யுடனேநின் றுந்தீபற
வுன்னையே கண்டதென் றுந்தீபற. ௰௫

உழவா துணர்கின்ற யோகிக ளொன்றோடுந்
தழுவாம னிற்பரென் றுந்தீபற
தாழ்மணி நாவேபோ லுந்தீபற. ௰௬

திருச்சிலம் போசை யொலிவழி யேசென்று
நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற
நேர்பட வங்கேநின் றுந்தீபற. ௰௭

மருளுந் தெருளு மறக்கு மவன்க
ணருளை மறவாதே யுந்தீபற
வதுவேயிங் குள்ளதென் றுந்தீபற. ௰௮

கருது வதன்முன் கருத்தழியப் பாயு
மொருமகள் கேள்வனென் றுந்தீபற
வுன்ன வரியனென் றுந்தீபற. ௰௯

இரவு பகலில்லா வின்ப வெளியூடே
விரவி விரவிநின் றுந்தீபற
விரைய விரையநின் றுந்தீபற. ௨௰

சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்
கல்லது யாதுமென் றுந்தீபற
வம்பிகை பாகனென் றுந்தீபற. ௨௧

காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினு
ளாற்றுவ தாற்றலென் றுந்தீபற
வல்லாத தல்லவென் றுந்தீபற. ௨௨

கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்
வெள்ள வெளியாமென் றுந்தீபற
வீடு மெளிதாமென் றுந்தீபற. ௨௩

எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண் டேநின்றார்
விட்டா ருலகமென் றுந்தீபற
வீடேவீ டாகுமென் றுந்தீபற. ௨௪

சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
யொத்ததே யொத்ததென் றுந்தீபற
வொவ்வாத தொவ்வாதென் றுந்தீபற. ௨௫

உள்ளும் புறம்பு நினைப்பறி னுன்னுள்ளே
மொள்ளா வமுதாமென் றுந்தீபற
முளையாது பந்தமென் றுந்தீபற. ௨௬

அவிழ விருக்கு மறிவுட னின்றவர்க்
கவிழுமிவ் வல்லலென் றுந்தீபற
வன்றி யவிழாதென் றுந்தீபற. ௨௭

வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்
பித்தேறி னார்களென் றுந்தீபற
பெறுவதங் கென்பெணே யுந்தீபற. ௨௮

சொல்லு மிடமன்று சொல்லப் புகுமிட
மெல்லை சிவனுக்கென் றுந்தீபற
வென்றானு மென்செய்கோ முந்தீபற. ௨௯

வீட்டி லிருக்கிலென் னாட்டிலே போகிலென்
கூட்டில்வாட் சாத்திநின் றுந்தீபற
கூடப் படாததென் றுந்தீபற. ௩௰

சாவிபோ மற்றச் சமயங்கள் புக்குநின்
ரூவி யருதேயென் றுந்தீபற
வவ்வுரை கேளாதே யுந்தீபற. ௰௧

துரியங் கடந்தவித் தொண்டர்க்குச் சாக்கிரந்
துரியமாய் நின்றதென் றுந்தீபற
துறந்தா ரவர்களென் றுந்தீபற. ௰௨

பெற்றசிற் றின்பமே பேரின்ப மாமங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது மாயையென் றுந்தீபற. ௰௩

பேரின்ப மான பிரமக் கிழத்தியோ
டோரின்பத் துள்ளானென் றுந்தீபற
வுன்னையே யாண்டா னென்றுந்தீபற. ௰௪

பெண்டிர் பிடிபோல வாண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டாரென் றுந்தீபற
காணாதார் காணாரென் றுந்தீபற. ௰௫

நாலாய பூதமு நாதமு மொன்றிடி
ஞலா நிலையாமென் றுந்தீபற
நாதற் கிடமதென் றுந்தீபற. ௰௬

சென்ற நெறியெல்லாஞ் செந்நெறி யாம்படி
நின்ற பரிசறிந் துந்தீபற
நீசெயல் செய்யாதே யுந்தீபற. ௰௭

பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதெ
னக்கொழு நீயறிந் துந்தீபற
வறிந்தறி யாவண்ண முந்தீபற. ௰௮

அதுவிது வென்று வனைத்தறி வாரு
மதுவிது வென்றறிந் துந்தீபற
வவிழ்ந்த சடையாரென் றுந்தீபற. ௩௯

அவனிவ னான தவனருளா லல்ல
திவனவ னாகானென் றுந்தீபற
வென்று மிவனேயென் றுந்தீபற. ௪௰

முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்ததென் றுந்தீபற
வப்பழ முண்ணாதே யுந்தீபற. ௪௧

அண்ட முதலா மனைத்தையு முட்கொண்டு
கொண்டத்தைக் கொள்ளாதே யுந்தீபற
குறைவற்ற செல்வமென் றுந்தீபற. ௪௨

காயத்துண் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற
வறட்டுப் பசுக்களென் றுந்தீபற. ௪௩

சிந்தையி னுள்ளுமென் சென்னியி னுஞ்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்தீபற
மடவா ளுடனேயென் றுந்தீபற. ௪௪

வைய முழுது மலக்கயங் கண்டிடு
முய்யவந் தானுரை யுந்தீபற
வுண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற. ௪௫

மெய்கண்ட சாத்திரம்-௨

# திருக்களிற்றுப்படியார்

திருக்கடவூர்

**உய்யவந்ததேவநாயனார்**

உ

திருச்சிற்றம்பலம்

# திருக்களிற்றுப்படியார்

அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக
வம்மையப்ப ரப்பரிசே வந்தளிப்ப-ரம்மையப்ப
ரெல்லா வுலகுக்கு மப்புறத்தா ரிப்புறத்து
மல்லார்போ னிற்பா ரவர். ௧

தம்மிற் றலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்
தம்மிற் றலைப்படுத ருமுணரிற்-றம்மி
னிலைப்படுவ ரோரிருவர் நீக்கிநிலை யாக்கித்
தலைப்படுவர் தாமத் தலை. ௨

என்னறிவு சென்றளவில் யானின் றறிந்தபடி
யென்னறிவி லாரறிக வென்றொருவன்-சொன்னபடி
சொல்லக்கே ளென்றொருவன் சொன்னா னெனக்கதனைச்
சொல்லக்கே ணுனக்கச் சொல். ௩

அகளமய மாய்நின்ற வம்பலத்தெங் கூத்தன்
சகளமயம் போலுலகிற் றங்கி-நிகளமா
மாணவ மூல மலமகல வாண்டனன்காண்
மாணவக வென்னுடனாய் வந்து. ௪

ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
யோகங்க ளெங்கே யுணர்வெங்கே-பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு. ரு

சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே *வாய்க்குநலம் வந்துறுமே-யார்த்தகடற்
றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாயிதனைச் செப்பு. சு

இன்று பசுவின் மலமன்றே யிவ்வுலகி
னின்ற மலமனைத்து நீக்குவதிங்-கென்று
முருவுடையா னன்றே யுருவழியப் பாயு
முருவருளா வல்லா னுரை. எ

கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரே
யண்டத்த தப்புறத்த தென்றுதே-யண்டத்தி
னப்புறமு மிப்புறமு மாரறிவுஞ் சென்றறியு
மெப்புறமுங் கண்டவர்க ளின்று. அ

அன்றுமுத லாரேனு மாளா யுடனாகிச்
சென்றவர்க்கு மின்னதெனச் சென்றதில்லை-யின்றிதனை
யெவ்வா றிருந்ததென் றெவ்வணஞ் சொல்லுகே
னவ்வா றிருந்த தது. கு

ஒன்றுங் குறியே குறியாத லாலதனுக்
கொன்றுங் குறியொன் றிலாமையினு-லொன்றோ
டுவமிக்க லாவதுவுந் தானில்லை யொவ்வாத்
தவமிக்கா ரேயிதற்குச் சான்று. ய

* வாய்த்தவளம் என்பதும் பாடம்.

ஆற்று லலைகடற்கே பாய்ந்தநீ ரந்நீர்மை
மாற்றியவ் வாற்றான் மறித்தாற்போற்-றேற்றிப்
புலன்களெனப் போதம் புறம்பொழியி னந்த
மலங்களற மாற்றுவிக்கும் வந்து. மக

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனையன் றேவிக் கராங்கொண்ட-பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண். மஉ

தூங்கினரைத் தூய சயனத்தே விட்டதற்பின்
றூங்களே சட்ட வுறங்குவர்க-ளாங்கதுபோ
லைய னருட்கடைக்க ணண்டதற்பி னப்பொருளாய்ப்
பைய விளையுமெனப் பார். மங

உள்ள முதலனைத்து மொன்ற வொருவரி
னுள்ள முருகவந் துன்னுடனாந்-தெள்ளி
யுணருமவர் தாங்க ளுளராக வென்றும்
புணருவா னில்லாப் பொருள். மச

நல்லசிவ தன்மத்தா னல்லசிவ யோகத்தா
னல்லசிவ ஞானத்தா னழியும்-வல்லதனா
லாரேனு மன்புசெயி னங்கே தலைப்படுங்கா
ணாரேனுங் காணா வரன். மரு

மெல்வினையே யென்ன வியனுலகு ளோர்க்கரிய
வல்வினையே யென்ன வருமிரண்டுஞ்-சொல்லிற்
சிவதன்ம மாமவற்றிற் சென்றதிலே *செல்வார்
பவகன்ம நீங்கும் படி. மசு

---

* செல்வாய் என்பதும் பாடம்.

ஆதியை யர்ச்சித்தற் கங்கமு மங்கங்கே
நீதி றிறம்பலவுஞ் செய்வனவும்-வேதியனே
நல்வினையா மென்றே நமக்குமெளி தானவற்றை
மெல்வினையே யென்றதுநாம் வேறு. ௰எ

வரங்கடருஞ் செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினு லன்றுகறி யாக்க-விரங்காதே
கொல்வினையே செய்யுங் கொடுவினையே யானவற்றை
வல்வினையே யென்றதுநா மற்று. ௰அ

செய்யி லுகுத்த திருப்படி மாற்றதனை
யைய விதுவமுது செய்கென்று-பையவிருந்
தூட்டி யறுத்தவற்கே யூட்டி யறுத்தவரை
நாட்டியுரை செய்வதென்னோ நாம். ௰கூ

பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டுஞ்-சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
தண்டீசர் தஞ்செயலாற் றான். உ௰

செய்யுஞ் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தார் பரங்கெட்டா-ரையா
வுழவுந் தனிசு மொருமுகமே யானு
விழவுண்டோ சொல்லா யிது. உக

ஆதார யோக நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே-யாதாரத்
தாக்கும் பொருளாலே யாக்கும் பொருளாமொன்
றாக்காப் பொருளேயொன் றாம். உஉ

ஆக்கி யொருபொருளை யாதாரத் தப்பொருளை
நோக்கி யணுவி லணுநெகிழப்-பார்க்கி
லிவனாகை தானொழிந்திட் டேகமா மேகத்
தவனாகை யாதார மாம். உ௩

கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயிற்
கொண்டதுவு மப்பரிசே கூறுபடுங்-கொண்ட
விருபொருளு மன்றியே யின்னதிது வென்று
தொருபொருளே யாயிருக்கு முற்று. உ௪

அஞ்செழுத்து மேயம்மை யப்பர்தமைக் காட்டுதலா
லஞ்செழுத்தை யாறாகப் பெற்றறிந்தே-யஞ்செழுத்தை
யோதப்புக் குள்ள மதியுங் கெடிலுமைகோன்
கேதமற வந்தளிக்குங் கேள். உ௫

ஆக்கப் படாத பொருளா-யனைத்தினிலுந்
தாக்கித்தா னொன்றோடுந் தாக்காதே-நீக்கியுட
னிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்
நிற்கை நிராதார மாம். உ௬

காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற யோகிகளே
காண்கின்றார் காட்சியறக் கண்ணுதலைக்-காண்கின்றார்
காண்பானுங் காணப் படும்பொருளு மன்றியே
காண்கையினாற் கண்டனரே காண். உ௭

பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெருமான்-பேசாதே
யெண்ணொன்றும் வண்ண மிருக்கின்ற யோகிகள்பா
லுண்ணின்றும் போகா னுளன். உ௮

ஓட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித்
தேட்டற்று நின்ற விடஞ்சிவமா-நாட்டுற்று
நாடும் பொருளனைத்து நானு விதமாகத்
தேடுமிட மன்று சிவம். உக

பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
பற்றைப் பரிந்திருந்து பார்க்கின்ற-பற்றதனைப்
பற்றுவிடி லந்நிலையே தானே பரமாகு
*மற்றமிது சொன்னே னறி. ௩0

உணராதே யாது முறங்காதே யுன்னிற்
புணராதே நீபொதுவே நிற்கி-லுணர்வரிய
காலங்கள் செல்லாத காத லுடனிருத்தி
காலங்கண் மூன்றினையுங் கண்டு. ௩க

அறிவறிவாய் நிற்கி லறிவுபல வாமென்
றறிவி னறிவவிழ்த்துக் கொண்ட-வறிவினராய்
வாழ்ந்திருப்பர் நீத்தோகண் மானுடரின் மாணவகா
தாழ்ந்தமணி நாவேபோற் றன். ௩உ

ஓசையெலா மற்ற லொலிக்குந் திருச்சிலம்பி
னோசை வழியேசென் றுத்தொடங்கி-லோசையினி
லந்தத்தா னத்தா னரிவையுட னம்பலத்தே
வந்தொத்தா னத்தான் மகிழ்ந்து. ௩௩

†சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னென்றமையாற்
‡சார்புணர்த லேனே தியானமுமாஞ்-சார்பு
கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று. ௩௪

---

* மற்றுமிது சொன்னேன் மதி என்பதும் பாடம்.

† குறள். மெய்யுணர்தல். க. ‡ சார்புணர்வு தானே எ-ம் பாடம்.

அன்றிவரு மைம்புலனு நீயு மசையாதே
நின்றபடி யேநிற்க முன்னிற்கு-ஞ்சென்று
கருதுவதன் முன்னங் கருத்தழியப் பாயு
மொருமகடன் கேள்வ னுனக்கு. நடு

உண்டெனி லுண்டாகு மில்லாமை யில்லையெனி
னுண்டாகு மானமையி லோரிரண்டா-முண்டில்லை
யென்னு மிவைதவிர்ந்த வின்பத்தை யெய்தும்வகை
யுன்னிலவ னுன்னுடனே யாம். நசு

தூல வுடம்பாய முப்பத்தோர் தத்துவமு
மூல வுடம்பா முதனான்கு-மேலைச்
சிவமாம் பரிசினையுந் தேர்ந்துணர்ந்தார் சேர்ந்த
பவமாந் துரிசறுப்பார் பார். நஎ

எத்தனையோ தத்துவங்க ளெவ்வெவகோட் பாடுடைய
வத்தனையுஞ் சென்றங் களவாதே-சித்தமெனுந்
தூதுதனைப் போக்கிப்போய்த் தூக்கற்ற சோதிதனிற்
பாதிதனைக் கும்பிடலாம் பார். நஅ

சாம்பொழுதி லேதுஞ் சலமில்லை செத்தாற்போ
லாம்பொழுதி லேயடைய வாசையறிற்-சோம்பிதற்குச்
சொல்லுந் துணையாகுஞ் சொல்லாத தூய்நெறிக்கட்
செல்லுந் துணையாகுஞ் சென்று. நகூ

* வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்
வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது-வேண்டினது
* வேண்டாமை வேண்டவரு மென்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால். ௩0

---

* திருக்குறள். அவாவறுத்தல். உ

அரண வுணர்வுதனி லவ்வுணர்வை மாற்றிற்
காணமுங் காலுங்கை கூடும்-புரணமது
கூடாமை யுங்கூடுங் கூடுதலுங் கூட்டினுக்கு
வீட்டாமை யுங்கூடும் வந்து. சக

இன்றிங் கசேதனமா மிவ்வினைக ளோரிரண்டுஞ்
சென்று தொடருமவன் சென்றிடத்தே-யென்றுந்தான்
நீத்துறுவ னாற் * சிவபதிதான் கைவிடுமோ
மாதொருகூ றல்லனோ மற்று. சஉ

அநாதி சிவனுடைமை யாலெவையு மாங்கே
யநாதியெனப் பெற்ற வனுவை-யநாதியே
யார்த்த துயரகல வம்பிகையோ டெவ்விடத்துங்
காத்த லவன்கடனே காண். சந

தம்மிற் சிவலிங்கங் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன்பான் மஞ்சனநீர் தாமாட்டித்-தம்மையொரு
பூவாக்கிப் பூவழியா மற்கொடுத்துப் பூசித்தா
லோவாமை யன்றே யுளன். சச

தன்னைப் பெறுவதன்மேற் பேறில்லை தானென்றுந்
தன்னைத்தான் பெற்றவன்றா னொன்னிற்-றன்னாலே
யெல்லாந்த னுட்கொண்டுகொண்டதனைக் கொள்ளாதே
யெல்லாமாய் நிற்கு மிவன். சரு

துன்பமா மெல்லாம் பரவசனாய்த் தான்றுவளி
லின்பமாந் தன்வசனா யேயிருக்கி-லென்பதனா
னின்வசனா யேயிருக்கி னின்னுடனா நேரிழையா
டன்வசனா யேயிருப்பன் றான். சசா

---

* சிவாபதி என்பதும் பாடம்.

செத்தாரே கெட்டார் காணங்கள் சேர்ந்ததனோ
டொத்தாரே யோகபா ரானவர்க-ளொத்தாலு
மாராத வக்காணத் தார்ப்புண்டிங் கல்லாதார்
போராமற் செல்வாதன் பின். சஎ

கண்ணுங் கருத்துங் கடந்ததொரு பேற்றையுங்
கண்ணுங் கருத்துங் களிகூர-நண்ணி
வடமடக்கி நிற்கும் வடவித்தே போல
வுடனடக்கி நிற்பர்கள்கா ணுற்று. சஅ

வானகமு மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை
யூனகத்தே யுன்னுமதெ னென்றனையே-லேனகத்து
வாதனையை மாற்றும் வகையதுவே மண்முதலா
வாதனமே யன்றோ வதற்கு. சகூ

கல்லிற் கமரிற் கதிர்வாளிற் சாணையினில்
வல்லுப் பலகையினில் வாதனையைச்-சொல்லு
மகமார்க்கத் தாலவர்கண் மாற்றினர்கா ணையா
சகமார்க்கத் தாலன்றே தான். ருo

உள்ளும் புறம்பு நினைப்பொழியி லுன்னிடையே
வள்ள லெழுந்தருளு மாதிறெறுநெஞ்-செதள்ளி
யறிந்தொழிவா யன்றியே யன்புடையை யாயிற்
செறிந்தொழிவா யேதேனுஞ் செய். ருக

* கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக்-கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லாறுமற்
றியாமறியு மன்பன் றது. ருஉ

---

* திருவாசகம், திருக்கோத்தும்பி. ௪.

அவிழ்ந்த துணியி லவிழ்ந்த வவிழை
யவிழ்ந்த மனத்தா லவிழ்க்க-வவிழ்ந்தசடை
வேந்தனுர்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பிற்
சேர்ந்தனுர் செய்த செயல். ௫௩

சுரந்த திருமுலைக்கே தூய்ய*சிவ ஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்-சுரந்த
தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருந்த வாறு. ௫௪

அன்பேயென் னன்பேயென் றன்பா லழுதரற்றி
யன்பேயன் பாக வறிவழியு-மன்பன்றித்
தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்வதெல்லாஞ்
சாற்றும் பழமன்றே தான். ௫௫

எல்லா ரறிவுகளின் ருற்பரிய மென்னறிவு
செல்லு மிடத்தளவுஞ் சென்றறிந்தேன்-வல்லபடி
வாதனையை மாற்றும் வகையிதுவே மற்றவற்று
ளோதமறக் கண்ட திது. ௫௬

வித்துமத னங்குரமும் போன்றிருக்கு மெய்ஞ்ஞானம்
வித்துமத னங்குரமு மெய்யுணரில்-வித்ததனிற்
காணுமை யாலதனைக் கைவிடுவர் கண்டவர்கள்
பேணுமை யாலற்ருர் பேறு. ௫௭

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று நானென்று-நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
தலையன் றடியன்று தான். ௫௮

* திருஞானம் என்பதும் பாடம்.

செய்யாச் செயலையவன் செய்யாமற் செய்ததனைச்
செய்யாச் செயலிற் செலுத்தினு-லெய்யாதே
மாணவக வப்பொழுதே வாஞ்சைக் கொடிவளர்க்கு
மாணவமு மற்ற தறி. ௫௯

ஏதேனுங் காலமுமா மேதேனுந் தேசமுமா
மேதேனுந் திக்கா சனமுமா-மேதேனுஞ்
செய்தா லொருவனுமாஞ் செய்யாச் செயலதனைச்
செய்யாமற் செய்யும் பொழுது. ௬0

செய்தற் கரிய செயல்பலவுஞ் செய்துபல
ரெய்தற் கரியதனை யெய்தினர்க-ளேயோநாஞ்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு. ௬௧

இப்பொருள்க ளியாதேனு மேதேனு மொன்றுசெய்த
லெப்பொருளுஞ் செய்யா தொழிந்திருத்தன்-மெய்ப்பொருளைக்
கண்டிருத்தல் செய்யாதே கண்ட மனிதரெலா
முண்டிருப்ப தென்னோ வுரை. ௬௨

வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றானு
நாட்டிலே நல்வினைகள் செய்தாலுங்-கூட்டில்வாட்
சாத்தியே நின்றிலையேற் றக்கனார் வேள்விசெய்த
மாத்திரமே யாங்கண்டாய் வந்து. ௬௩

சிவன்முதலே யன்றி முதலில்லை யென்றுஞ்
சிவனுடைய தென்னறிவ தென்றுஞ்-சிவனவனை
தென்செயல தாகின்ற தென்று மிவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான். ௬௪

இன்றிச் சமயத்தி னல்லதுமற் றேழையுட
னொன்றுசொலி மன்றத்து நின்றவரா-ரின்றிங்கே
யங்க முயிர்பெறவே பாடு மடியவரா
ரெங்குமிலை கண்டா யிது. ௬௫

விரிந்துங் குவிந்தும் விழுங்குவர்கண் மீண்டுந்
தெரிந்துந் தெரியாது நிற்பர்-தெரிந்துந்
தெரியாது நிற்கின்ற சேயிழைபா லென்றும்
பிரியாது நின்றவனைப் பெற்று. ௬௬

ஆதனமு மாதனியு மாய்நிறைந்து நின்றவனைச்
சேதனனைக் கொண்டே தெளிவுற்றுச்-சேதனனைச்
சேதனனி லேசெலுத்திச் சிற்பரத்த ராயிருப்ப
ரேதமறக் கண்டவர்க ளின்று. ௬௭

தாமடங்க விந்தத் தலமடங்குந் தாபதர்க
டாமுணரி லிந்தத் தலமுணருந்-தாமுனியிற்
பூமடந்தை தங்காள் புகழ்மடந்தை போயகலு
நாமடந்தை நில்லா ணயந்து. ௬௮

துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான்-றுரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளு
மாக்குவிப்ப னன்பர்க் கவன். ௬௯

ஓடஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்த-லேடெதிர்வெப்
பென்புக் குயிர்கொடுத்த லீங்கிவைதா மோங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல். ௭௰

கொல்கரியி னீற்றறையி னஞ்சிற் கொலைதவிர்தல்
கல்லே மிதப்பாய்க் கடனீந்த-னல்ல
மருவார் மறைக்காட்டின் வாசறிறப் பித்த
*திருவாமூ ராளி செயல். ௭௧

மோக மறுத்திடினு முத்தி கொடுப்பதென
வாகமங்கள் சொன்ன வவர்தம்மைத்-தோகையர்பாற்
றூதாகப் போகவிடும் வன்றொண்டன் றொண்டுதனை
யேதாகச் சொல்வே னியான். ௭௨

பாய்பரியோன் றந்த பரமானந் தப்பயனைத்
தூயதிரு வாய்மலராற் சொற்செய்து-மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தேன். ௭௩

அம்மையிலு மிம்மையிலு மச்சந் தவிர்த்தடியா
ரெம்மையுமா மெங்கு மியங்குதலான்-மெய்ம்மைச்
சிவயோக மேயோக மல்லாத யோக
மவயோக மென்றே யறி. ௭௪

மன்னனரு ளெவ்வண்ண மானுடர்பான் மாணவக
வன்ன வகைய தானருளு-முன்னி
லடியவரே யெல்லாரு மாங்கவர்தா மொப்பி
லடியவரே யெல்லா மறி. ௭௫

உடம்புடைய யோகிகடா முற்றசிற் றின்ப
மடங்கத்தம் பேரின்பத் தாக்கத்-தொடங்கி
முளைப்பதுமொன் றில்லை முடிவதுமொன் றில்லை
யிளைப்பதுமொன் றில்லை யிவர். ௭௬

* திருவாகீ சன்றன் செயல் என்பதும் பாடம்.

பேரின்ப மான பிரமக் கிழத்தியுட
ஞேரின்பத் துள்ளானை யுள்ளபடி-பேரின்பங்
கண்டவரே கண்டார் கடலுயிர்த்த வின்னமுத
முண்டவரே யுண்டார் சுவை. எஎ

நங்கையினு ளுமைக்குஞ் செய்தாற்போ னுடனைத்து
நங்கையினற் செய்தளிக்கு நாயகனு - நங்கையினு
நம்பியாய்த் தானடுவே நாட்டப் பெறுமிதுகா
ணெம்பெருமா னர்த மியல்பு. எஅ

பொன்னிறங் கட்டியினும் பூணினு நின்றாற்போ
லந்நிற மண்ணலு மம்பிகையுஞ் - செந்நிறத்த
ளெந்நிறத்த ளாயிருப்ப ளெங்கள் சிவபதியு
மந்நிறத்த னுயிருப்ப னுங்கு. எகூ

தாரத்தோ டொன்றாவர் தாரத்தோர் கூறாவர்
தாரத்தோ டெங்குந் தலைநிற்பர் - தாரத்தி
னுதாந்தத் தேயிருப்பர் *நற்றானத் தேயிருப்பர்
வேதாந்தத் தேயிருப்பர் வேறு. அ0

ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்க ளொன்றாக
நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவா - லின்றுரைக்க
வென்னு லியன்றிடுமோ வென்போல்வா ரேதேனுஞ்
சொன்னுற்றா னேறுமோ சொல். அக

யாதேனுங் காரணத்தா லெவ்வுலகி லெத்திறமு
மாதேயும் பாக னிலச்சினையே - யாதலினற்
பேதமே செய்வா யபேதமே செய்திடுவாய்
பேதாபே தஞ்செய்வாய் பின். அஉ

---

* நாற்றானத்தே யிருப்பர் என்பதும் பாடம்.

நின்றபடி நின்றவர்கட் கன்றி நிறந்தெரியா
மன்றினுணின் றுடன் மகிழ்ந்தானுஞ்-சென்றுடனே
யெண்ணுறுமைம் பூதமுத லெட்டுருவாய் நின்றானும்
பெண்ணுறநின் றாடும் பிரான். அ௩

சிவமே சிவமாக யானினைந்தாற் போலச்
சிவமாகி யேயிருப்ப தன்றிச்-சிவமென்
றுணர்வாரு மங்கே யுணர்வழியச் சென்று
புணர்வாரு முண்டோ புவி. அ௪

அதுவிது வென்று மவனானே யென்று
மதுநீயே யாகின்ற யென்று-மதுவானே
னென்றுந் தமையுணர்ந்தா ரெல்லா மிரண்டாக
வொன்றாகச் சொல்வரோ வுற்று. அ௫

* ஈறாகி யங்கே முதலொன்றா யீங்கிரண்டாய்
மாறாத வெண்வகையாய் மற்றிவற்றின்-வேறா
யுடனா யிருக்கு முருவுடைமை யென்றுங்
கடனா யிருக்கின்றான் காண். அ௬

உன்னுதரத் தேகிடந்த கீட முறுவதெல்லா
முன்னுடைய தென்னாநீ யுற்றனையோ - மன்னுயிர்க
ளவ்வகையே காணிங் கழிவதுவு மாவதுவுஞ்
செவ்வகையே நின்றசிவன் பால். அ௭

அவனே யவனி முதலாயி னானு
மவனே யறிவாய்நின் றானு - மவனேகா
ணாகிப் பெண்ணா யலியாகி நின்றானுங்
காணாமை நின்றானுங் கண்டு. அ௮

* திருஞான. தேவாரம். திருவீழிமிழலை. பண் நட்டபாடை. உ.

இன்றுதா னீயென்னைக் கண்டிருந்துங் கண்டாயோ
வன்றித்தா னுன்னைக் கண்டேனோ-வென்று
லருமாயை யீன்றவடன் பங்கனையார் காண்பார்
பெருமாயச் சூழல் பிழைத்து. அசு

கடலலைத்தே யாடுதற்குக் கைவந்து நின்றுங்
கடலளக்க வாராதாற் போலப்-படியி
லருத்திசெய்த வன்பரைவந் தாண்டதுவு மெல்லாங்
கருத்துக்குச் சேயனாய்க் காண். கய

*சிவனெனவே தேறினன்யா னென்றமையா லின்றுஞ்
சிவனவனி வந்தபடி செப்பி-லவனிதனி
லுப்பெனவே கூர்மை யுருச்செய்யக் கண்டமையா
லப்படியே கண்டா யவன். கக

அவனிவனாய் நின்ற தவனருளா லல்ல
தவனவனாய் நிற்கின்ற தேழா-யவனிதனிற்
றோன்றுமரப் புல்லூரி தொல்லுலகி லம்மரமா
யீன்றிடுமோ சொல்லா யிது. கஉ

முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்த தருளென்னுங்-கத்தியினன்
மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கு
மேகக் கொடியெழுங்கா ணின்று. கங

அகளத்தி லானந்தத் தானந்தி யாயே
சகளத்திற் றையலுடன் றோன்றி-நிகளத்தைப்
போக்குவதுஞ் செய்தான்றன் பொன்னடியென் புன்றலைமே
லாக்குவதுஞ் செய்தா னவன். கச

* திருவாசகம். திருவண்டப்பகுதி. அடி. சுஉ.

குற்றமறுத் தென்னையாட் கொண்டருளித் தொண்டனே
னுற்ற தியானத் துடனுறைவர்-முற்றவரின்
மாட்சியுமாய் நிற்பரியான் மற்றொன்றைக் கண்டிடினக்
காட்சியுமாய் நிற்பார் கலந்து. ௯௫

ஆளுடையா னெந்தரமு மாளுடையா னேயறியுந்
தாளுடையான் றொண்டர் தலைக்காவ-லாளுந்
திருவியலூ ராளுஞ் சிவயோகி யின்றென்
வருவினைசளை மாற்றினான் வந்து. ௯௬

நூலத் தடுத்த பளிங்கின் றுளக்கமெனத்
தூலத்தே நின்று துளங்காமற்-காலத்தாற்
றூளைத்தந் தென்பிறவித் தாளை யறவிழித்தார்க்
காளன்றி யென்மா றதற்கு. ௯௭

இக்கணமே முத்தியினை யெய்திடினு மியானினைந்த
வக்கணமே யானந்தந் தந்திடினு-நற்கணத்தார்
நாயகற்கு நாயகிக்கு நானடிமை யெப்பொழுது
மாயிருத்த லன்றியிலே னியான். ௯௮

என்னை யுடையவன்வந் தென்னுடனா யென்னளவி
லென்னையுந்தன் னாளாகக் கொள்ளுதலா-லென்னை
யறியப்பெற் றேனறிந்த வன்பருக்கே யாளாய்ச்
செறியப்பெற் றேன்குழுவிற் சென்று. ௯௯

சிந்தையிலு மென்றன் சிரத்தினிலுஞ் சேரும்வகை
வந்தவனை மண்ணிடைநாம் வாராமற்-றந்தவனை
மாதினுட னெத்திறமும் வாழ்ந்திருக்க வென்பதலா
லேதுசொலி வாழ்த்துவே னின்று. ௱

---

உ

திருச்சிற்றம்பலம்

# சிறப்புப்பாயிரம்

## நேரிசை யாசிரியப்பா

மலர்தலை யுலகின் மாயிரு டமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

உ

திருச்சிற்றம்பலம்

# சிவஞான போதம்

## மங்கல வாழ்த்து

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

## அவையடக்கம்

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

# க. பொதுவதிகாரம்

## க. பிரமாணவியல்

### முதற் சூத்திரம்

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

**கருத்துரை:**—என்னுதலிற்றோவெனின், சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாக வுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துத னுதலிற்று.

**உரை வகை:**—இதன் பொழிப்பு உரைத்துக் கொள்க.

### முதலதிகரணம்

**மேற்கோள்:**—ஈண்டு, உளதாய் ஒருவனொருத்தியொன் றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத் தென்றது.

**ஏது:**—தோற்றமு மீறும் உள்ளதன்பாலே கிடத்தலின்.

உதாரணம்:—

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—ேைதாரோ
வொன்றொன்றிற் றோன்றி யுளதா யிறக்கண்டு
மன்றென்று முண்டென்ன வாய்ந்து.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள்:—இனி, ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி யில்லை யென்றது.

ஏது:—இல்லதற்குத் தோற்ற மின்மையின், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின்.

உதாரணம்:—

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும்—இலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு.

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்றா ணிற்ற லவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனா மப்புழுப்போல் வேண்டுருவந் தான்கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
றாக்காது நின்றுளத்திற் கண்டிறைவ—னாக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணாக்
கண்டவனி லிற்றின்றாங் கட்டு.

## மூன்றாமதிகரணம்

மேற்கோள்:—இனி, சங்காரமே முதலென்றது.

ஏது:—சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.

உதாரணம்:—

ஒன்றலா வொன்று முளதாகி நின்றவா
றொன்றலா வொன்றிலவை யீறாத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு.

---

## இரண்டாஞ் சூத்திரம்

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை—என்னுதலிற்றோ வெனின், புனருற்பவம் வருமாறுணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

மேற்கோள்:—ஈண்டு, இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்றானேயாய் நிற்குமென்றது.

ஏது:—அத்துவிதமென்ற சொல்லானே ஏகமெனில், ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவித மென்ற சொல்லே அந்நியநாத்தியை யுணர்த்துமாயிட்டு.

உதாரணம்:—

கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள
மிட்டதொரு பேரமைக்க வென்னென்றுங்—கொட்டி
யவனுளமா கில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா யல்லனுமா மங்கு.

ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளகா—ணொன்றின்று
லக்கரங்க ளின்று மகர வுயிரின்றே
லிக்கிரமத் தென்னு மிருக்கு.

பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா— மண்ணரு
ளத்துவித மாத லருமறைக ளொன்றென்று
தத்துவித மென்றறையு மாங்கு.

அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்
யானே யுலகென்ப னின்று.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள்:—இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வ னாணையின் வருமென்றது.

ஏது:—ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினை யாகலான்.

உதாரணம்:—

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று.

அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போ—லவ்வினையைப்
போராம லூட்டும் பிராணி னுகராரே
லார்தா மறிந்தணைப்பா ராங்கு.

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.

## மூன்றாமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது.

**ஏது:**—தோற்றமு மீறும் உள்ளதற் கல்லது உளதாதலின்மையான்.

**உதாரணம்:**—

கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினாற்—கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான்.

அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு
பாகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது.

## நான்காமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது.

**ஏது:**—அவன் ஏகாநேக மிரண்டு மின்றிச் சருவவியாபியாய் நிற்றலான்.

உதாரணம்:—

எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னி
லெங்கு முளனன் றெவற்றெவனு—மங்க
ணவையவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீச
னவையுடைமை யாளாநா மங்கு.

---

## மூன்றாஞ் சூத்திரம்

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை:—என்னுதலிற்றோ வெனின், ஆன்மப் பிரகாசமுணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:—ஈண்டு, *இலதென்றலின் ஆன்மா வுளதென்றது.

பொழிப்புரை:—எவற்றினையும் அன்றன் றெனவிட்டு ஆன்மா இலதென்று நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

---

* "ஈண்டு மேற்கோளொன்றாயினும் எழுவகை மதங்களை வேறுவேறு மறுக்கும் ஏதுக்களேழாகலான், ஆன்மா வுளதென்று

உதாரணம்:—

> அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
> நின்றொன் றுளததுவே நீயனைத்து—நின்றின்று
> தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
> தற்பரமு மல்லை தனி.

## இரண்டாமதிகரணம்

**மேற்கோளும் ஏதுவும்:**—இனி, எனதுடலென்றலின் ஆன்மாவுள தென்றது.

**பொழிப்புரை:**—என்பதி என்மனை யென்றாற்போல என்கை என்காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

உதாரணம்:—

> எனதென்ற மாட்டி னெனதலா தென்று
> துனதலா துன்கைகால் யாக்கை—யெனதென்று
> மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா
> ணுன்னிலவை வேறா முணர்.

## மூன்றாமதிகரணம்

**மேற்கோளும் ஏதுவும்:**—இனி, ஐம்புலனறிதலின் ஆன்மாவுள தென்றது.

---

மேற்கோள் அவற்றொடு தனித்தனி கூட்டியுரைக்கப்பட்டு ஏழதிகரணமாயிற்று இச்சூத்திரமென் றுணர்க. இச்சூத்திரத்திற்கூறிய ஏதுவே ஏது மேற்கோளு மதுவே யாகலின், ஏனைச் சூத்திரங்களுட் போல வேறே ஏதுக்கூறவேண்டாமையின் இவை ஏதுவாமாறும் இவற்றான் மேற்கோளைச் சாதிக்குமாறும் விளங்க வுணர்த்தி வலியுறுத்துதன் மாத்திரையே இவ்வதிகரணங்களுட் கூறப்படுவதென்க"—என்பது ஸ்ரீ பாஷ்யம்.

பொழிப்புரை:—ஐம்புலனாகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின் இவ்வைந்தினாலும் ஐம்பயனு மறிவதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது.

உதாரணம்:—

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனாய வஞ்செழுத்தை—யொன்றறித
லுள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லை யோர்.

## நான்காமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:—இனி, ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென்றது.

பொழிப்புரை:—கனவின்கட் கனவு கண்டாமென்றுங் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது.

உதாரணம்:—

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி—யவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுட னீயல்லை மற்று.

## ஐந்தாமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:—இனிக் கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மாவுளதென்றது.

பொழிப்புரை:—ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பஞ் சீவனம் பிரகிருதிக் கின்மையின் ஒடுங்காதவிடத்து துன்பஞ் சீவியா நிற்பதுள தாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

உதாரணம் :—

*கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணாதே*
*யுண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்—கண்டறியு*
*முள்ளம்வே றுண்டா மொடுங்கா துடனண்ணி*
*லுள்ளதா முண்டிவினை யூன்.*

## ஆறுமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :—இனி, உணர்த்தவுணர்தலின் ஆன்மா வுளதென்றது.

பொழிப்புரை:—அவன் அறிந்தாங் கறிவனென் றறிவிக்க வறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான் மாவா மென்றது.

உதாரணம் :—

*அறிந்து மறிவதே யாயு மறியா*
*தறிந்தையும் விட்டங் கடங்கி—யறிந்த*
*ததுவறியு மன்றாகு மெய்கண்டா ஞன்றி*
*னதுவதுதா னென்னு மகம்.*

## ஏழாமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :—இனி, மாயா வியந்திர தநுவினுள் ஆன்மாவுள தென்றது.

வேறும் ஓர் ஏது :—அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்ற லான்.

உதாரணம் :—

*கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை*
*நிலையாவாந் தீபமே போல—வலையாமன்*
*ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லதுதநுவாந்*
*தானத்தின் வேறாகுந் தான்.*

# உ. இலக்கணவியல்

## நான்காஞ் சூத்திரம்

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேப்பநின் றஞ்சவத் தைத்தே

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

**கருத்துரை** :—என் னுதலிற்றோ வெனின், இதுவு மது.

### முதலதிகரணம்

**மேற்கோள்** :—ஈண்டு, இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களா யுள்ள மனோ புத்தி யகங்கார சித்தங்களி லொன்றன் றென் றது.

**ஏது** :—அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்ற லான்.

**உதாரணம்** :—

மனமாதி யாலுணர்தன் மன்னு புலன்கள்
மனமாதி மன்புலனி னல்லன்—மனமே
லுதித்தொன்றை யுள்ள முணர்த லதனி
லுதிக்குங் கடற்றிரையை யொத்து.

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதா யாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறு
மவ்வேறும் போதுபோ லாங்கு.

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்து—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்தொடு நாதத்துக்—கண்ணிற்
பகரயன்மா லோடு பரம னதிதெய்வ
மகரவுக ரம்மகரத் தாம்.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :—இனி, இவ்வான்மாச் சகச மலத்தி னுணர்வின் றென்றது.

ஏது :—அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக்கொடு நிற்ற லான்.

உதாரணம்:—

மாயா தநுவிளக்கா மற்றுள்ளங் காணாதே
லாயாதா மொன்றை யதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றாங் காட்டம்போற்
றன்னைமல மன்றணைத லான்.

## மூன்றாமதிகரணம்

மேற்கோள் :—இனி, இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்கு மென்றது.

ஏது :—அதுதான் மல சொரூபத்தின் மறைந்து அரூப சொரூபி யாய் நிற்றலான்.

உதாரணம் :—

ஒன்றணையா மூலத் துயிரணையு நாபியினிற்
சென்றணையுஞ் சித்த மிதயத்து—மன்றவே
யையைந்தா நன்னுதலிற் கண்டத்து வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள
மிலாடத்தே யைந்தவத்தை யெய்து—மிலாடத்தே
யவ்வவ விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
யவ்வவற்றி னீங்கலது வாங்கு.

---

## ஐந்தாஞ் சூத்திரம்

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :—என்னுதலிற்றோ வெனின், இவ்வான்மாக்களிடத்துத் தமது முதலுபகார முணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

மேற்கோள் :—ஈண்டு, ஐயுணர்வுகள் ஆன்மாவா லுணருமென்றது.

ஏது :—அவற்றினான் ஆன்மா ஒற்றித்துக் காணினல்லது அவை ஒன்றையும் விடயியாவாகலான்.

உதாரணம் :—

ஐம்பொறியை யாண்டங் கரசா யுளநிற்ப
வைம்பொறிக ளுள்ள மறியாதா—மைம்பொறியிற்
காணாதேற் காணாது காணுமுளங் காணாதேற்
காணாகண் கேளா செவி.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :—இனி, இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது.

ஏது :—இவ்வான்மாத் தன்றாலே யுணரு மிந்திரியங்களைப் போலத் தானுந் தன்னை யுணராது நிற்றலான்.

உதாரணம் :—

மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த
தென்னு மறையி னியன்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணா வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா
ணெண்ணான் சிவனசத்தை யின்று.

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்
கண்டுடனாய் மன்னுதலைக் காண்.

அருளுண்டா மீசற் கதுசக்தி யன்றே
யருளு மவனன்றி யில்லை—யருளின்
றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமா னேய்ந்து.

## ஆறாஞ் சூத்திரம்

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :—சத்து மசத்தும் வரைசெய் துணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

மேற்கோள் :—ஈண்டு, அறிவினு லறியப்பட்ட சுட்டு அசத்தென்றது.

ஏது :—அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

உதாரணம் :—

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா
மசத்தாகு மெய்கண்டா னுயின்—அசத்தலாய்
நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரினவை யின்றாமா றுப்பு.

### இரண்டாமதிகரணம்

மேற்கோள் :—இனி, இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்று உணரற்பாற்று.

ஏது :—பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவ தின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாச மின்மையானும்.

**உதாரணம் :—**

எண்ணிய சத்தன் றசத்தன்றா மென்றாலென்
கண்ணி யுளதென் றன் மெய்கண்டா—னெண்ணி
யறிய விரண்டா மசத்தாதல் சத்தா
மறிவறியா மெய்சிவன்றா னாம்.

உணர்ப வசத்தாத லொன்றுணரா தொன்றை
யுணருநீ தானுணரா யாயி—லுணருமுனிற்
றனிரண்டா மெய்கண்டான் றன்னூ லுணர்தலாற்
றனிரண்டாய்க் காணுன் றமி.

பாவகமேற் றனசத்தாம் பாவநா தீதமெனிற்
பாவகமா மன்றென்னிற் பாழுதுவாம்—பாவகத்தைப்
பாவித்த றனென்னிற் பாவகமாந் தன்னருளாற்
பாவிப் பதுபாமில் பாழ்.

அறிய விரண்டல்ல னுங்கறிவு தன்னு
லறியப் படானறிவி னுள்ளா—னறிவுக்குக்
காட்டாகி நின்றனைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு.

அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
யதுவென் றறியறிவு முண்டே—யதுவென்
றறிய விரண்டல்ல னுங்கறிவு ணிற்ற
லறியுமறி வேசிவமு மாம்.

# உ. உண்மை யதிகாரம்

## ௩. சாதனவியல்

### ஏழாஞ் சூத்திரம்

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை:—என்னுதலிற்றோ வெனின், மேலதற்கோர் புற னடை யுணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

மேற்கோள்:—ஈண்டுச், சத்தினிடத் தசத்துப் பிரகாசியா தென்றது.

ஏது:—மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிறறலான்.

உதாரணம்:—

அந்நியமி லாமை யாற்கொன் றுணர்வின்று
மந்நியமி லானசத்தைக் காண்குவனே—லந்நியமாக்
காணு னவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று.

## இரண்டாமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, அசத்தினுக் குணர்வின் றென்றது.

**ஏது:**— அது தான் நிரூபிக்கி லின்றாகலான்.

**உதாரணம்:**—

பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் காணு மசத்தின்மை
கண்டுணர்வா ரில்லதெனக் காண்.

## மூன்றாமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, * இருதிற னறிவுள திரண்டலா வான்மா வென்றது.

**பொழிப்புரை:**—இவ்விரண்டினையு மறிவதாய் உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டன்பாலு முளதாயுள்ள அதுவே அவ்வான் மாவா மென்றது.

**உதாரணம்:**—

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
வருவுருவ மன்றாகு முண்மை—யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் றாக்கு.

---

* "ஈண்டுச் சத்தெதிர் நில்லாத அசத்துஞ் சத்துந் தம்மு ளொன்றா னொன்றறியப் படாமையான் ஆன்மாவாலும் அறியப் படாதவழி அவை பயப்பாடின்றிச் சூனியமாய் முடியுமாகலான், இரண்டலா வான்மா இருதிற னறிவுளதேயாம்; தம்முளொன்றா னொன் றநுபவிக்கப்படாத ஞாயிற்றையும் விடயத்தையு மநுப விக்குங் கண்போலுமென அநுமானங் கூறிக்காண்க"—என்பது ஸ்ரீபாஷ்யம்.

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசி—லசத்துமலை
நீயறிந்து செய்வினைக ணீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்.

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத
லஞ்ஞான முள்ள மணைதல்காண்—மெய்ஞ்ஞானந்
தானே யுளவன்றே தண்கடனீ ருப்புப்போற்
றானே யுளாமுளவாய்த் தான்.

---

## எட்டாஞ் சூத்திரம்

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டந்நிய மின்மையி னரன்கழல் செலுமே

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

**கருத்துரை:**—என்னுதலிற்றோ வெனின், ஞானத்தினை யுணரு முறைமையினை உணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

**மேற்கோள்:**—ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானநிகழுமென்பது.

**ஏது:**—மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்.

**உதாரணம்:—**

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றார்சூழ் சொல்லுமாங் கண்டு.

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
மிசைத்து வருவினையி னின்ப—மிசைத்த
விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
மருவுவனா ஞானத்தை வந்து.

## இரண்டாமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, இவ்வான்மாக்களுக்குத் தமது முதறானே குருவுமாயுணர்த்து மென்றது.

**ஏது:**—அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.

**உதாரணம்:—**

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
னல்லா யுளவாமா னீர்நிழல்போ—லில்லா
வுருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று.

## மூன்றுமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மையுணராவென்றது.

**ஏது:**—அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம்போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.

**உதாரணம்:**—

பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.

## நான்காமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையு மென்றது.

**ஏது:**—ஊசல் கயிறற்றாற் றாய்தரையேயாந் துணையான்.

**உதாரணம்:**—

சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்வி ற்றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

எவ்வுருவுந் தானென்னி லெய்துவா ரில்லைதா
னிவ்வுருவின் வேறே யிறையல்ல—னெவ்வுருவுங்
கண்போ லவயவங்கள் காணுவக் கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல்.

ஐம்பொறியி னல்லையென வந்த தாசிவனை
யைம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி
னீங்கானீர்ப் பாசிபோ னீங்குமல கன்மம்வரி
னீஙகானை நீங்கு நினைந்து.

---

## ஒன்பதாஞ் சூத்திரம்

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

**கருத்துரை:**—என்னுதலிற்றோ வெனின், ஆன்மசுத்தி பண்ணு மா றுணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

**மேற்கோள்:**—ஈண்டு, அம்முதலை ஞானக் கண்ணினலே காண்க வென்றது.

**ஏது:**—அவன் வாக்குமனதீத கோசரமாய் நிற்றலான்.

**உதாரணம்:**—

நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை—நாடியான்
றன்னலே தன்னையுங் கண்டு தனைக்காணு
மென்று மெனவறிவா ரின்று.

காட்டிய கண்ணே தனைக்காணு கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணு—காட்டிய
வுள்ளந் தலைக்காணு வுள்ளத்தின் கண்ணுய
கள்வன்ரு னுள்ளத்திற் காண்.

## இரண்டாமதிகரணம்

**மேற்கோள்:**— இனி, * அசத்தாயுள்ள வன்னபேதங்களை! அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞானசொரூபமென் றுணரற்பாற்று.

**உதாரணம்:**—

நிர்க்குணனுய் நின்மலனுய் நித்தியா நந்தனுய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ
லானு வறிவா யளவிறந்து தோன்ருனே
வானே முதல்களையின் வந்து.

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட விளியுளது சத்தேகாண்—சுட்டி
யுணர்ந்தநீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனுற் பொய்விட்டுப் போம்.

கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தா
யண்டனை யான்மாவி லாய்ந்துணரப்—பண்டணைந்த
வூனத்தைத் தான்விடுமா றுத்தமனி றெண்கருட
சானத்திற் றீர்விடம்போற் ருன்.

---

* இதனுள் எது சொற்பல்காமைப் பொருட்டு ஏகதேச வுருவகமாக வைத்து உடம்பொடு புணர்த்து ஓதப்பட்டது. ஸ்ரீ பாஷ்யம் பார்க்க.

## மூன்றுமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க வென்றது.

**ஏது:**—இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கெனக் கொள்க.

**உதாரணம்:**—

அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
லண்டனுஞ் சேடனு மங்கு.

இந்துவிற் பானுவில் ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு—முந்தவே
காட்டாக்கிற் றேன்றிக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டானு மோதஞ் செழுத்து.

மண்முத னுளமலர் வித்தை கலாரூப
மெண்ணிய வீசர் சதாசிவமு—நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
நிலையதிலா மச்சிவன்றா னோர்.

# ௪. பயனியல்

## பத்தாஞ் சூத்திரம்

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

**கருத்துரை:**—என்னுதலிற்றோ வெனின், பாசக்ஷயம் பண்ணுமா றுணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

**மேற்கோள்:**—ஈண்டுப், பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்தேகனாகி நிற்க வென்றது.

**ஏது:**—அவ்வாறு நிற்கவே யானென தென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை யணையு மாகலான்.

**உதாரணம்:**—

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாத
லானெனவொன் றின்றியே தானதுவாய்—நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானா மிறை.

### இரண்டாமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, இறைபணி வழுவாது நிற்க வென்றது.

**ஏது:**—அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே அஞ்ஞானகன்மம் பிரவேசியாவாகலான்.

**உதாரணம்:—**

நாமல்ல விந்திரிய நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமு மானுடைமை—யாமென்னி
னொத்தநுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.

சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்ச்—சார்ந்தடியார்
தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்த
லாய்ந்தார்முன் செய்வினையு மாங்கு.

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபான்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
மாயையுட னில்லாது மற்றவன்றான் மெய்ப்பொருளே
யாயவத னாலுணரு மச்சு.

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினு—மெண்ணி
யரனடி யோர்பவ ரைம்புலனிற் சென்று
மவர்திற நீங்கா ரதற்கு.

சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணி
னிதமித்தல் பாசத்தி லின்றிக்—கதமிக்
கெரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்தி
னருகணையார் சத்தணைவா ராங்கு.

# பதினோராஞ் சூத்திரம்

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

**கருத்துரை:**—என்னுதலிற்றோ வெனின், பரமேசுரனது சீபாதங்களை யணையுமா றுணர்த்துத னுதலிற்று.

## முதலதிகரணம்

**மேற்கோள்:**—ஈண்டு, அவனும் அவற்றது விடயத்தை யுணருமென்றது.

**ஏது:**—இவ்வான்மாக்கள் அவனையின்றி யைமைந்தொன்றையும் விடயியாவாகலான்.

**உதாரணம்:**—

ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தையும்போ னின் றுணரு மாகலா—னைந்தினையு
மொன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு
மொன்றொன்றாப் பார்க்கு முணர்ந்து.

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினா—னேகமா
யுள்ளத்தின் கண்ணானு னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணானே வற்று.

## இரண்டாமதிகரணம்

**மேற்கோள்**:—இனிப், பத்தியினுன் மறவாதேத்த அவனது சீபா தத்தை யணையுமென்றது.

**ஏது**:--அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான்.

**உதாரணம்**:—

அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீச—னருட்கண்ணாற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோ
னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்.

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து—தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் றான்.

நசித்தொன்றி னுள்ள நசித்தலா லொன்றா
நசித்திலதே லொன்றாவ தில்லை—நசித்துமல
மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்
கப்பின்றா மீசன் கழல்.

பொன்வாண்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாந் தன்மைபோன்—முன்வாண்
மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணு
மலத்திரித்துச் செல்லும் வரத்து.

# பன்னிரண்டாஞ் சூத்திரம்

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

**கருத்துரை:**—என்னுதலிற்றோ வெனின், அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுமா றுணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

**மேற்கோள்:**—ஈண்டு, ஆணவ மாயை கான்மிய மென்னு மலங் களைக் களைக வென்றது.

**ஏது:**—அவைதாம் ஞானத்தையுணர்த்தாது அஞ்ஞானத்தை யுணர்த்து மாகலான்.

**உதாரணம்:**—

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமு
மண்முதன் மாயைகாண் மாயையுங்—கண்ணிய
வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்று
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

### இரண்டாமதிகரணம்

**மேற்கோள்:**—இனிச், சிவபத்தர்களோ டிணங்குக வென்றது.

**ஏது:**—அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவராகலான்.

**உதாரணம்:—**

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை—யறப்பித்துப்
பத்த ரினத்தனாய்ப் பரனுணர்வி னாலுணரு
மெய்த்தவரை மேவா வினை.

## மூன்றாமதிகரணம்

**மேற்கோள்:**—இனிப், பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக வென்றது.

**ஏது:**—அவன்மற் றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாத விடத் தப்பிரகாசமாய் நிற்றலான்.

**உதாரணம்:—**

தன்னுணர வேண்டித் தன்னுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற்—றன்னுணரு
நேசத்தர் தம்பா னிகழுந் ததிநெய்போற்
பாசத்தாற் கின்றாம் பதி.

கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதாமாற்—கண்டவுருத்
தானதுவா யன்றானன் றானதுவாய்த் தோன்றானே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு.

## நான்காமதிகரணம்

**மேற்கோள்:**—இனி, இவ்விடங்களின் வழிபடுக வென்றது.

**ஏது:**—நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும்புருடன் அவையாகாவாறு அப்புருடனு மாகலான்.

**உதாரணம்:—**

அதுவிது வென்ற ததுவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான்—பொதுவதனி
லத்துவித மாத லகண்டமுந் தைவமே
யத்துவிதி யன்பிற் றொழு.

வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதீரி னன்றி விளையா—வினைதீர
ஞானத்தை நாடித் தொழுவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றொழு.

தன்னை யறிவித்துத் தான்றானாச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னாச்செய்துந் தைவமென் றுந்தைவமே
மானே தொழுகை வலி.

## நூற்கு அதிகாரிகள்

சிவமென்னு மந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வா சகத்திற்—சிவமுண்டா
மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா
வின்றிந்நூன் மும்மை மலர்க்கு.

# சிறப்புப்பாயிரம்

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வேதுதிருட் டாந்தத்தா லின்று.

மெய்கண்ட சாத்திரம்-௪

# சிவஞானசித்தியார்
# பரபக்கம்

அருணந்தி சிவாசாரியர்

5

உ

திருச்சிற்றம்பலம்

# சிவஞானசித்தியார் பரபக்கம்

## கணபதி வணக்கம்

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த
னால்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
றருமொருவா ரணத்தின் றாள்க
ளுருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே
யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்றிருமால் செல்வமுமொன்
றோவென்னச் செய்யுந் தேவே.

## பாயிரம்

### சிவவணக்கம்

ஆதிநடு வந்தமிலா வளவில் சோதி
யருண்ஞான மூர்த்தியா யகில மீன்ற
மாதினையு மொருபாகத் தடக்கி வானோர்
மகுடசூ ளாமணியாய் வையம் போற்றப்
பாதிமதி யணிபவளச் சடைக டாழப்
படரொளியம் பலத்தாடும் பரனார் பாதத்
தாதுமலி தாமரைகள் சிரத்தே வைத்துத்
தளராத பேரன்பு வளரா நிற்பாம்.

## சத்திவணக்கம்

ஈசனரு ளிச்சையறி வியற்ற லின்ப
மிலயமொடு போகமதி கார மாகித்
தேசருவ மருவுருவ முருவ மாகித்
தேவியுமாய்த் தேசமொடு செல்வ மாகிப்
பேசரிய வுயிரையெலாம் பெற்று நோக்கிப்
பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட்
டாசகலு மடியருளத் தப்பனுட னிருக்கு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம். உ

## விநாயகர்வணக்கம்

இயம்புநூ லிருந்தமிழின் செய்யு ளாற்று
லிடையூறு தீர்ந்தினிது முடிய வேண்டித்
தயங்குபே ரொளியாகி யெங்கு நின்ற
தலைவனார் மலைமாது தன்னோ டாடிப்
பயந்தவைங் கரநாற்றோண் முக்கணிரு பாதப்
பரியவொரு நீள்கோட்டுப் பெரிய பண்டிக்
கயந்தனடிக் கமலங்க ளயந்து போற்றிக்
கருத்தினுற விருத்திமிகக் காதல் செய்வாம். ங

## குமாரக்கடவுள் வணக்கம்

அருமறையா கமமங்க மருங்கலைநூ றெரிந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங் குருவை
திருமறைமா முனிவர்முனி தேவர்கடந் தேவன்
சிவனருள்சேர் திருமதலை தவநிலையோர் தெய்வம்
பொருமறையார் கழல்வீரர் வீரன் கையிற்
பூநீர்கொண் டோவாது போற்றுமடி யவர்கள்
கருமறையா வகையருளிக் கதிவழங்குங் கந்தன்
கழலிணைக ளொஞ்சிர்த்திற் கருத்தில் வைப்பாம். சா

## குருவணக்கம்

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவிரு தயகமல முகைகளெல்லாங்
கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம். ௫

## அவையடக்கம்

மாலயன்மா மறையறியா வாதி மார்க்கம்
வையகத்தா கமவேத மற்று முள்ள
நூலெயெலா முணர்ந்திறைவன் கழலே நோக்கு
நோன்மையருந் தவர்முன்யா னுவலு மாறு
வேலையுலா வுந்திரைகள் வீசி யேறி
வேறேழு மொன்றாகி நின்ற போது
சாலவுமான் குளப்படியிற் றங்கி நின்ற
சலமதுதா னேரென்னுந் தன்மைத் தாலோ. ௬

## இதுவுமது

நீடுபுக ழுலகுதனின் மைந்தர் மாதர்
நேயமொடு தாம்பயந்த புதல்வர் வாயிற்
கூடுமொழி மழலையொடு குழறி யொன்றுங்
குறிப்பரிதா யிடினுமிகக் குலவிப் போற்றி
மாடுநமக் கிதுவென்று கொண்டு வாழ்வ
ரதுபோல மன்னுதமிழ்ப் புலமை யோரென்
பாடுகவிக் குற்றங்கள் பாரா ரிந்நூல்
பாராட்டா நிற்பருட் பரிசி னாலே. ௭

## நூற்சிறப்பு

சுத்தவடி வியல்பாக வுடைய சோதி
சொல்லியவா கமங்களெலாஞ் சூழப் போயு
மொத்துமுடி யுங்கூட வோரி டத்தே
யொருபதிக்குப் பலநெறிக ளுளவா றற்போற்
பித்தர்குண மதுபோல வொருகா லுண்டாய்ப்
பின்னொருகா லறிவின்றிப் பேதை யோராய்க்
கத்திடுமான் மாக்களுரைக் கட்டிற் பட்டோர்
கனகவரை குறித்துப்போய்க் கடற்கே வீழ்வார். அ

## நூற்கதிகாரியும் - நூல்வழியும் - நூற்பெயரும்

போதமிகுத் தோர்தொகுத்த பேதை மைக்கே
பொருந்தினோ ரிவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல
வேதநெறி யெனுமவர்கட் கறிய முன்னோ
னிறைவனரு ணந்திதனக் கியம்ப நந்தி
கோதிலருட் சனற்குமா ரர்க்குக் கூறக்
குவலயத்தி னவ்வழியெங் குருநாதன் கொண்டு
தீதகல வெமக்களித்த ஞான நூலைத்
தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி யென்றே. கூ

## நூற்கருத்து

இறைவனையு மிறைவனை வியம்பு நூலு
மீண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி
முறைமைகளும் பெத்தமொடு முத்தி யெல்லா
மூதுலகி லெமக்கியன்ற முயற்சி யாலே
சிறையுலவும் புனனிலவத் தோன்றும் பேய்த்தேர்ச்
செய்கைபோ லுண்டாய பொய்கொண் மார்க்கத்
துறைபலவுங் கடாவிடையாற் சொல்லிப் போக்கித்
துகடீர விந்நூலிற் சொல்ல கிற்பாம். ம

## நூல்

### உலகாயதன்மதம்

---

இந்திர புரோகித னியம்புமொரு நூலின்
றந்திர மெனுந்தறி விலோடரு ளிலாமற்
சந்தனை புயத்துமணை மாலைக டயங்க
வுந்தியுல கத்திலுல காயத னுரைப்பான். ௧

ஈண்டளவை காட்சிமன மாதியிரு மூன்றாய்
வேண்டுமனு மானமுத லானபல வேண்டா
பூண்டபொருள் பூதமவை புகழ்கடின சீதந்
தீண்டரிய வெம்மைசல னத்திஞெடு சேர்வே. ௨

சாற்றுபெய ரானவை தலம்புனல் கனற்பின்
காற்றுமென லாமிவை கலந்தகுண மோதி
ஞற்றமிர தம்முருவ நற்பரிச மாகும்
போற்றுமிவை நித்தவியல் பாமிவை புணர்ப்பே. ௩

ஒத்துறு புணர்ச்சியி னுருக்கள்பல வாகும்
வைத்துறு கடாதிபல மண்ணின்வரு மர்போற்
புத்திகுண நற்பொறி புலன்களிவை யெல்லா
மித்தில்வரு நீரினி லெழுங்குமிழி யொத்தே. ௪

பூதமதி ஞென்றுபிரி யப்புல னிறக்கு
நீதியினி னிற்பன நடப்பனவு முற்போ
லோதும்வகை யாகியுறு காரிய முலந்தா
லாதியவை யாமிதனை யறிவதறி வாமே. ௫

## வேறு

இப்படி யன்றிக் கன்ம முயிரிறை வேறுண் டென்று
செப்பிடு மவர்க்கு மண்ணோர் செய்திடுங் குற்ற மென்னோ
வொப்பிலா மலடி பெற்ற மகனொரு முயற்கொம் பேறித்
தப்பிலா காயப் பூவைப் பறித்தமை சாற்றி னாரே. ௬

செய்திடுங் கன்ம மெல்லாஞ் செய்தவர் தம்மைப் பற்றி
யெய்திடு மென்னி னிங்கே மாய்ந்திடு மேய்வ தெங்ஙன்
மெய்தரு தூலங் கெட்டுச் சூக்கமாய் மேவு மென்னி
லையனே தீபம் போனா லதனொளி யாவ துண்டோ. ௭

மாய்ந்துபின் வயலி லிட்ட வைதழை பலிக்கு மாபோ
லேய்ந்திடுங் கன்ம மென்னி லிட்டிடத் திசையு மேனி
யோய்ந்துவந் தவரை யுண்ணப் பண்ணுஞ்சோ றுதாத் தற்றால்
வாய்ந்திடும் பலம்வ யிற்றிற் கொண்டிடும் வழக்கு வைத்தாய். ௮

உருவமு முணர்வுஞ் செய்தி யொத்திரா கன்ம மென்னின்
மருவுகை விரல்க டம்மின் வளர்வுடன் குறைவுண் டாகி
வருவதிங் கென்ன கன்மஞ் செய்துமுன் மதியி லாதாய்
பெருகுபூ தங்க டம்மின் மிகுகுறைப் பெற்றி யாமே. ௯

இன்பொடு துன்ப மெல்லா மெய்துவ கன்ம மென்னி
னன்புனல் சந்தனாதி நணுகவு மணுக வொண்ணா
மின்பொலி யழலி னோடு மேவவு நன்மை தீமை
யென்செய்த தியம்பி டாய்நீ யிவையெலா மியல்ப தாமே. ௰

காயத்தின் குணம தன்றிக் கண்டதான் மாவுண் டாயின்
மாயத்திற் சொல்லி டாதே மனமுத லாறி னுக்கு
நேயத்த தாக வேண்டு மன்றியே நிகழ்த்து முண்மை
தேயத்தின் முயற்கொம் பெல்லை செப்புவோர் செய்தி யாமே. ௰௧

அருவமே யிறைவ னாகி லறிவின்று காய மாகு
முருவமே யென்னிற் பூதக் கூட்டத்தி னுருவ னாகு
மருவிய விரண்டுங் கூடி நிற்பவ னென்னின் மண்மே
லிருவிசும் பொருகல் லேந்தி நிற்குமோ வியம்பி டாயே. ௰உ

பூதத்தே யன்ன மாகி யன்னத்தா லுடம்பு புத்தி
பேதித்தே மனமு மாகிப் பிரிந்தமை திருந்த வின்று
வேதத்தே யுரைக்க வென்றே மேதினி யோர்க ளெல்லாங்
கேதத்தே வீழ்ந்து வேறு நெறியல கேட்கு மாறே. ௰௩

போகத்தை மண்ணிற் கண்டு விட்டுப்போய் விண்ணிற் கொள்ள
மோகத்த ராகி யல்லன் முயன்றுழன் மூட ரெல்லாந்
தாகத்திற் றண்ணீர் கண்டு விட்டுப்போய்த் தண்ணீர் கேட்டுச்
சோகித்தே யுண்ண வெண்ணித் துயருறு வார்க ளந்தோ. ௰௪

வாழ்வே வல்லை வாமி வலக்கைதா னென்று யிர்க்குத்
தோழனீ யுன்னை யொப்பார் சொல்லிடி னில்லை கண்டாய்
கோழைமா னுடர்தீ தென்னுங் கொலைகள வாதி கொண்டே
சூழும்வார் குழலார் மொய்ப்பச் சுடரெனத் தோன்றி னாயே. ௰௫

ஈசனா ரயனார் மாலோ டிந்திரன் றெரிவை மார்பாற்
பேசொணா வகைக ளெல்லாஞ் செய்தன்றோ பெரியோ ராவா
ராசையா லவர்போ லாமு மாகவே வேண்டு மாயின்
வாசமார் குழலா ரோடும் வல்லவா கூடி வாழ்மின். ௰௬

தையலா ரூட லாடத் தாமவ ரோடுங் கூடிச்
செய்யதா மரையை வென்ற சீறடி செம்பஞ் சூட்டி
மெய்யெலாம் பாதஞ் சூடும் வேடத்தார் மெய்யிற் கூடா
மையன்மா னுடர்பொய்ம் மார்க்க வேடத்தே மாய்கின் றாரே. ௰எ

வாசமார் குழலி னார்கண் மணியல்குற் றடத்தே மூழ்கி
நேசமார் குமுதச் செவ்வா யமுதினை நிறைய வுண்டு
தேசுலா மணிமென் றோண்மேற் சேர்ந்துவீற் றிருந்தி டாதே
மாசுலா மணத்தோ ரெல்லா மறுமைகொண் டழிவர் மன்னோ. ௰௮

மதிநிலா நுதலா ரோடு மணிநிலா முன்றி லேறி
முதிர்நிலா வெறிப்பச் செவ்வா யிளநிலா முகிழ்ப்ப மொய்த்த
கதிர்நிலா வடங்கொள் கொங்கைக் கண்கண்மார் பகல மூழ்கும்
புதுநிலா வியநன் போகம் விடுவாபுன் சமயத் தோரே. ௰௯

ஊடுவ துணர்வ துற்ற கலவிமங் கையரை யுள்கி
வாடுவ தடியில் வீழ்ந்து வருந்துவ தருந்த வம்பின்
கூடுவ துணர்வு கெட்டுக் குணமெலாம் வேட்கை யேயாய்
நீடுவ தின்ப முத்தி யித்தினின் றார்கண் முத்தர். ௨௰

வீட்டினை யுளதென் றோடி மெலிவதிங் கென்னை வீடு
காட்டுவோர் கண்டோர் கேட்டோர் கரியவை யுண்டேற் காட்டீர்
நாட்டினி லரச னாணைக் கிசையவே நடந்து நாளு
மீட்டிய பொருள்கொண் டிங்கே யின்பத்து ளிசைந்தி டீரே. ௨௧

## உலகாயதன்மதமறுதலை

---

உள்ள தாவது கண்ட தென்றுரை
கொண்ட தன்னுல கத்துநீ
பிள்ளை யாய்வளர் கின்ற நாளுனைப்
பெற்ற தாயொடு தந்தையைக்
கள்ள மேபுரி கால னாருயி
ருண்ண வின்றொரு காளையாய்
மெள்ள வேயுள ரென்று கொண்டு
விளம்பு மாறு விளம்பிடே. க

இடித்து மின்னி யிருண்டு மேக
மெழுந்த போதிது பெய்யுமென்
றடுத்த தும்மகில் சந்த முந்தி
யலைத்து வார்புன லாறுகொண்
டெடுத்து வந்திட மால்வ ரைக்க
ணிருந்து கொண்டல் சொரிந்த தென்று
முடித்த தும்மிவை காட்சி யன்றனு
மான மென்று மொழிந்திடே. உ

காண்ட லேயனு மான மாவதுங்
காட்சி முன்னதுங் காட்சியேற்
பூண்ட பூத வுடம்பி னுள்ளெழு
போத மென்கொடு கண்டனை
மாண்ட வாயின் மனங்கொண் ஞான
முணர்ந்த தும்மனு மானமன்
றீண்டு பூத மியைந்த திவ்வுட
லென்ப தென்பிர மாணமே. ங

பழுதி லாமறை கண்ட நூல்பழு
தின்றி யுண்டது பாரின்மேன்
மொழிவர் சோதிட முன்னி யின்னது
முடியு மென்பது முன்னமே
யழிவி லாதது கண்ட னம்மவை
யன்றி யுஞ்சில வாக மங்களி
னெழுதி யோர்படி யென்று கொண்டிரு
நிதியெ டுப்பது மெண்ணிடே. ௬

பூத மானவை நித்த மென்று
புகன்ற தென்னை யுருக்களா
யாத லோடழி வாகு மாதலி
னுக்கு வோர்வர வேண்டிடுங்
காத லோடு கடாதி மண்கொ
டியற்று வோருளர் கண்டனஞ்
சீத நீரி லெழுந்த கொப்பு
ளிகழ்ந்த மாருதச் செய்கையே. ௭

நீரின் வந்தெழு கொப்பு ளீரது
வாயெ ழுந்நிகழ் பூதமு
மோரின் வேறுணர் வாயெ ழாவவை
பூத மாகி யுதித்திடுந்
தேரி னூறடை காய்செ றிந்தவை
சேர வேறு சிவப்பெழும்
பாரி னிற்பிரி யாது புந்தி
பழிப்பு டம்பு கிடக்கவே. ௮

கூறு சேர்வையின் வந்த போது
சிவப்ப னுங்குண மொன்றுமே
வேறு வேறு புலன்கு ணங்க
ளுடற்கண் வந்து விளைந்ததே

னூறு காயமடை கூடும் வேறொரு
வன்ற னாலென னேக்கிநீ
தேறு பூத செயற்கும் வேண்டு
மொருத்த னென்று தெளிந்திடே. எ

ஆன வைம்பொறி யுண்டி நித்திரை
யச்ச மைதுன மாதியா
வூனின் வந்திடு முன்பி லாதவை
யென்று ரைக்கி னுலூதைபோல்
வானின் வந்திடு மாத ராணலி
யாகி மானுட ராதியா
யோனி பன்மையு மின்று பூத
முறும்பு ணர்ச்சியொர் தன்மையே. அ

ஐந்து நான்கொரு மூன்றி ரண்டுட
னொன்ற தாயுட லங்களின்
வந்தி டாவுணர் விந்தி யங்களும்
வன்ன பன்மையு மின்மையாம்
புந்தி யோடிய வன்ன போக
குணங்கள் பூத புணர்ச்சிதான்
றந்தி டாதிவை பேத மாயிட
வந்த வாவினை தந்தவா. கூ

அறிவு பூதம தென்னின் வேறு
புறத்த றிந்தமை கண்டிலஞ்
செறிவு தானுட லத்தெ னிற்சவ
மான போதுட றேருமோ
குறிகொ ளாதுடல் வாயு வானது
கூடி டாமையி னென்னினீ
பிறித ராதுயிர் நிற்க ஞான
முறக்க மென்பிற வாததே. ய

தத்துவங்க ளெல்லாஞ் சகசமா யான்மாவிற்
பெத்தத்தி னிற்கின்ற பெற்றிபோன் - முத்திதனிற்
சித்தமல மற்றூர் செறிந்திடுவ ரென்றுமறை
சத்தியமா வோதியிடுந் தான். ௪எ

ஆதவன்றன் சந்நிதியி லம்புலியி னூர்சோதி
பேதமற நிற்கின்ற பெற்றிபோ - னாதாந்தத்
தண்ண றிருவடியி லான்மா வணைந்தின்பக்
கண்ணி லழுந்தியிடுங் காண். ௪அ

சென்றிவன்றா னென்றிற் சிவபூ ரணஞ்சிதையு
மன்றவன்றா னென்றுமெனி லந்நியமா - மின்றிரண்டு
மற்றநிலை யேதென்னி லாதித்த னந்தன்விழிக்
குற்றமற நின்றதுபோற் கொள். ௪௯

வாக்கு மனமிறந்த வான்கருணை யாளனுருத்
தாக்கறவே நிற்குந் தனிமுதல்வா - நீக்காப்
பதியினைப்போ னித்தம் பசுபாச மென்றாய்
கதியிடத்து மூன்றினையுங் காட்டு. ௫௰

முத்திதனின் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு - மெத்தவே
யின்பங் கொடுத்தலிறை யித்தைவிளை வித்தன்மல
மன்புடனே கண்டுகொளப் பா. ௫க

அப்பாவிம் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பா யருளாலே செப்பக்கே - ளொப்பில்
குருலிங்க வேடமெனக் கூறிவிவை கொண்டார்
கருவொன்றி நில்லார்கள் காண். ௫உ

கற்று மனம்போற் கசிந்துகசிந் தேயுருகி
யுற்றுசான் லிங்க முயர்வேடம் - பற்றாக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனி னின்றிடுவர் பார். ௫௩

வாழ்ந்தே னருட்கடலே வற்றாப் பவக்கடலில்
வீழ்ந்தே யலையாமன் மேதினியிற் - சூழ்ந்துவிடா
வெண்ணைச் சுவேதவன மெய்கண்ட நாதனே
யுண்மைத் தவப்பயனே யுற்று. ௫௪

---

மன்னதிகை வாழு மனவா சகங்கடந்தான்
மின்னனைய வாழ்விலுறு மெய்கண்டான் - பன்மறைகள்
வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
வுண்மைவிளக் கஞ்செய்தா னுற்று.

## உண்மைவிளக்கம்

*முற்றிற்று*

உ

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# சிவப்பிரகாசம்

## பாயிரம்

### காப்பு

ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு
களியார வருமானை கழலுளு மறவாம
லளியாளு மலர்தூவு மடியார்க ளுளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.

### நடராசர்

ஓங்கொளியா யருண்ஞான மூர்த்தி யாகி
யுலகமெலா மளித்தருளு முமையம்மை காணத்
தேங்கமழு மலரிதழி திங்கள் கங்கை
திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்து
நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்று
ணின்றிமையோர் துதிசெய்ய நிருத்தஞ் செய்யும்
பூங்கமலமலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
புந்தியினு முறவணங்கிப் போற்றல் செய்வாம்.

## சிவகாமியம்மை

பராந்தபரா பரையாதி பரன திச்சை
பரஞானங் கிரியைபர போக ரூபந்
தருங்கருணை யுருவாகி விசுத்தா சுத்தத்
தனுகரண புவனபோ கங்க ளாங்க
விரிந்தவுபா தானங்கண் மேவி யொன்றாய்
விமலமா யைந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்
தாந்தைகெட மணிமன்று ளாடல் காணு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம். உ

## விநாயகர்

நலந்தாரு விருந்தமிழின் செய்யுட் குற்ற
நண்ணுமை யிடையூறு நலியாமை கருதி
யிலங்குமிரு குழையருகு பொருதுவரி சிதறி
யிணைவேல்க ளிகழ்ந்தகயற் கண்ணியொடு மிறைவன்
கலந்தருள வருமானை முகத்தான் மும்மைக்
கடமருவி யெனநிலவு கணபதியி னருளா
லலர்ந்துமது காமுனிவர் பரவவளர் கமல
மனையதிரு வடியிணைக ணினைதல் செய்வாம். ௩

## முருகக்கடவுள்

வளநிலவு குலவமர ரதிபதியாய் நீல
மயிலேறி வருமீச னருண்ஞான மதலை
யளவில்பல கலையங்க மாரணங்க ளுணர்ந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மண்ணல்விற லெண்ணு
வுளமருவு சூரனுர மெனதிடும்பை யோங்க
லொன்றிரண்டு கூறுபட வொளிதிகழ்வே லுகந்த
களபமலி குறமகடன் மணிமுலைகள் கலந்த
கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம். ௪

## சந்தான பரம்பரை

தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிக ளடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியா வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறு
விரவுபுக ழருணந்தி விறலார் செல்வத்
தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவரிச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே. ரு

## குரு வணக்கம்

பார்திகழ வளர்சாம வேத மல்கப்
பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி யெம்மை யாண்ட
சைவசிகா மணிமருதத் தலைவ னந்தண்
கார்மருவு பொழில்புடைசூழ் மதின்மீதே மதியங்
கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையுங் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்த னெந்தை
திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம். சு

## நுதலிய பொருள்

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப் [போற்
பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
வறத்திறனல் விளைவதா யுடலுயிர்கண் ணருக்க
னறிவொளிபோற் பிறிவருமத் துவித மாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம். எ

## தீட்சாக்கிரமம்

மூவகையா ருயிர்வர்க்க மலர்த்தார் கன்ம
மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே
தீவகமா மெனவுருவாய் வந்து நாதன்
றிருநோக்காற் பரிசத்தாற் றிகழும் வாக்காற்
பாவனையான் மிகுநூலா லியோகப் பண்பாற்
பரவிவரு மௌத்திரியாற் பாச நாச
மேவவரு ளுதவுமவுத் திரியிரண்டு திறனும்
வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே. அ

விரும்பியமந் திராதிகார மர்ச்சனு திகார
மேவுமியோ காதிகார மெனச்சமய விசேடம்
வரும்பொருவி னிருவாண மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்க டத்துவங்கள் கலைக [ளொன்
ளிரங்கடைவிற் றூகைபதிற் றொன் றெண்பத்தொன் றைம்பத்
திருநூற்றோ டிருபத்து நாலா றைந்திற்
பரந்தநெறி யறுவகையு மொருவிவினை வரிதாம்
பரபதத்து ளுயிர்விரவப் பயிற்று மன்றே. க

கிரியையென மருவுமவை யாவு ஞானங்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கு முண்மைச்
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூ பங்கண்
மருவியிடு முயர்ஞான மிரண்டா மாறு
மலமகல வகலாத மன்னு போதத்
திருவருளோன் றூன்றதனைத் தெளிய வோதுஞ்
சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே. ய

## நூல்வழியும் நூற்பெயரும்

தெரித்தகுரு முதல்வருயர் சிவஞான போதஞ்
செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற் றவர்கடிரு வடிகள் போற்றி
விளம்பியநூ லவையிரண்டும் விரும்பி நோக்கிக்
கருத்திலுறை திருவருளு மிறைவ னூலுங்
கலந்துபொது வுண்மையெனக் கருதி யானு
மருத்திமிக வுரைப்பன்வளர் விருத்த நூறு
மாசில்சிவப் பிரகாச மாகு மன்றே. ௰க

## அவையடக்கம்

தொன்மையவா மெனுமெவையு நன்றாகா வின்று
தோன்றியநூ லெனுமெவையுந் தீதாகா துணிந்த
நன்மையினர் நலங்கொண்மணி பொதியுமதன் களங்க
நவையாகா தெனவுண்மை நயந்திடுவர் நடுவாந்
தன்மையினர் பழமையழ காராய்ந்து தரிப்பர்
தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறித
லின்மையினர் பலர்புகழி லேத்துவரே திலருற்
றிகழ்ந்தனரே லிகழ்ந்திடுவர் தமக்கெனவொன் றிலரே.

# பொது வதிகாரம்

---

## முதற் சூத்திரம்

### பதி யியல்பு

பலகலையா கமவேத மியாவையினுங் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே யதுதா
னிலவுமரு வுருவின்றிக் குணங்குறிக ளின்றி
நின்மலமா யேகமாய் நித்த மாகி
யலகிலுயிர்க் குணர்வாகி யசல மாகி
யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே. க

நீடுபரா சத்திநிக ழிச்சா ஞான
நிறைகிரியை தரவதனை நிமலன் மேவி
நாடரிய கருணைதிரு வுருவ மாகி
நவின்றுபல கலைநாத விந்து வாதி
கூடுமொளி வளர்குடிலை மாயை மேவிக்
கொடுவினைகொ டனுகரண புவன போகம்
பீடுபெற நிறுவியவை யொடுக்கு மேனி
பிறங்கியநிட் களசகளப் பெற்றி யாமே. உ

ஈங்கிதுவென் றதுகடந்த வியல்பி னானு
மீறுமுத னடுவொன்று மிலாமை யானு
மோங்கிவளர் ஞானமய னாதலானு
முண்மைபிறர்க் கறிவரிய வொருமை யானுந்
தாங்கரிய வெறுப்பினொடு விருப்பு மெல்லாஞ்
சார்வரிய தனிமுதல்வ னாதலானு

நீங்கலரு முயிர்க்குயிராய் நிற்ற லானு
　　நிறுத்திடுவ னினைந்தவுரு நிமலன் றானே.

உலகமெலா மொருவனோ டொருத்தி யொன்றென்
　　றுளதாகி நின்றளவி லொடுங்கும் பின்னு
மலமதனா லுளதாகு முருவ மாறி
　　வருவதுபோ வதுசெல்வ தாத லானு
மலைவிலசே தனமாயை யாத லானு
　　மனுக்களுரு வடையுமறி விலாமை யானு
நிலவுதொழின் மருவியுரு நிற்ற லானு
　　நின்றவையு மளித்திடுவ னிமலன் றானே.

கந்தமல ரயன்படைக்கு முலக மெல்லாங்
　　கண்ணனளித் திடுமவையெங் கடவு டானே
யந்தமுற வழித்திடுவ னாத லாலே
　　யயனரியு மவனதுய ரதிகா ரத்து
வந்தமுறை தன்றொழிலே மன்னுவிப்ப னெல்லாம்
　　வருவிப்பன் விகாரங்கண் மருவான் வானின்
முந்திரவி யெதிர்முளரி யலர்வுறுமோன் றலர்வான்
　　முகையாமோன் றொன்றுலரு முறையி னாமே.

எற்றவிவை யானருளின் றிருவிளையாட் டாக
　　வியம்புவர்க ளணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே
யூற்றமிக வருள்புரித லேது வாக
　　வுரைசெய்வ ரொடுக்கமிளைப் பொழித்தன் மற்றைத்
தோற்றமல பாகம்வரக் காத்தல் போகந்
　　துய்ப்பித்த றிரோதாயி நிறுத்த லாகும்
போற்றலரு மருளருளே யன்றி மற்றுப்
　　புகன்றவையு மருளொழியப் புகலொ ணாதே.

# இரண்டாஞ் சூத்திரம்

## பசு வியல்பு

எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி னழுந்தி
யிருவினையின் றன்மைகளுக் கீடான யாக்கை
யண்ணலரு ளானண்ணி யவையவரா யதனா
லலகினிகழ் போகங்க ளருந்து மாற்றாற்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்
புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கா லருளா
லுண்ணிலவு மொளியதனா லிருளகற்றிப் பாத
முற்றிடுநற் பசுவருக்க மெனவுரைப்ப ருணர்ந்தோர். க

## பாச வியல்பு

ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளு
மெண்ணரிய சத்தியதா யிருளொளிர விருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதாயி சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வரது பரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையா னடிக
ணணுகும்வகை கருணைமிக நயக்குந் தானே. உ

உன்னலரும் பரசிவன்ற னருளாலே நாத
முதிக்குமிருங் குடிலைதனில் விந்துவரு நாதந்
தன்னிலதி னொளிவளருஞ் சதாசிவரா மவரிற்
றயங்கவரு மீசர்வித்தை தனையளிப்ப ரதனான்
மன்னுவரிவ் வகையவர் வாய்மையினுன் முன்னே
வந்திடுமென் றுரைசெய்த விந்துவழா வகையே
முன்னுதவு சூக்குமாதி யொருநான்கு மென்று
மொழிந்திடுவ ரருங்கலைகண் முதிர்ந்து ளோரே. ௩

உருவாதி சதுர்விதமா யொன்றொன் றொவ்வா
வுண்மையதாய் நித்தமா யொன்று யென்று
மருவாகிக் கன்மமா ரணுக்க ளியார்க்கு
மாவார மாயசித்தா யசல மாகி
விரிவாய தன்செயலின் வியாபியா யெல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை யொடுங்க
வருகால முயிர்களெல்லா மருவிடமாய் மலமாய்
மன்னியிடு மரனருளான் மாயை தானே. ௬

என்னையிது வெனினுலகுக் குபாதான மில்லை
யிறைவனல தெனினசித்துச் சித்தினிடத் துதியா
மன்னியுள தேன்முதல்வ னென்கொ லென்னின்
மாயைதா னசித்துருவாய் மருவ மாட்டா
தன்னவனு மிதுவொழிய வாக்க மாட்டா
னசத்தனு மெனினதுவு மவன்போ னித்த
முன்னவனவ் வசித்தைவிரித் தெவையு மாக்கு
முதன்மையது கொடுத்ததென மொழிந்தி டாரே. ௭

படைத்ததொரு படியின்றிப் பறவைபசு நரராய்ப்
பண்ணியதென் முன்னைவினைப் பான்மை யென்ப
ரடுத்தவினை யுளதாயி னிறையே னென்னி
லசேதனமற் றவையாவிக் கமைத்த தாகு
மெடுத்தவினை யுருவுறுவ துயிரேற் றானே
யிருவினைக்குத் தக்கவுட லெய்து மென்னிற்
சடத்திரளு மகர்த்தாவா யறிவொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே. ௮

அல்லன்மிக வுயிர்க்கிவைதா னணைத்த தீச
னருவினைக ளருந்துதற்கோ வினையோ வன்றிச்

சொல்லிவரு மாயையோ வணுவை மூந்தச்
சூழ்ந்ததெனு முறைமுதலோர் தொடக்கி லார்பா
லொல்லைவரு மெனினுளதா முயிருண் டாவே
யுளதுமல மலமுளதா வொழிந்த வெல்லா
நெல்லின்மூளை தவிடுமிபோ லனாதி யாக
நிறுத்திடுவ ரிதுசைவ நிகழ்த்து மாறே. எ

அருத்திமிகுங் கலைகால நியதியுடன் வித்தை
யராகமிவை யனந்தரான் மாயைதனி லாகு
முருத்திராற் கலையதனிற் பிரகிருதி குணங்க
ளுளவாகு மாங்காரம் புந்திதனி லுதிக்குந்
தெரித்தவிது திரிவிதமாந் தைசதவை காரி
திகழ்தருபூ தாதியெனத் திருந்தியசாத் துவிதம்
விரித்தகுண மனம்புத்தி யிந்திரிய மென்று
விளம்பியசோத் திராதிமுதல் விளங்கியிடும் விரிந்தே. அ

மன்னியகன் மேந்திரிய மானவிரா சதஞ்சேர்
வாக்காதி வைகாரி மருவிவருஞ் சத்தந்
தன்னைமுத லாகியதா மதமிகுமாத் திரைபின்
றருமிதனின் வானநில மனல்புனன்மண் சத்த
முன்னதனில் வெளியாதி யொன்றொன் றாகு
முறையிலுறு மிருமையயன் முடிவா முன்னே
யுன்னுசதா சிவராதி யதிபதிக ளொடுக்க
முதித்தவடை வெனவுரைப்ப ருணர்ந்து ளோரே. க

நண்ணியிடு முருவதனுக் கேது வாகி
நாலுபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரு மாதலா லனாதி யாகிப்
பலவாகி யணுக்கடொறும் படர்வ தாகி

யெண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்று
 மியல்பினதாய் மதிகதமா யிருபயனும் பாவ
புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்
 பொருந்துமிது கன்மமலம் புகலு மாறே. ௰

கன்மநெறி திரிவிதநற் சாதியாயுப் போகக்
 கடனெதென வருமூன்று முயிரொன்றிற் கலத்த
றொன்மையது மூலதுண வாகா தானுந்
 தொடங்கடைவி னடையாதே தோன்று மாறித்
தன்மைதரு தெய்விகமுற் பௌதிகமான் மிகமாந்
 தகையிலுறு மசேதனசே தனத்தாலுஞ் சாரு
நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிஃது
 ணுடிலத னூழ்வினையா நணுகுந் தானே. ௰௧

மேலைக்கு வருவினையே தென்னி னங்கண்
 விருப்புவெறுப் பெனவறியவ் விளைவு மெல்லா
மூலத்த வினைப்பயில்வா மென்னி னென்
 முற்றியதன் பயனுனக்கு மூளைக்கு மென்பர்
ஞாலத்து வினைகளிரு திறனுகும் புந்தி
 நண்ணுத வினைநணுகும் வினையெனவொன் றிரண்டா
மேலத்தா னிதமகித மாமிதனல் வழுவா
 தெய்திடும் புண்ணியபா வங்க ளென்றே. ௰௨

உற்றதொழி னினைவுரையி னிருவினையு முளவா
 மொன்றொன்ற லழியாது ணுழியா துன்னின்
மற்றவற்றி னொருவினைக்கோர் வினையால் வீடு
 வைதிகசை வம்பகரு மரபி லாற்றப்
பற்றியது கழியுமிது விலையா லேற்கும்
 பான்மையுமாம் பண்ணுது பலிக்கு முன்னஞ்
சொற்றருநூல் வழியின்வரின் மிகுதி சோருஞ்
 சோராதங் கதுமேலைத் தொடர்ச்சி யாமே. ௰௩

மோகமிக வுயிர்களொடு முடனாய் நிற்கு
மூலவா ணவமொன்று முயங்கிநின்று
பாகமிக வுதவுதிரோ தாயி யொன்று
பகர்மாயை யொன்றுபடர் கன்ம மொன்று
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரு மாமாயைத் திரட்சி யொன்றென்
றாகமல மைந்தென்ப ரைந்து மாறா
தருளென்ப தறிதென்ப ரறிந்து ளோரே. ௰௪

## அவத்தை யியல்பு

ஓங்கிவரும் பலவுயிர்கண் மூன்றவத்தை பற்றி
யுற்றிடுங்கே வலசகல சுத்தமென வுணர்க
வீங்குவருங் கலாதியொடு குறியுருவ மொன்று
மின்றிமல மன்றியொன்று மில்லையெனு மியல்பா
*யாங்கறிவை யறிவரிய வறிகருவி யணையா
வாதலினா லிருண்மருவு மலர்விழிபோ லதுவாய்
நீங்கும்வகை யின்றிநித்த வியாபகமா யங்க
ணிற்பதுகே வலமென்று நிகழ்த்து நூலே. ௰௫

இன்மைமல மாயைகன்ம மென்றிரண்டே யிறைதா
னிலங்குபல வுயிர்களுமுன் புரிந்தவிரு வினையின்
றன்மைகளா லெவர்களுக்குந் தனுகரண புவனந்
தந்திடுமிங் கதனாலே யிருபயனுஞ் சார்ந்து
கன்மமெலா நேராக நேராதன் மருவக்
கடவுளரு ளாலெவையுங் கழித்திடுவ னதனாற்
பின்மலமா னவையனுகா பெருகொளிமுன் புளாதே
பெற்றிடுமென் றித்திறமென் பேசு மாறே. ௰௬

---

* ஆங்கறிவை யறிவரிதா என்பதும் பாடம்.

மாயைமுத லெனவினையின் பான்மைமுத லெனவே
மன்னுபவனை விதைமரபின் மயங்குமலஞ் சுத்தற்
கேயுநெறி யென்கொலத னியல்பாயின் முத்தி
யென்பதென் மற் றிவைநிற்க விருங்கலாதி யுணர்வாய்
மேயபினர்த் தன்னுருவம் விளங்காமை விளக்கு
மிகுமுலகந் தனிலென்னி லிவைவிடுங்கா லுணர்வுட்
டோயுநெறி யிலதாத லறியாமை யெனநீ
சொல்லியது மலமென்பர் துணிந்து ளோரே. ௰௭

அந்நியமா னவையுணர்த்தி யநந்நியமாய் நிறைந்த
வறிவறியா மையினுனு மருணிலவுங் காலந்
தன்னிலவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானுமுயிர் தானெனவொன் றிலதாய்
மன்னியிடு மலமாயை கன்மங்கண் மாறி
வந்திடுமிங் கிதுவமுவா தாதலினுன் மனத்தா
லுன்னரிய திருவருளை யொழியமல முளதென்
றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே. ௰௮

புகலுமல மொழித்தற்குக் கலாதிமுதன் மாயை
பொருந்தியிடு மாணருளாற் போதந் தீபஞ்
சகலமெலா முடனுய வாறு போலுந்
தருமருளை மலமுயிர்கள் சாராமன் மறைக்கு
மிகலிவரு மிவையுணரி னிருள்வெளியாந் தன்மை
யெய்துமிவை தஞ்செய்தி யிலங்கும் விந்து
பகர்வரிய வுணர்வாகி யொளியா யுள்ளப்
பான்மையினு லொருநாதம் படருந் தானே. ௰௯

வந்தடைந்து பின்னமாய் வன்னங்க டோற்றம்
வருமடைவு படவொடுக்கி மயிலண்ட சலநேர்

சிந்தைதனி லுணர்வாகும் பைசந்தி யுயிரிற்
சேர்ந்துவரு மவைமருவு முருவெவையுந் தெரித்து
முந்தியிடுஞ் செவியிலுறா துள்ளுணர்வா யோசை
முழங்கியிடு மத்திமைதான் வைகரியி லுதானன்
பந்தமுறு முயிரணைந்து வந்தமொழி செவியின்
பாலணைய நினைந்தபொருள் பகருந் தானே. உ௰

இத்தகைமை யிறையருளா லுயிரறியு மறிவுக்
கீடாக வாடாதே யீரிரண்டி லுரைத்த
வித்தைமுத லைவரான் விளங்கு ஞான
மேவியிடு மெனவுரைப்ப ரசுத்தமாயை
வைத்தகலை தான்மூல மலஞ்சிறிதே நீக்கி
மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப்
புத்திதர வித்தையிடை நின்றறிவை யுயிர்க்குப்
பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்தி புணர்ந்தே.

பேசரிய வராகந்தன் கன்மத்துக் கீடாப்
பெற்றதனி லாசைதனைப் பெருகுவிக்கு நியதி
தேசமிகு மரசர்தரு மாணை செய்தி
செய்தவரைத் துய்ப்பிக்குஞ் செய்கை போல
நேசமுறு தங்கன்ம நிச்சயித்து நிறுத்து
நிகழ்காலங் கழிகால மெதிர்கால மென்றே
யோசைதர வருங்கால மெல்லைபலம் புதுமை
யுறுவிக்கு மிறைசத்தி யுடனாய் நின்றே. உ௨

ஐவகையா லுறுபயன்க ளுகரவருங்கால
மதுபுருட தத்துவமென் றறைந்திடுவ ரறிந்தோர்
மெய்வகைய கலாசுத்தி தனினிதற்குஞ் சுத்தி
மேவியிடும் வகைதானும் விரும்பியநூல் விளம்புஞ்

செய்வகையின் றொடர்ச்சியிங்குத் தோன்றுவிக்குங் குணத்
சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமா மவைதா [தின்
மிவ்வகையிற் சாத்துவித ராசததா மதமா
யியம்புவர்க ளொன்றிரண்டு *குணமேற்க வுடைத்தே.

அலகில்குணம் பிரகாசம் லகுதைவியா பிருதி
யடர்ச்சிமிருங் கௌரவமந் நியமிவைக ளடைவே
நிலவியிடு மும்மூன்று முயிரொன்றிற் கலந்தே
நிற்குமிவை நிறைபுலனின் பயனெவையுங் கவருங்
குலவிவரு போகங்க ளிடமா மாருக்
குறைவிலொளி யாமலகில் புலனிடத்தி னொருமை
பலவகையு முடையதாய்ப் பானருளாற் புந்தி
பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்குந் தானே. உச

ஆனதனு வதனிலுறு மநிலனையு மியக்கி
யாங்கார நீங்காத வகந்தைக்கு வித்தா
யானலது பிறரொருவ ரெனையொப்பார் புவியி
னில்லையெனு மியல்பினதா யிந்திரியம் புலன்க
டானுகரு மளவிலதின் முந்தியுறு மிச்சை
தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியுந் தந்து
மானதமா னதுநிற்குஞ் சிந்தைநினை வையம்
வந்துதரு மனமொழிய வகுப்பொ ணுதே. உரு

சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குத்
துண்டமிவை யைந்திற்குந் தொகுவிடய மாக
மன்னியசத் தப்பரிச ரூபரச கந்த
மருவியிடு மிவையடைவே வாக்குப் பாதம்
பின்னர்வரு பாணிமிகு பாயுவினோ டுபத்தம்
பேசலுறு மைந்திற்கும் பிறங்கொலிகொள் வசன

* ஏற்கை யுடைத்தே என்பதும் பாடம்‘

முன்னரிய கமனதா னவிசர்க்கா னந்த
முற்றதொழில் பெற்றிடுவே துண்மை யாமே. உ௫

முந்தியவைம் பூதங்கள் வாஞதி யாக
முயங்கியநற் செவிநாசி கண்ணுமெய்ம் முறையா
லிந்தவயி னின்றுவரு மைம்புலனு முயிர்தா
மெய்தும்வகை தம்முருவி னிலங்கியிடும் புறத்து
வந்தடைய விடங்கொடுக்கு மிரந்தரமாய் வானம்
வாயுமிகச் சலித்தெவையுந் திரட்டுந்தீ வெம்மை
தந்தவைசுட் டொன்றுவிக்கு நீர்குளிர்ந்து பதமே
தருமுரத்துத் தரிக்குமிகு தரணி தானே. உ௭

இந்நிரையி னைந்துசுத்த மேழசுத்தா சுத்த
மெண்மூன்று மசுத்தமெனு மிவைமுப்பத் தாறு
மன்னியதத் துவங்களிடை மயங்கிநெடுந் துயர்தா
மருவுமுரு நிலையழிய வரும்பொழுது வரியார்
பன்னகமண் டசங்கனவு படர்வகையே முன்னம்
பகரவருங் கலாதிநிலை பரவியசுக் குமமாந்
தன்னுருவி னணைந்துபய னருந்தியா னருளாற்
றரையினிடை வருமென்று சாற்று நூலே. உ௮

தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற்
றுதைந்துவரு முற்பீசஞ் சராயுசங்க ளொன்றி
னூற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தென்று
மூர்வபதி னைந்தமரர் பதினொன்றே டுலவா
மாற்றருநீ ருறைவன்நற் பறவைகளுற் காலி
மன்னியிடும் பப்பத்து மானுடரொன் பதுமா
வேற்றியொரு தொகையதனி லியம்புவர்கள் யோனி
யெண்பத்து நான்குநூ றாயிரமென் றெடுத்தே. உ௯

இனையபல பிறவிகளி னிறந்துபிறந் தருளா
விருவினைகள் புரிந்தருந்து மிதுசகல மகலா
முனமருவு மிருபயனு மொருகாலத் தருந்த
முந்துறுக ருந்துபய னந்தமுற வந்த
வினையுமெதிர் வினையுமுடி வினையுதவு பயனு
ணோராக நோராதன் மேவுங் கான்முற்
சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருந்தியசத் திநிபாதந் திகழு மன்றே. ௩௰

நாடியசத் திநிபாத நாலு பாத
நண்ணுவகை யெண்ணரிய ஞான பாதங்
கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக்
கூத்தனொரு மூர்த்திகொடு குறுகி மோக
நீடியகே வலசகல நிகழா வாறு
நிறுத்திமல மறுக்குமிது நிலையார் சுத்தங்
சேடில்புகழ் தருஞ்சரியை கிரியா யோகச்
செம்மையரோ விவையுணர்த்தக் கிளக்கு நூலே. ௩௧

## முத்தி பேதங்களதியல்பு

அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்து
மறுமுத்தி திரிகுணமு மடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போ முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்தியிவை பழிசேர் முத்தி
திரிமலமு மகலவுயி ரருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே. ௩௨

# உண்மையதிகாரம்

இங்கிவை பொதுவி யம்பு மென்பர்க ளிதன்மே லான்மாத்
தங்கிய வஞ்ச வத்தை தன்னுண்மை யுணர்த்துந் தன்மை
பொங்கொளி ஞான வாய்மை யதன்பயன் புனித னும
மங்கதி லணைந்தோர் தன்மை யறைகுவ னருளி னாலே. க

---

## மூன்றாஞ் சூத்திரம்

### ஆன்ம வியல்பு

செறிந்திடு முடலுண் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி
யறிந்ததி லழுந்து மொன்று மறிந்திடா தறியுந் தன்மை
பிறிந்தடை யஞ்ச வத்தை பெருகிய மலத்தாற் பேணி
யுறுந்தனி யதீத முண்மை யுயிர்க்கென வுணர்த்து மன்றே. உ

உருவுணர் விலாமை யானு மோரொரு புலன்க ளாக
மருவிநின் றறித லானு மனுதிக டம்மின் மன்னித்
தருபய னுகர்த லானு முயிர்சட மாத லானு
மருவினை யுடலு ளாவி யறிவினு லறியு மன்றே. ங

அறிவெனில் வாயில் வேண்டா வன்றெனி லவைதா மென்னை
யறிவதை யுதவு மென்னி லசேதன மவைதா மெல்லா
மறிபவ னறியுந் தன்மை யருளுவ னென்னி லான்மா
வறிவில தாகு மீச னசேதனத் தளித்தி டானே. ச

அறிவினு லறிந்த யாவு மசத்தாத லறிதி யென்று
மறிவினு லறியொ ணாதே லாவதொன் றின்மை தொன்மை
யறிவுதா னென்றை முந்தி யதுவது வாகக் காணு
மறிவுகா ணசத்து மற்ற தறிவினுக் கறியொ ணாதே. ரு

எவ்வறி வசத்த றிந்த தெனிலுயி ரறியா தீச
னவ்வறி வறியா னல்ல தசேதன மறியா தாவி
செவ்விய கருவி கூடித் தெரிவுறா தருளிற் சேரா
தொவ்விரு வகைய தென்னி லொளியிரு ளொருங்கு றாவே. ௬

சத்திது வென்ற சத்துத் தானறி யாத சத்தைச்
சத்தறிந் தகல வேண்டா வசத்திது சத்தி தென்றோர்
சத்திரு ளொளிய லாக்கண் டன்மைய தாம சத்தைச்
சத்துட னின்று நீக்குந் தன்மையாற் சதசத் தாமே. ௭

கண்ணொளி விளக்க ளித்துக் காட்டிடு மென்னின் முன்னங்
கண்ணொளி யொன்று மின்றாம் விளக்கொளி கலந்த வற்றைக்
கண்ணொளி யகல நின்றே கண்டிடும் வேறு காணா
கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத்தொன் றன்றே. ௮

ஓரிடத் திருத்தன் மாயா வுருநிறைந் திடுத லொன்றாம்
பேரிடத் துறைத றானே பிறங்கறி வாகி நிற்றல்
சோர்வுடைச் சடநி கழ்த்த லெனுமிவை சொல்லார் நல்லோ
ரோர்விடத் துணரு முண்மை யொளிதரு முபலம் போலும். ௯

---

## நான்காஞ் சூத்திரம்

### அஞ்சவத்தை

எண்ணவொன் றிலாத தீத மெய்திய துரியத் தொன்று
நண்ணிடுஞ் சுழுத்தி தன்னி னயந்துள தொன்று பின்னு
மண்ணிடுங் கனவு தன்னி லாறேழாஞ் சாக்கி ரத்திற்
கண்ணுறு மஞ்சா றாய கருவிகள் காணுந் தானே. ௧

இவ்வகை யவத்தை தன்னி லெய்திடுங் கரண மெல்லா
மெய்வகை யிடத்தி லுற்று மேவுமா கண்டு மிக்க
பொய்வகைப் பவம கற்றப் புரிந்திடி லருளா லாங்கே
யைவகை யவத்தை யுய்க்கு மறிவினு லறிந்து கொள்ளே. ௨

நீக்கமி லதீத மாசு நிறைந்தகே வலமா நீர்மை
சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகு
மூக்கமி லிரண்டுங் கூடா தொழியவோர் நிலையி னீடுஞ்
சாக்கிர வதீதஞ் சுத்தத் தகைமைய தாகுந் தானே. ௯

---

# ஐந்தாஞ் சூத்திரம்

## உணர்த்து முறைமை

மருவிய பொறியி லொன்று மாபூத மைந்தி லொன்றுங்
கருவிக ளுன்கு நீங்காக் கலாதிக ளைந்துங் கூடி
யொருபுல னுகரு மிந்த வொழுங்கொழிந் துயிரு மொன்றைத்
தெரிவுறா தவனு ழிந்தத் திரள்களுஞ் செயலி லாவே. ௧

தனக்கென வறிவி லாதான் றனிவை யறிந்து சாரான்
றனக்கென வறிவி லாத வாயிரு னறியா சாரத்
தனக்கென வறிவி லாதான் றத்துவ வன்ன ரூபன்
றனக்கென வறிவா னுலிச் சகலமு நுகருந் தானே. ௨

கண்டறி புலன்கள் காணுங் கருத்தினு லொருத்தன் ஞானங்
கொண்டுள மறியு மென்னிற் கொள்பவன் முதலி யாகு
மண்டிய வுணர்வு யிர்க்கா மன்னிநின் றறியு மென்னி
லுண்டிட வேண்டு வானுக் கொருவன்வே றுண்ட லாமே. ௩

இருணனி யிரவி தான்வந் திரித்தலு மிரவி லெண்ணும்
பொருணிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல
மருணிலை யெங்கு நீங்க மகிழ்ந்துயிர் தன்னுண் மன்னு
மருளையு மொழிய ஞாலத் தறிந்தவா றறியு மன்றே. ௪

அறிந்திடு மனுதி வாயி லானவை யவன்ற னுலே
யறிந்திடு மென்று மொன்று மறிந்திடா வவைபோ லியாவு
மறிந்திடு மறியுந் தன்மை யறிந்திடா கன்மத் தொன்மை
யறிந்தவை நுகரு மாறு மருளுவ னமலன் றானே. ௫

## ஆறாஞ் சூத்திரம்

### தன்னுண்மை யுணர்த்துந் தன்மை

காட்டிடுங் கரண மொன்று மில்லையேற் காணொ ணாதா
ணாட்டிய விவற்றான் ஞான நணுகவு மொண்ணா முன்ன
மீட்டிய தவத்தி னாலே யிறையரு ளுருவாய் வந்து
கூட்டிடு மிவற்றை நீக்கிக் குரைகழல் குறுகு மாறே. க

## ஏழாஞ் சூத்திரம்

### ஞான வாய்மை

பன்னிறங் கவருந் தொன்மைப் படிகநீ டொளியும் பன்மை
மன்னிலங் கியல்புந் தந்த வளரொளி போல வையந்
தன்னகம் பயிலு நற்சிற் சடங்களின் றன்மை தாவா
நன்னலம் பெறநி றைந்த ஞானமே ஞான மென்பர். க

மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளொளி யிருளாய் நிற்கு
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளொளி யொளியாய் நிற்கும். உ

## எட்டாஞ் சூத்திரம்

### ஞானவாய்மையின் பயன்

தேசுற மருவு மான்ம தெரிசன மான்ம சுத்தி
வாசிலா வான்ம லாப மாகமூன் றாகு மூன்றும்
பாசம தகல ஞானம் பற்றறான் பணியை நீத்த
லேசினே யத்த முந்த வெனுமிவற் றடங்கு மன்றே. க

தன்னறி வதனு லேதுந் தனக்கறி வில்லை யேனுந்
தன்னறி வாக வெல்லாந் தனித்தனி பயன ருந்துந்
தன்னறி வறியுந் தன்மை தன்னுலே தனைய றிந்தாற்
றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே. உ

தத்துவ மான வற்றின் றன்மைக ளுணருங் காலை
யுய்த்தறிந் திடவு திப்ப தொளிவளர் ஞான மாகு
மத்தன்மை யறியு மாறு மகன்றிட வதுவா யான்மா
சுத்தமாஞ் சுத்த ஞானத் தொருமுத ரூன்று மன்றே. ௩

உறைதரு முணர்வு மன்றி யதன்முத லுள்ள தென்றிங்
கறைவதெ னென்னி லண்ண லருளொனு மதுவே யன்றி
நிறையொளி முதல தன்றி நின்றிடா நிமல னுகு
மிறையவன் முதல வன்ற னிலங்கருள் சத்தி யாமே. ௪

சுத்தமாஞ் சத்தி ஞானஞ் சுடராகுஞ் சிவமொ ழிந்தச்
சத்திதா னின்று முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டி
யத்தனை யருளு மெங்கு மடைந்திடு மிருள கற்றி
வைத்திடு மிரவி காட்டும் வளரொளி போன்ம கிழ்ந்தே. ௫

---

## ஒன்பதாஞ் சூத்திரம்

புகலரு மசத்தர் தம்பாற் பொருந்திய வலகை யேபோ
லகிலமு முணரு மீச னருளுயிர் மேவ லாலே
சகலமு நிகழ வேண்டுந் தலைவனைந் தொழிலுந் தானே
யிகலற வியற்றல் வேண்டு மென்றது நன்றி யின்றே. க

இன்றநோக் குரைக டக்கு மியல்பிலோர்க் கினைய வாய்ந்து
நின்றதோ ரலகை சேர்ந்தா னிகழ்வதெ னதுபோ லுள்ளத்
தொன்றிய வுணர்வு தம்பா லுள்ளது நிகழ்த்து மீசன்
றன்றொழி னடத்து மேனி தனக்கெனக் கொண்டு தானே. உ

இந்நிலை தன்னின் மன்னி யெய்திடுங் கலாதி போதந்
தன்னள வறிந்து நிற்குந் தகவிலா மலங்க ணீத்த
வந்நிலை கரண மாகா வகையதி லறிவ டங்கி
மன்னிட வியாபி யாய வான்பயன் றோன்று மன்றே. ௩

அடைபவர் சிவமே யாகு மதுவன்றித் தோன்று மென்ற
கடனதெ னென்னின் முன்னங் கண்டிடார் தம்மைப் பின்னுந்
தொடர்வரு மருளி னாலுந் தோன்றுமா காணு ராயி
னுடையவ னடிசேர் ஞான முணர்தலின் றணைத லின்றே. ௪

---

## பத்தாஞ் சூத்திரம்

பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்றாமே தோன்றி நின்ற
சிற்பர மதனு ளுள்ளச் செயலறுத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே. ௧

ஒடுங்கிடா காணந் தாமே யொடுங்குமா றுணர்ந்தொ டுக்க
வொடுங்கிடு மென்னி னின்ற தொடுங்கிடா கரண மெல்லா
மொடுங்கிட வொடுங்க வுள்ள வுணர்வுதா னொழியும் வேறா
யொடுங்கிடி னன்றி மற்ற வுண்மையை யுணரொ ணாதே. ௨

பற்றிடுங் கருவி யாவும் படர்ந்துண வளிக்குங் காலை
யுற்றறிந் திடுவ தொன்றி னுணர்வினி னுண்மை யாகு
மற்றது பகல்வி ளக்கின் மாய்ந்திட வருவ துண்டேற்
பெற்றிடு மதனை மாயப் பிறப்பினை யறுக்க லாமே. ௩

முந்திய வொருமை யாலே மொழிந்தவை கேட்டல் கேட்டல்
சிந்தனை செய்த லுண்மை தெளிந்திட லதுதா னாகை
வந்தவா றெய்த னிட்டை மருவுத லென்று நான்கா
மிந்தவா றடைந்தோர் முத்தி யெய்திய வியல்பி னோரே. ௪

பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலு
மீசனை யறிய வொண்ணா திறையருண் ஞான கண்ணித்
தேசுறு மதனுன் முன்னைச் சிற்றறி வொழிந்து சேர்ந்து
நேசமோ டுயர்ப ரத்து நிற்பது ஞான நிட்டை. ௫

விளம்பிய வகையி னிட்டை மேவிட லரிதேன் முன்ன
மளந்தறி வளித்த வற்றி னளவுமற் றவற்றி னாலே
யுளங்கொளுந் தனையு முள்ள படியுமுற் றுணர்ந்து செவ்வே
தளர்ந்திடா துவப்ப மற்றத் தன்மைய தாகுந் தானே. ௬

பாவிக்கின் மனுதி வேண்டும் பயனிலை கரண நீத்துப்
பாவிப்ப னென்னி லென்ன பழுதுள பாவ கத்தாற்
பாவிக்க வொண்ணா தென்று பாவிப்ப னென்னி னீயென்
பாவிக்க வேண்டா வாண்ட பரனருள் பற்றி னோர்க்கே. ௭

ஒன்றிரண் டாகி யொன்றி னொருமையா மிருமை யாகி
யொன்றிலொன் றழியு மொன்றா தென்னினொன் றாகா தீயி
னொன்றிரும் புறழி னின்று முயிரினைந் தொழிலும் வேண்டு [றே.
மொன்றிநின் றுணரு முண்மைக் குவமையா ணவத்தொ டொன்

அழிந்திடும் பாச மென்னி னித்தமென் றுரைத்தல் வேண்டா
வழிந்திடா தென்னின் ஞான மடைவது கருதல் வேண்டா
வழிந்திடுஞ் சத்தி நித்த மழிந்திடா வொளியின் முன்ன
ரழிந்திடு மிருளு நாச மடைந்திடா மிடைந்தி டாவே. ௯

எல்லையில் பிறவி நல்கு மிருவினை யெரிசேர் வித்தி
னெல்லையி னகலு மேன்ற வுடற்பழ வினைக ளூட்டுந்
தொல்லையின் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டே
லல்லொளி புரையு ஞானத் தழலுற வழிந்து போமே. ௰

## புனிதனுமம்

பந்தமா னவைய றுத்துப் பவுதிக முழலு மெல்லைச்
சந்தியா தொழியா திங்குத் தன்மைபோல் வினையுஞ் சாரு

மந்தமா திகளி லாத வஞ்செழுத் தருளி னாலே
வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாவே. ௰௧

திருவெழுத் தைந்தி லான்மா திரோதமா சருள்சி வஞ்சூழ்
தரநடு நின்ற தொன்றாந் தன்மையுந் தொன்மை யாகி
வருமந மிகுதி யாலே வாசியி லாசை யின்றிக்
கருவழிச் சுழலு மாறுங் காதலார்க் கோத லாமே. ௰௨

ஆசுறு திரோத மேவா தகலுமா சிவமுன் னாக
வோசைகொ ளதனி னம்மே லொழித்தரு ளோங்கு மீள
வாசியை யருளு மாயா மற்றது பற்றா வுற்றங்
கீசனி லேக மாகு மிதுதிரு வெழுத்தி னீடே. ௰௩

---

# பதினோராஞ் சூத்திரம்

## அணைந்தோர் தன்மை

தீங்குறு மாயை சேரா வகைவினை திரிவி தத்தா
னீங்கிட நீங்கா மூல நிறையிரு ளிரிய நேயத்
தோங்குணர் வகத்த டங்கி யுளத்துளின் பொடுங்க நேரே
தூங்குவர் தாங்கி யேகத் தொன்மையிற் றுகளி லோரே. ௧

குறிப்பிடங் காலந் திக்கா சனங்கொள்கை குலங்கு ணஞ்சீர்
சிறப்புறு விரதஞ் சீலந் தபஞ்செபந் தியான மெல்லா
மறுத்தற வொழிதல் செய்தன் மருவிடா மன்னு செய்தி
யுறக்குறு பவர்போல் வாய்மை யொழிந்தவை யொழிந்து போமே

அகம்புற மென்றி ரண்டா லர்ச்சனை புரியு மிந்தச்
சகந்தனி லிரண்டு மின்றித் தமோமய மாகி யெல்லா
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழு நீர்மையார் போல ஞானந்
திகழ்ந்தகம் புறமெ னாத செம்மையார் நன்மை யாரே. ௩

அண்டமே யிடவ னைத்து மனைத்தையு மண்ட மேவிக்
கொண்டல்போ லெவையு ஞானங் குறைவிலா நிறைத லாலே
கண்டதோர் பொருளை யந்தக் கருத்தினுற் காணிற் றானே
யண்டனா யகனு மேனி யானதே லைய மின்றே. சு

மண்முதல் கரண மெல்லா மறுவசத் தாக்கி ஞானக்
கண்ணினி லூன்றி யந்தக் கருத்தினு லெவையு நோக்கி
யெண்ணியஞ் செழுத்து மாறி யிறைநிறை யுணர்ந்து போற்றல்
புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலு மன்றே. எ

---

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

தொண்டர்க ளிடத்தும் வானோர் தொழுந்திரு மேனி தானு
மண்டருங் கண்டி லாத வண்ணலே யெனவ ணங்கி
வெண்டா ளங்கள் சிந்த விழிமொழி குழற மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே க

---

நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவி தாந் தத்துக்
குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி வேதத்
தலைதரு பொருளா யின்பாய்த் தாவில்சற் காரி யத்தாய்
மலைவறு முணர்வாற் பெத்த முத்திகண் மதித்தா மன்றே. உ

திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்றால் விளம்பிய வேது நோக்கிப்
பெருகிய வுவமை நான்கின் பெற்றியி னிறுவிப் பின்முன்
றருமலை வொழியக் கொள்வோன் றன்மையிற் சாற்ற லாமே. ந

## சிவப்பிரகாசம்

முற்றிற்று

மெய்கண்ட சாத்திரம் - அ.

# திருவருட்பயன்

உமாபதி சிவாசாரியர்

உ

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# திருவருட் பயன்

## கணபதி வணக்கம்

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

## க-வது. பதிமுதுநிலை

அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரிலிறை நிற்கு நிறைந்து. க

தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான். உ

பெருமைக்கு நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி
னருமைக்கு மொப்பின்மை யான். ௩

ஆக்கி யெவையு மளித்தா சுடணடங்கப்
போக்குமவன் போகாப் புகல். ௪

அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவ முடையா னுளன். ௫

பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவ
னில்லாதா னெங்க ளிறை. ௬

ஆனா வறிவா யகலா னடியவர்க்கு
வானாடர் காணாத மன் ௭

எங்கு மெனையு மெரியுறுநீர் போலேகந்
தங்குமவன் றானே தனி. ௮

நலமில னண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன். ௯

உன்னுமுள தைய மிலதுணர்வா யோவாது
மன்னுபவந் தீர்க்கு மருந்து. ௰

## ௨-வது. உயிரவைநிலை

பிறந்தநாண் மேலும் பிறக்குநாள் போலுந்
துறந்தோர் துறப்போர் தொகை. ௧

திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்க ளன்றி
யொருமலத்தா ராயு முளர். ௨

மூன்று திறத் துள்ளாரு மூலமலத் துள்ளார்க
டோன்றலர்தொத் துள்ளார் துணை. ௩

கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னோ செயல். ௪

பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற. ௫

ஒளியு மிருளு முலகு மலர்கட்
டெளிவி லெனிலென் செய. ௬

சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை
யுய்த்தல்சத சத்தா முயிர். ௭

இருளி லிருளாகி யெல்லிடத்தி னெல்லாம்
பொருள்க ளிலதோ புவி. ௮

ஊமன்கண் போல வொளியு மிகவிருளே
யாமன்கண் காணா தவை. ௯

அன்றளவு மாற்றுமுயி ரந்தோ வருடெரிவ
தென்றளவொன் றில்லா விடர். ௰

## ௩-வது. இருண்மலநிலை

துன்றும் பவத்துயரு மின்புந் துணைப்பொருளு
மின்றென்ப தெவ்வாறு மில். ௧

இருளான தன்றி யிலதெவையு மேகப்
பொருளாகி நிற்கும் பொருள். ௨

ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டு
மிருபொருளுங் காட்டா திது. ௩

அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடையடங்கி
யின்றளவு நின்ற திருள். ௪

பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றுங்
கணவர்க்குந் தோன்றாத கற்பு. ௫

பன்மொழிக ளென்னுணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்தந் தது. ௬

இருளின்றேற் றுன்பே னுயிரியல்பேற் போக்கும்
பொருளுண்டே லொன்றாகப் போம். ௭

ஆசாதி யேலனைவ காரணமென் மூத்திநிலை
பேசா தகவும் பிணி. அ

ஒன்று மிகினு மொளிகவரா தேலுள்ள
மென்று மகலா திருள். கூ

விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து. ய

## ச-வது. அருளதுநிலை

அருளிற் பெரிய தகிலத்து வேண்டும்
பொருளிற் றலையிலது போல். க

பெருக்க நுகர்வினை பேரொளியா யெங்கு
மருக்கனென நிற்கு மருள். உ

ஊனறியா தொன்று மூயிரறியா தொன்றுமிவை
தானறியா தாரறிவார் தான். ௩

பாலாழி மீனுளும் பான்மைத் தருளுயிர்கண்
மாலாழி யாளு மறித்து. ச

அணுகு துணையறியா வாற்றோனி லர்து
முணர்வை யுணரா வுயிர். ரு

தரையை யறியாது தாமே திரிவோர்
புரையை யுணரா புவி. சு

மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர் ஞானந்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம். எ

வெள்ளத்து ளுவற்றி யெங்கும் விடிந்திருளாங்
கள்ளத் திறைவர் கடன். அ

பாப்பமைந்து கேண்மினிது பார்க்கலன்மேற் பூஞை
காப்பருந்த நாடுங் கடன். க

இற்றை வரையியையந்து மேதும் பழக்கமிலா
வெற்றுயிர்க்கு வீடு மிகை. ம

## ரு-வது. அருளுருநிலை

அறியாமை யுண்ணின் றளித்ததே காணுங்
குறியாகி நீங்காத கோ. க

அகத்துறுநோய்க் குள்ளின ரன்றி யதனைச்
சகத்தவருங் காண்பரோ தான். உ

அருளா வகையா லருள்புரிய வந்த
பொருளா ரறிவார் புவி. ந

பொய்யிருண்ட சிந்தைப் பொறியிலார் போதமா
மெய்யிரண்டுங் காணார் மிக. ச

பார்வையென மாக்களைப் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி. ரு

எமக்கென வெவனுக் கெவைதெரியு மவ்வத்
தமக்கவனை வேண்டத் தவிர். சு

விடநகுல மேவினுமெய்ப் பாவகனின் மீளுங்
கடனிலிருள் போவதிவன் கண். எ

அகலத் தருமருளை யாக்கும் வினைநீக்குஞ்
சகலர்க்கு வந்தருளுந் தான். அ

ஆரறிவா ரெல்லா மகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின். கூ

ஞான மிவனொழிய நண்ணியிடு நற்கலனல்
பானு வொழியப் படின். ௰

## ௯-வது. அறியுநெறி

நீடு மிருவினையு நேராக நேராதல்
கூடுமிறை சத்தி கொளல். க

ஏக னநேக னிருள்கரும மாயையிரண்
டாகவிவை யாறாதி யில். உ

செய்வானுஞ் செய்வினையுஞ் சேர்பயனுஞ் சேர்ப்பவனு
முய்வா னுளனென் றுணர். ௩

ஊனுயிரால் வாழு மொருமைத்தே யூனொடுயிர்
தானுணர்வோ டொன்றாந் தரம். ௪

தன்னிறமும் பன்னிறமுந் தானுங்கற் றன்மைதரும்
பொன்னிறம்போன் மன்னிறமிப் பூ. ௫

கண்டொல்லை காணுநெறி கண்ணுயிர் நாப்பணொளி
யுண்டில்லை யல்ல தொளி. ௬

புன்செயலி னோடும் புலன்செயல்போ னின்செயலை
மன்செயல தாக மதி. ௭

ஓராதே யொன்றையுமுற் றுன்னாதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார். ௮

களியே மிகுபுல னுக்கருதி ஞான
வொளியே யொளியா வொளி. ௯

கண்டபடி யேகண்டு காணாமை காணாமை
கொண்டபடி யேகொண் டிரு. ௰

## எ-வது. உயிரவைவிளக்கம்

தூநிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோற்
றூனதுவாய் நிற்குந் தரம். க

தித்திக்கும் பாற்றனுங் கைக்குந் திருந்திடுநோப்
பித்தத்திற் றன் றவிர்ந்த பின். உ

காண்பா ரொளியிருளிற் காட்டிடவுந் தான்கண்ட
வீண்பாவ மெந்நாள் விழும். ௩

ஒளியு மிருளு மொருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல். ௪

கிடைக்கத் தகுமேநற் கேண்மையார்க் கல்லா
லெடுத்துச் சுமப்பானை யின்று. ௫

வஞ்ச முடனொருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல். ௬

தனக்குநிழ லின்று மொளிகவருந் தம்ப
மெனக்கவர நில்லா திருள். எ

உற்கைதரும் பொற்கை யுடையவர்போ லுண்மைப்பி
ணிற்க வருளார் நிலை. அ

ஐம்புலனாற் றன்கண் டகன்று லதுவொழிய
வைம்புலனர் தாமா ரதற்கு. ௯

தாமே தருமவரைத் தம்வலியி னாற்கருத
லாமே யிவனா ரதற்கு. ௰

## அ-வது. இன்புறுநிலை

இன்புறுவார் துன்பா ரிருளி லெழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின். க

இருவர் மடந்தையருக் கென்பயனின் புண்டா
மொருவ னொருத்தி யுறின். ௨

இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவ
மின்பகன மாதலினு லில். ௩

தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலைநீ யேகமெனக் கொள். ௪

ஒன்றுனு மொன்று திரண்டாலு மோசையெழா
தென்றாலு மோரிரண்டு மில். ௫

உற்றாரும் பெற்றாரு மோவா துரையொழியப்
பற்றாரு மற்றார் பவம். ௬

பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமே
நீயொன்றுஞ் செய்யாது நில். ௭

ஒண்பொருட்க ணுற்று ருறுபயனே யல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போற் காண். ௮

மூன்றாய தன்மையவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றாத வின்பமதென் சொல். ௯

இன்பி னினிதென்ற லின்புண்டே லின்புண்டா
மன்பு நிலையே யது. ௰

## ௯-வது. ஐந்தெழுத்தருணிலை

அருணாலு மாரணமு மல்லாது மைந்தின்
பொருணூ றெரியப் புகின். ௧

இறைசத்தி பாச மெழின்மாயை யாவி
யுறநிற்கு மோங்காரத் துள். ௨

ஊன நடன மொருபா லொருபாலா
ஞானநடந் தானடுவே நாடு. ௩

விரியமன மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும். ௪

மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
மேலாசு மீளா விடின். ௫

ஆராதி யாதார மந்தோ வதுமீண்டு
பாராது மேலோதும் பற்று. ௬

சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும்
பவமிதுநீ யோதும் படி. ௭

வாசி யருளியதை வாழ்விக்கு மற்றதுவே
யாசி லுருவமுமா மங்கு. ௮

ஆசினவா நாப்ப ணடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு. ௯

எல்லா வகையு மியம்பு மிவனகன்று
நில்லா வகையை நினைந்து. ௰

## ௰-வது. அணைந்தோர்தன்மை

ஓங்குணர்வி னுள்ளடங்கி யுள்ளத்து ளின்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல். ௧

ஐந்தொழிலுங் *காரணங்க ளாந்தொழிலும் போகநுகர்
வெந்தொழிலு மேவார் மிக. ௨

எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரொன்
றல்லா தறியா ரற. ௩

* காரணர்கள் என்பதும் பாடம்.

புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார்
தலனடக்கு மாமை தக. ௪

அவனையகன் றெங்கின்றா மாங்கவனை யெங்கு
மிவனையொழிந் துண்டாத லில். ௫

உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திறமேது மில். ௬

உறுந்தொழிற்குத் தக்க பயனுலகந் தந்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன். ௭

ஏன்ற வினையுடலோ டேகுமிடை யேறும்வினை
தோன்றி லருளே சுடும். ௮

மும்மை தரும்வினைகண் மூளாவா மூதறிவார்க்
கம்மையு மிம்மையே யாம். ௯

கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக. ௰

## திருவருட்பயன்

முற்றிற்று

மெய்கண்ட சாத்திரம் - கூ.

# வினா வெண்பா

உமாபதி சிவாசாரியர்

திருச்சிற்றம்பலம்

## உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# வினா வெண்பா

### நேரிசை வெண்பா

நீடு மொளியு நிறையிருளு மோரிடத்துக்
கூட லரிது கொடுவினையேன்—பாடிதன்மு
ணின்றவார் சோலை யுயர்மருதச் சம்பந்தா
நின்றவா றெவ்வாறு நீ. க

இருளி லொளிபுரையு மெய்துங் கலாதி
மருளி னிலையருளு மானுங்—கருவியிவை
நீங்கி லிருளா நிறைமருதச் சம்பந்தா
வீங்குணரு ளாலென் பெற. உ

புல்லறிவு நல்லுணர்வ தாகா பொதுஞான
மல்லதில துள்ளதெனி லன்னியமாந்—தொல்லையிரு
ளூனமலை யாவா றுயர்மருதச் சம்பந்தா
ஞானமலை யாவாய் நவில். ௩

கனவு கனவென்று காண்பரிதாங் காணி
னனவி லவைசிறிது நண்ணு—முனைவனரு
டானவற்றி லொன்றா தடமருதச் சம்பந்தா
யானவத்தை காணுமா றென். ௪

அறிவறிந்த தெல்லா மசத்தாத மாயின்
குறியிறந்த நின்னுணர்விற் கூடா—பொறிபுலன்க
டாமா வறியா தடமருதச் சம்பந்தா
யாமா ரறிவா ரினி. ௫

சிற்றறிவு முற்சிறையிற் சேர்வாரின் றுஞ்சிறிது
மற்றதனி னிற்கிலருண் மன்னுவாந்—துற்றமுகின்
மின்கொண்ட சோலை வியன்மருதச் சம்பந்தா
வென்கொண்டு காண்பே னியான். ௬

உன்னரிய நின்னுணர்வ தோங்கியக்கா லொண்கருவி
தன்னளவு நண்ணரிது தானாகு—மென்னறிவு
தானறிய வாரா தடமருதச் சம்பந்தா
யானறிவ தெவ்வா றினி. ௭

அருவே லுருவன் றுருவே லருவன்
றிருவேறு மொன்றிற் கிசையா—வருவோரிற்
காணி லுயர்கடந்தைச் சம்பந்தா கண்டவுடற்
பூணுமிறைக் கென்னும் புகல். ௮

இருமலர்த்தார்க் கில்லை யுடல்வினையென் செய்யு
மொருமலர்த்தார்க் காரை யுரைப்பேன்—றிரிமலத்தா
ரொன்றாக வுள்ளா ருயர்மருதச் சம்பந்தா
வன்றாகி லாமா றருள். ௯

ஒன்றிரண்டாய் நின்றொன்றி லோர்மையதா மொன்றாக
நின்றிரண்டா மென்னிலுயிர் நேராகும்—தன்றிருந்தார்
தாங்கியவாழ் தண்கடந்தைச் சம்பந்தா யானாகி
யோங்கியவா றெவ்வா றுரை. ௰

காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை
காண்பார்க ணன்முத்தி காணார்கள்—காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்
காட்டுநெறி வாரா தவர். ௰௧

ஒன்றி னுகர்வதில வூணூ முறுதொழிலு
மென்று மிடையி லிடமில்லை—யொன்றித்
தெரியா வருண்மருதச் சம்பந்தா சேர்ந்து
பிரியாவா றெவ்வாறு பேசு. ௰௨

அருளா லுணர்வார்க் ககலாத செம்மைப்
பொருளாகி நிற்கும் பொருந்தித்—தெருளா
வினாவெண்பா வுண்மை வினாவாரே லூமன்
கனாவின்பா லெய்துவிக்குங் காண். ௰௩

## வினாவெண்பா

*முற்றிற்று*

திருச்சிற்றம்பலம்

## உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# போற்றிப்பஃறொடை

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளி ராங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்ப - னாமன்னும்
வேதம்வே தாந்தம் விளக்கஞ்செய் விந்துவுட
னாதநா தாந்த நடுவேதம் - போதத்தா
௫ லாமளவுந் தேட வளவிறந்த வப்பாலைச்
சேம வொளியையெவருந் தேறும்வகை - மாமணிசூழ்
மன்று ணிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்த நிலைபோற்றி - குன்றாத
பல்லுயிர்வெவ் வேறு படைத்து மவைகாத்து
௰ மெல்லை யிளைப்பொழிய விட்டுவைத்துந் - தொல்லையுறு
மந்த மடிநடுவென் றெண்ண வளவிறந்து
வந்த பெரிய வழிபோற்றி - முந்துற்ற
நெல்லுக் குமிதவிடு நீடுசெம்பிற் காளிதமுந்
தொல்லைக் கடன்றோன்றத் தோன்றுவரு - மெல்லா
௰௫ மொருபுடை யொப்பாய்த்தா னுள்ளவா றுண்டா
யருவமா யெவ்வுயிரு மார்த்தே - யுருவுடைய
மாமணியை யுள்ளடக்கு மாநாகம் வன்னிதனைத்
தானடக்குங் காட்டத் தகுதியும்போன் - ஞானத்தின்

கண்ணை மறைத்த கடியதொழி லாணவத்தா
உய லென்னுஞ் செயன்மாண்ட வெவ்வுயிர்க்கு - முன்னடிக்
கட்புலனற் காணார்தங் கைக்கொடுத்த கோலேபோற்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண் - முற்பாற்
றனுகரண மும்புவன முந்தந் தவற்றான்
மனமுதலால் வந்தவிகா ரத்தால் - வினையிரண்டுங்
உஞ காட்டி யதனாற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு
மீட்டறிவு காட்டும் வினைபோற்றி - நாட்டுகின்ற
வெப்பிறப்பு முற்செ யிருவினையா னிச்சயித்துப்
பொற்புடைய தந்தைதாய் போகத்துட் - கர்ப்பமாய்ப்
புல்லிற் பனிபோற் புகுந்திவலைக் குட்படுங்கா
கூய லெல்லைப் படாவுதரத் தீண்டியதீப் - பல்வகையா
லங்கே கிடந்த வனாதியுயிர் தம்பசியா
லெங்கேனு மாக வெடுக்குமெனா - வெங்கும்பிக்
காயக் கருக்குழியிற் காத்திருந்துங் காமியத்துக்
கேயக்கை கான்முதலா யெவ்வுறுப்பு - மாசறவே
கூஞ செய்து திருத்திப்பின் பியோகிருத்தி முன்புக்க
வையவழி யேகொண் டணைகின்ற - பொய்யாத
வல்லவமே போற்றியம் மாயக்கா ரன்மறைப்ப
நல்ல வறிவொழிந்து நன்குதீ - தொல்லையுறு
வுக்காலந் தன்னிற் பசியையறி வித்தழுவித்
சய துக்காவி சோரத்தா யுண்ணடுங்கி - மிக்கோங்குஞ்
சிந்தை யுருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால்
வந்துமடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப் - பந்தித்த
பாசப் பெருங்கயிற்றாற் பல்லுயிரும் பாலிக்க
நேசத்தை வைத்த நெறிபோற்றி - யாசற்ற
சஞ பாலைப் பசும்பதத்தும் பாலனு மப்பதத்து
நாளுக்கு நாட்சகல ஞானத்து - மூன்வித்துக்
கொண்டாள வானக் கருவிகொடுத் தொக்கநின்று
பண்டாரி யான படிபோற்றி - தண்டாத

புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாமனையி
௩ம லன்புசேர் கின்றனகட் டைந்தாக்கி - முன்புள்ள
வுண்மை நிலைமை யொருகா லகலாது
திண்மை மலத்தாற் சிறையாக்கிக் - கண்மறைத்து
மூலவருங் கட்டிலுயிர் மூடமா யுட்கிடப்பக்
கால நியதி யதுகாட்டி - மேலோங்கு
௩௫ முந்திவியன் கட்டிலுயிர் சேர்த்துக் கலைவித்தை
யந்த வராக மவைமுன்பு - தந்த
தொழிலறி விச்சை துணையாக மாணி
னெழிலுடைய முக்குணமு மெய்தி - மருளோடு
மன்னு மிதயத்திற் சித்தத்தாற் கண்டபொரு
௪ம ளின்ன பொருளென் றியம்பவொண்ணு - வந்நிலைபோய்க்
கண்டவியன் கட்டிற் கருவிகளீ ரைந்தொழியக்
கொண்டுநிய மித்தற்கு நாட்கொடுப்பப் - பண்டை
யிருவினையான் முன்புள்ள வின்பத்துன் பங்கண்
மருவும்வகை யங்கே மருவி - யுருவுடனின்
௪௫ றோங்கு நுதலாய வோலக்க மண்டபத்திற்
போங்கருவி யெல்லாம் புகுந்தீண்டி - நீங்காத
முன்னை மலத்திருளுண் மூடா வகையகத்துட்
டுன்னுமிரு ணீக்குஞ் சுடரேபோ - லந்நிலையே
சூக்கஞ் சுடருருவிற் பெய்து தொழிற்குரிய
ரூம ராக்கிப் பணித்த வறம்போற்றி - வேட்கைமிகு
முண்டிப் பொருட்டா லொருகா லவியாது
மண்டியெரி யும்பெருந்தீ மாற்றுதற்குத் - திண்டிறல்சேர்
வல்லார்கள் வல்ல வகையாற் றொழில்புரித
லெல்லா முடனே யொருங்கிசைந்து - சொல்காலை
ரு௫ முட்டாமற் செய்வினைக்கு முற்செய்வினைக் குஞ்செலவு
பட்டோலை தீட்டும் படிபோற்றி - நட்டோங்கு
மிந்நிலைமை மானுடருக் கேயன்றி யெண்ணிலா

மானுயிர்க்கு மிந்த வழக்கேயாய் - முன்னுடைய
நாணாள் வரையி லுடல்பிரித்து நல்வினைக்கண்
௮௰ வாணாளின் மாலா யயனாகி - நீணாகர்
வானாடர் கோமுதலாய் வந்த பெரும்பதத்து
நானா விதத்தா னலம்பெறுநா - டான்மாள
வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட - விற்றைக்கு
௮௫ மில்லையோ பாவி பிறவாமை யென்றெடுத்து
நல்லதோ ரின்சொ னடுவாகச் - சொல்லியிவர்
செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று
வெய்துற் றுரைக்க விடைகொண்டு - மையறருஞ்
செக்கி னிடைத்திரித்துந் தீவாயி லிட்டெரித்துந்
௯௰ தக்கநெருப் புத்தூண் டழுவுவித்து - மிக்கோங்கு
நாராசங் காய்ச்சிச் செவிமடுத்து நாவரிந்து
மீராவுன் னூனைத்தின் னென்றடித்தும் - பேராம
லங்காழ் நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம்
வெங்கோப மாறாத வேட்கையரா - யிங்கொருநா
௯௫ ளெண்ணிமுதற் காணாத வின்னற் கடுநரகம்
பன்னெடுநாட் செல்லும் பணிகொண்டு - முன்னாடிக்
கண்டு கடன்கழித்தல் காரியமா மென்றெண்ணிக்
கொண்டுவரு கோயின் குறிப்பறிவார் - மண்டெரியிற்
காய்ச்சிச் சுடவறுக்கக் கண்ணூரிக்க நன்னிதிய
௱ மீத்துத்தாய் தந்தைதம ரின்புறுதல் - வாய்த்தநெறி
யோடியதே ரின்கீ ழுயிர்போன கன்றாலே
நீடுபெரும் பாவமின்றே நீங்குமென - நாடித்தன்
மைந்தனையு மூர்ந்தோன் வழக்கே வழக்காக
நஞ்சனைய சிந்தை நமன்றூதர் - வெஞ்சினத்தா
௱௫ லல்ல லுறுத்து மருநரகங் கண்டேகிற்க
வல்ல கருணை மறம்போற்றி - பல்லுயிர்க்கு

மின்ன வகையா லிருவினைக்க ணின்றருத்தி
முன்னைமுத லென்ன முதலில்லோ - னல்வினைக்க
ணெல்லா வுலகு மெடுப்புண் டெடுப்புண்டு
௬௰ செல்காலம் பின்னாகஞ் சேராமே - நல்லநெறி
யெய்துவதோர் காலந்தன் னன்பரைக்கண் டின்புறாத
லுய்யு நெறிசிறிதே யுண்டாக்கிப் - பையவே
மட்டாய் மலராய் வருநாளின் முன்னைநாண்
மொட்டா யுருவா முறைபோலக் - கிட்டியதோர்
௬௰௫ நல்ல பிறப்பிற் பிறப்பித்து நாடும்வினை
யெல்லை யிரண்டு மிடையொப்பிற் - பல்பிறவி
யத்தமதி லன்றே வளவென்று பார்த்திருந்து
சத்தி பதிக்குந் தரம்போற்றி - முத்திதரு
நன்னெறியின் ஞானகலர் நாடுமல மொன்றினையு
௭௰ மந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப் - பின்னன்பு
மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப் - பூவலயந்
தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை - யன்னவனுக்
௭௰௫ காதிகுண மாதலினா லாடுந் திருத்தொழிலுஞ்
சோதி மணிமிடற்றுச் சுந்தரமும் - பாதியாம்
பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியு மதிக்கொழுந்து - மச்சமற
வாடு மரவு மழகார் திருநுதன்மே
௮௰ லீடுருவ வன்னி நெடுங்கண்ணுங் - கேடிலயங்
கூட்டுந் தமருகமுங் கோல வெரியகலும்
பூட்டாவக் கச்சும் புலியதளும் - வீட்டின்ப
வெள்ளத் தழுத்தி விடுந்தா ளினுமடியா
ருள்ளத் தினும்பிரியா வொண்சிலம்புங் - கள்ளவினை
௮௰௫ வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலு

மொன்றுமுருத் தோன்றாம லுள்ளடக்கி - யென்று
மிறவாத வின்பத் தெமையிருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து - நறவாருந்
தாருலா வம்புயத்துச் சம்பந்த நாதனென்று
௱௪௫ பேரிலா நாதனொரு பேர்புனைந்து - பாரோர்த
முண்டி யுறக்கம் பயமின்ப மொத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம்போற்றி - மிண்டாய
வாறு சமயப் பொருளுமறி வித்தவற்றிற்
பேறின்மை யெங்களுக்கே பேருக்கித் - தேறாத
௱௫௰ சித்தந் தெளியத் திருமேனி கொண்டுவரு
மத்தகைமை தானே யமையாமல் - வித்தகமாஞ்
சைவ நெறியிற் சமய முதலாக
வெய்து மபிடேக மெய்துவித்துச் - செய்யதிருக்
கண்ணருளா னோக்கிக் கடியபிறப் பாற்பட்ட
௱௫௫ புண்ணு மிருவினையும் போயகல - வண்ணமலர்க்
கைத்தலத்தை வைத்தருளிக் கல்லாய நெஞ்சுருக்கி
மெய்த்தகைமை யெல்லாம் விரித்தோதி - யொத்தொழுகுஞ்
சேணு மிருள்வடிவுஞ் செங்கதிரோன் பானிற்பக்
காணு தொழியுங் கணக்கேபோ - லாணவத்தி
௱௬௰ ஞதி குறையாம லென்பா லணுகாம
னீதி நிறுத்து நிலைபோற்றி - மேதக்கோர்
செய்யுஞ் சரியை திகழ்கிரியா யோகத்தா
லெய்துஞ்சீர் முத்திபத மெய்துவித்து - மெய்யன்பாற்
காணத் தகுவார்கள் கண்டாற் றமைப்பின்பு
௱௬௫ நாணத் தகுஞான நன்னெறியை - வீணே
யெனக்குத் தரவேண்டி யெல்லாப் பொருட்கு
மனக்கு மலரயன்மால் வானோர் - நினைப்பினுக்குந்
தூரம்போ லேயணிய சுந்தரத்தா னென்றநிலமே
லாரும் படிதந் தருள்செய்த - பேராளன்

௭௩ டுறந்தபொரு ளேதென்னிற் றான்வேறு நான்வேறாய்
வந்து புணரா வழக்காக்கி - முந்தியென்ற
னுள்ளமென்று நீங்கா தொளித்திருந்து - தோன்றிநிற்குங்
கள்ளமின்று காட்டுங் கழல்போற்றி - வள்ளன்மையாற்
றன்னைத் தெரிவித்துத் தன்றாளி னுட்கிடந்த
௭௭ வென்னைத் தெரிவித்த வெல்லையின்கண் - மின்றரும்
வண்ண முருவ மருவுங் குணமயக்க
மெண்ணுங் கலைகால மெய்பொருளு - முன்னமெனக்
கில்லாமை காட்டிப்பின் பெய்தியவா காட்டியினிச்
செல்லாமை காட்டுஞ் செயல்போற்றி - யெல்லாம்போய்த்
௭௫ தம்மைத் தெளிந்தாராய்த் தாமே பொருளாகி
யெம்மைப் புறங்கூறி யின்புற்றுச் - செம்மை
யவிகாரம் பேசு மகம்பிரமக் காரர்
வெளியா மிருளில் விடாதே - யொளியாய்நீ
நின்ற நிலையே நிகழ்த்தி யொருபொருள்வே
௭௮ றின்றியமை யாமை யெடுத்தோதி - யொன்றாகச்
சாதித்துத் தம்மைச் சிவமாக்கி யிப்பிறவிப்
பேதந் தனிலின்பப் பேதமுறாப் - பாதகரோ
டேகமாய்ப் போகாம லெவ்விடத்துங் காட்சிதந்து
போகமாம் பொற்றாளி னுட்புணர்த்தி - யாதியுட
௭௯ னிற்க வழியா நிலையிதுவே யென்றருளி
யொக்க வியாபகந்தன் னுட்காட்டி - மிக்கோங்கு
மாநந்த மாக்கடலி லாரா வமுதளித்துத்
தான்வந்து செய்யுந் தகுதியினு - லூனுயிர்தான்
முன்கண்ட காலத்து நீங்காத முன்னோனை
௮௰ யென்கொண்டு போற்றிசைப்பே னியான்.

---

போற்றி திருத்தில்லை போற்றி சிவபோகம்
போற்றியவன் மெய்ஞ்ஞானப் புண்ணியநூல்—போற்றியெங்கள்
வெம்பந்த வாழ்க்கைவிட வேறாய்வந் துண்ணின்ற
சம்பந்த மாமுனிபொற் றாள்.

போற்றிப்பஃறொடை

முற்றிற்று

உ

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# உண்மை நெறி விளக்கம்

மண்முதற் சிவம தீறாய் வடிவுகாண் பதுவே ரூப
மண்முதற் சிவம தீறாய் மலஞ்சட மென்றல் காட்சி
மண்முதற் சிவம தீறாய் வகையதிற் றானி லாது
கண்ணுத லருளால் நீங்கல் சுத்தியாய்க் கருத லாமே. க

பாயிரு ணீங்கி ஞானந் தனைக்காண்ட லான்ம ரூப
நீயுநின் செயலொன் றின்றி நிற்றலே தரிச நந்தான்
போயிவன் றன்மை கெட்டுப் பொருளிற்போ யங்குத் தோன்றா
தாயிடி லான்ம சுத்தி யருணூலின் விதித்த வாறே. உ

எவ்வடி வுகளுந் தானே யெழிற்பரை வடிவ தாகிக்
கௌவிய மலத்தான் மாவைக் கருதியே யொடுக்கி யாக்கிப்
பௌவம்விண் டகலப் பண்ணிப் பாரிப்பா னொருவ னென்று
செவ்வையே யுயிரிற் காண்டல் சிவரூப மாகு மன்றே. ௩

பரையுயிரில் யானெனதென் றறநின்ற தடியாம்
பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது முகமா
முறையிறந்த சுகமதுவே முடியாகு மென்றிவ்
வுண்மையினை மிகத்தெளிந்து பொருள்வேறொன் றின்றித்

தரைமுதலிற் போகாது நிலையினினில் லாது
தற்பரையி னின்றழுந்தா தற்புதமே யாகித்
தெரிவரிய பரமானந் தத்திற் சேர்தல்
சிவனுண்மைத் தரிசனமாய்ச் செப்பு நூலே. ௪

எப்பொருள்வந் துற்றிடினு மப்பொருளைப் பார்த்தங்
கெய்துமுயிர் தனைக்கண்டிங் கவ்வுயிர்க்கு மேலா
மொப்பிலருள் கண்டுசிவத் துண்மை கண்டிங்
குற்றதெல்லா மதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச்செய் வதுமதுவே நினைப்புமது தானே
தருமுணர்வு புசிப்புமது தானே யாகு
மெய்ப்பொருளு மசைவில்லை யெனவந்தப் பொருளோ
டசைவதுவே சிவயோக மெனுமிறைவன் மொழியே. ௫

பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினு நெறியல்லா நெறிபயிற்றி வரினுஞ்
சாதிநெறி தப்பிடினுந் தவறுகள்வந் திடினுந்
தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கி
னாதனவ னுடலுயிரா யுண்டுறங்கி நடந்து
நானாபோ கங்களையுந் தானாகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்
பெருகுசிவ போகமெனப் பேசுநெறி யிதுவே. ௬

## உண்மைநெறிவிளக்கம்

முற்றிற்று

மெய்கண்ட சாத்திரம் - ௰௨.

# கொடிக்கவி

உமாபதி சிவாசாரியர்

உ

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# கொடிக்கவி

ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று மேலிடிலொன்
றொளிக்கு மெனினு மிருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்
தெளிக்கு மறிவு திகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும் படிகொடி கட்டினனே. க

பொருளாம் பொருளேது போதேது கண்ணே
திருளாம் வெளியே திரவே—தருளாளா
நீபுரவா வையமெலா நீயறியக் கட்டினேன்
கோபுர வாசற் கொடி. உ

வாக்காலு மிக்க மனத்தாலு மெக்காலுந்
தாக்கா துணர்வரிய தன்மையனை—நோக்கிப்
பிறித்தறிவு தம்மிற் பிரியாமை தானே
குறிக்குமரு ளல்கக் கொடி. ௩

அஞ்செழுத்து மெட்டெழுத்து மாறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்து—நெஞ்சழுத்திப்
பேசு மெழுத்துடனே பேசா வெழுத்தினையுங்
கூசாமற் காட்டக் கொடி.

# கொடிக்கவி

முற்றிற்று

*

உ

திருச்சிற்றம்பலம்

---

## உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# நெஞ்சுவிடு தூது

---

### கலிவெண்பா

பூமேவு முந்திப் புயல்வண்ணன் பொற்பமைந்த
நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன் - றாமேவிப்
பன்றியு மன்னமுமாய்ப் பாரிடந்தும் வான்பறந்து
மென்று மறியா வியல்பினா - னன்றியு
மிந்திரனும் வானோரு மேனோரு மெப்புவியு
மந்தர வெற்பு மறிகடலு - மந்திரமும்
வேதமும் வேத முடிவும்விளை விந்துவுட
னாதமுங் காணா நலத்தினா - னோத
வரியா னெளியா னளவிறந்து நின்ற
பெரியான் சிறியான்பெண் பாகன் - றெரியா
வருவா னுருவா னருவுருவு மில்லான்
மரியான் மரிப்பார் மனத்தான் - பரிவான
மெய்யர்க்கு மெய்யன் வினைக்குவினை யாயினான்
பொய்யர்க்குப் பொய்யாய்ப்பொய் யாயினா - னையன்
படநாகம் பூண்ட பரமன் பசுவி
னிடமாய் நிறைந்த விறைவன் - சுடரொளியா
னென்றுமுள னன்றளவு மியானு முளனாகி
நின்றநிலை யிற்றரித்து நில்லாமற் - சென்றுசென்று

தோற்றியிடு மண்டஞ் சுவேதசங்கண் மண்ணின்மேற்
௰ சாற்றுமுற் பீசஞ் சராயுசங்கட் - கேற்றபிறப்
பெல்லாம் பிறந்து மிறந்து மிருவினையின்
பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன் - கல்லா
வுணர்வின் மிசையோ டுலகா யதனைப்
புணர்வதொரு புல்லறிவு பூண்டு - கணையிற்
கொடிதெனவே சென்று குடிபழுதே செய்து
கடிய கொலைகளவு காமம் - படியின்மிசைத்
தேடி யுழன்று தெரிவைத் தெரியாமல்
வாடி யிடையு மனந்தனக்கு - நாடியது
போன *வழிபோகும் புந்திக்கும் புந்தியுட
௰௫ ஞன திறலா ரகந்தைக்கு - மேனி
யயா வயா வழிய வழியு
முயிரின் றுயா முரையேன் - வயிரமே
கொண்டதொரு காமனுக்குங் கோபனுக்கு மோகனுக்கு
மண்டு மதமாச் சரியனுக்கும் - திண்டிறல்சே
ரிந்திரியம் பத்துக்கு மீரைந்து மாத்திரைக்கு
மந்தமிலாப் பூதங்க ளைந்தினுக்குஞ் - சிந்தைகவர்
மூன்றுகுற்ற மூன்றுகுண மூன்றுமல மூன்றவத்தை
யென்றுநின்று செய்யு மிருவினைக்குந் - தோன்றாத
வாயுவொரு பத்துக்கு மாறாத வல்வினையே
௨௰ யாய கிளைக்கு மருநிதிக்கு - நேயமா
மிச்சை கிரியை யிவைதரித்திங் கெண்ணிலா
வச்சங் கொடுமை யவைபூண்டு - கச்சரவன்
சீரினிலை யில்லாமற் றிண்டாடும் பல்கருவி
வாரியகப் பட்டு மயங்கினேன் - நேருங்கா
லுன்னை யொழிய வுறவில்லை யென்னுமது
தன்னை யறிவைத் தனியறிவை - முன்னந்

* வழியோடும் என்பதும் பாடம்.

‘தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவ’ ரென்று - நிலைத்தமிழின்
றெய்வப் புலமைத் திருவள் ளுவருரைத்த
௨௫ மெய்வைத்த சொல்லை விரும்பாம - லைவர்க்கு
மாவதுவே செய்தங் கவர்வழியைத் தப்பாமற்
பாவமெனும் பௌவப் பரப்பழுந்திப் - பூவையர்தங்
கண்வலையிற் பட்டுக் கலவிக் கலைபயின்றங்
குண்மை யறிவுணர்ச்சி யோராமற் - றிண்மையினா
னாவிற் கொடுமை பலபிதற்றி நாடோறுஞ்
சாவிற் பிறப்பிற் றலைப்பட்டிங் - காவிநிலை
நிற்கும்வகை பாராய் நிலையான நெஞ்சமே
பொற்பினுடன் யானே புகலக்கேள் - வெற்பின்மிசை
வந்திருக்க வல்லான் மதியாதார் வல்லரணஞ்
௩௰ செந்தழலின் மூழ்கச் சிரித்தபிரா - னந்தமிலா
வேத முடிவில் விளைவில் விளைவிலொளி
யாதி யமல னிமலனருட் - போத
வறிவி லறிவை யறியு மவர்கள்
குறியுள் புகுதுங் குணவ - னெறிகொள்
வெளியில் வெளியில் வெளியன் வெளியி
லொளியி லொளியி லொளிய - னொளியி
லளியி லளியி லளிய னளியி
லளவி லளவி லளவ - னளவிறந்து
நின்றா னனைத்து நிறைந்தா னினைப்பவர்பாற்
௩௫ சென்றான் றெரியத் தெரியாதான் - குன்றா
விளக்காய் நிறைந்த விரிசுடரான் விண்மேற்
றுளக்கம னின்றபெருஞ் சோதி - யுளக்கண்ணுக்
கல்லாது தோன்றா வமல னகிலமெலா
நில்லாம னின்ற நிலையினான் - சொல்லாரு
மீசன் பெருமை யிருவினையே னுன்றனக்குப்
பேசுந் தகைமையெலாம் பேணிக்கேள் - பாசம்

பலவுங் கடந்து பரிந்தருள்சேர் பண்பாற்
குலவி விளங்குருணக் குன்றே - னிலகவே
செய்ய தருமச் செழுங்கிரியின் மீதிழிந்து
௬0 வையம் பரவ மகிழ்ந்தெழுந்தங் - கையங்
களவுபயங் காமங் கொலைகோபங் காதி
யளவில்வினை யெல்லா மழித்திங் - குளமகிழத்
தொம்மெனவே யெங்கு முழங்கிச் சுருதிபயில்
செம்மைதரு மாகமங்கள் சேர்ந்தோடி - மும்மலத்தின்
காடடங்க வேர்பறித்துக் கல்விக் கரைகடந்தங்
கோடுபல பூதத் துணர்வழித்து - நீடுபுகழ்
மெய்வாய்கண் மூக்குச் செவியென்னப் பேர்பெற்ற
வைவாய வேட்கை யவாவழித்து - மையுமியல்
வாக்குப்பா தம்பாணி பாயுருபத் தம்பலவு
௭0 நீக்கிச் செறிந்து நிறைந்தோடிப் - போக்கரிய
பந்தமெனுஞ் சோலை பறித்துப் பாந்தலைக்கு
மந்தமனம் புத்தியுட ஞங்காரஞ் - சிந்தைவிழ
மோதி *யலைக்கு மருணீர்மை முக்குணமுங்
காதி யுரோமமெலாங் கைகலந்து - சீதப்
புளக மரும்பிப் புலன்மயக்கம் போக்கி
விளைவில் புலன்மூட்ட மேவிக் - களபதன
மாதர் மயக்க மழித்துவளர் மண்டலத்தின்
சோதியொரு மூன்றினையுஞ் சோதித்து - நீதியினு
லாதார மாறினுஞ்சென் றுறியடல் வாயுக்கண்
௮0 மீதான பத்து மிகப்பரந்து - காதிப்
பிருதிவியப் புத்தேயு வாயுவா காய
வுறுதி நிலமைந்து மோடி - மறுவிலா
நான்முகன்மா லீசன் மகேச னலஞ்சிறந்த
தான்முக மைந்தாஞ் சதாசிவமு - மானதொரு

---

*யருணீர்மையோங்கி·விறன் முக்குணமும். என்பதும் பாடம்.

விந்துநா தங்கடந்து சுத்த வெறுவெளியி
லந்தமிலாப் பாழடங்கத் தேக்கியபின் - முந்திவரு
மவ்வறிவுக் கப்பாலுஞ் சென்றகண்ட முள்ளாக்கிச்
செவ்வறிவே யாகித் திகைப்பொழிந்தங் - கெவ்வறிவுந்
தானுய வீடருளித் தன்னிற் பிரிவில்லா
௯௫ னூனி யெவ்வுயிர்க்கு முட்புகுந்து - மேனியிலா
ரஞ்சவத்தை யுங்கடந் தாயபெரும் பேரொளிக்கே
தஞ்சமெனச் சென்று *தலைப்பட்டு - வஞ்சமறத்
தானந்த மில்லாத தண்ணளியா லோங்கிவரு
மானந்த மென்பமதா ராறுடையா - ஞானந்தம்
பண்ணும் பயன்சுருதி யாகமங்கள் பார்த்துணர்ந்து
நண்ண வரியதொரு நாடுடையா - னெண்ணெண்
கலையா லுணர்ந்து கருத்தழிந்து காம
நிலையான தெல்லாமுன் னீத்திங் - கலைவறவே
தேட்டற்ற சிந்தை சிவஞான மோனத்தா
௬0 லோட்டற்று வீற்றிருக்கு மூருடையா - னட்டத்தாற்
றெண்ணீ ரருவிழச் சிந்தைமயக் கந்தெளிந்
துண்ணீர்மை யெய்தி யுரோமமெலா - நண்ணும்
புளகம் புனைமெய்யர் பொய்யிற்கூ டாம
லுளகம்பங் கொண்டுள் ளுருகி - யளவிலா
மாலா யிருக்கு மவர்மனத்தை வாங்கவருண்
மேலாய் விளங்கலங்கன் மெய்யினான் - மேலாத
வானம் புவன மலைகடலேழ் பாதாள
மூனைந்து பூதத் துயிருணர்ச்சி - ஞானமா
யெல்லாமா யல்லவா யெண்ணுவா ரெண்ணத்து
௬௫ ணில்லாம னிற்குநீள் வாசியான் - சொல்லாரும்
பாதாள மூடுருவிப் பாரேழும் விண்ணேழு
மாதார மாகி யகண்டநிறைந் - தோத

* தலைப்பெய்தி என்பதும் பாடம்.

வரிதா யெளிதா யருமறையா றங்கத்
துருவா யுயிரா யுணர்வாய்ப் - பெரிதாய
வெய்யதுயர்ப் பாசமற வீசியே வெம்பிறவித்
துய்ய கடலைத் துகளெழுப்பி - யையமுறுங்
காமக் குரோத*மத மாச்சரியங் காய்ந்தடர்த்துச்
சாமத் தொழிலின் றலைமிதித்து - நாமத்தாற்
கத்துஞ் சமயக் கணக்கின்விறற் கட்டழித்துத்
௭௰ தத்தம் பயங்கொலைக ளாங்கழித்தே - தத்திவரும்
பாசக் குழாத்தைப் படவடித்துப் பாவையர்த
மாசைக் கருத்தை யறவீசி - நேசத்தா
லானவே கங்கொண் டருண்மும் மதத்திழு
லூனையார் தத்துவங்க ளுள்புகுந்து - தேனைப்
பருகிக் களித்துயர்ந்த பன்மறைநாற் கோட்டான்
மருவித் திகழ்ஞான வானையா - னிருமுச்
சமையங் கடந்து தனக்கொப் பிலாத
சுமைதுன்ப நீக்குந் துவசன் - கமையொன்றித்
தம்மை மறந்து தழலொளியுள் ளேயிருத்தி
௭௫ யிம்மை மறுமை யிரண்டகற்றிச் - செம்மையே
வாயுவை யோடா வகைநிறுத்தி வானத்து
வாயுவையு மாங்கே யுறவமைத்துத் - தேயுறவே
யென்று மொருதகைமை யாயிருக்கு மின்பருளே
நின்று முழங்கு நெடுமுரசோ - னன்றியு
மாலு மயனும் வருத்தளித்த வையமெலாஞ்
சாலுமிதற் கப்பாலு மெப்பாலு - மேலை
யுலகு முலகா லுணரவொண்ணு வூரு
மிலகி நடக்குமெழி லானையா - னலகிறந்த
காட்சியான் காட்சிக்குங் காணுக் கலைஞான
௮௰ வாட்சியா ளுட்சிக்கு மாயினுன் - சூட்சியான்

---

* லோபமோகமதங்காய்ந்தடர்ந்து. எ - ம் பாடம்.

பாரும் திசையும் படரொளியா லேநிறைந்தான்
றாருந் தலையுமிலாத் தோன்றலான் - வேராகி
வித்தாகி வித்தின் முளையாகி மேவுதனுச்
சத்தாதி பூதங்க ளாகிச் - சுத்த
வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக் கப்பா
லுறுபொருளாய் நின்ற வொருவன் - பொறியிலியேன்
வெம்பும் பிறவியிலே வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனியென் றம்பிரா - னம்புவியோர்
போற்றுந் திருவடியென் புன்றலைமீ தேபொறித்தோ
அ௦ னேற்றின் புறத்தமைத்த வெங்கோமான் - சாற்றுவார்
சாற்றும் பொருளான் றனிமுதல்வன் றானல்லான்
வேற்றின்ப மில்லா விளங்கொளியான் - போற்றுங்
குருவேட மாகிக் குணங்குறியொன் றில்லாப்
பெருவேட மாய்நிறைந்த பெம்மான் - கருவேடங்
கட்டுமுருக் கட்டறுத்தான் கற்றவர்வாழ் தில்லையா
னெட்டுமவர்க்கெட்டா வியல்பினான் - மட்டவிழ்தார்
வானோன் பவனி வரக்கண்டு வல்வினையே
னேனோரு மேத்துதல்கண் டேத்தினேன் - றானென்னைப்
பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தையெல்லா
கய நீத்தா னினைவுவே றாக்கினான் - னேத்தரிய
தொண்ணூற் றறுவர்பயி றொக்கிற் றுவக்கறுத்தான்
கண்ணூறு தேனமிர்தங் காட்டினான் - வெண்ணீறும்
வேடமும் பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான்
மடையும் வாழ்க்கை மனையுமே - நாடரிய
வஞ்செழுத்தி னுள்ளீ டறிவித்தா னஞ்செழுத்தை
நெஞ்செழுத்தி னேய மயலாக்கி - யஞ்செழுத்தை
யுச்சரிக்குங் கேண்மை யுணர்த்தியதி லுச்சரிப்பு
வைச்சிருக்கு மந்த வழிகாட்டி - யச்சமறச்
சென்று விளக்கை யெழத்தூண்டிச் செஞ்சுடரி
கஉ லொன்றி யொருவிளக்கி னுள்ளொளிவாய் - நின்ற

பெருவிளக்கின் பேரொளியி னுள்ளே பிரச
மருவு மலர்போன் மதித்தங் - குருவினுருக்
கொள்ளா வருளைக் கொளுத்திக் குணங்குறியொன்
றில்லா விடத்தே யிளைப்பாற்றி - விள்ளாத
வுள்ள முதலாக வுற்றதெல்லாம் வாங்கவருள்
வெள்ள மயலளித்து மேவினான் - கள்ள
மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கிமன மெல்லா
மிறப்பித்தா னென்பிறவி யீர்த்தான் - விறற்சொல்லுக்
கெட்டானை யார்க்கு மெழுதா வியற்குணங்க
௯ ளெட்டானை யாற்று மெழுத்தினான் - மாட்டாரும்
பாடலா ராடலார் பண்பலார் நண்பலா
ராடலா ராட லகன்பதியாங் - கூடலார்
காணக் கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்
பாணர்க் கிலகு பலகையிட்டான் - சேணிற்
சிறந்த வுருவான் றிருமாலுக் கெட்டா
னிறைந்த திருவுருவாய் நிற்போன் - கறங்குடனே
சூறைசுழல் வண்டு சுழல்கொள்ளி வட்டமென
மாறில் கருணையினான் மாற்றினா - னீறணிந்த
மெய்ய னமல னிமலனருள் வீடளிக்கு
௯௫ மையனறி வுக்கறி வாயினான் - பொய்யர்பாற்
பொய்மையாய் நின்றான் புரிந்தவர்தந் நெஞ்சத்துண்
மெய்மையாய் நின்று விளங்கினான் - கைமழுவா
னத்தன்பா னீசென் றடையு மிடத்தையெல்லாஞ்
சித்தஞ்சேர் நெஞ்சமே செப்பக்கே - ணித்தலுமே
பூசிமுடித் துண்டுடுத்துப் பூங்குழலார் தங்கலவி
யாசைதனிற் பட்டின்ப வார்கலிக்கு - ணேசமுற
நின்று திளைக்கு மிதுமுத்தி யல்லதுவே
றொன்று திளைக்கு மதுமுத்தி - யன்றென்
றிலகா விருளலகை போலிகலே பேசு
௱ முலகா யதன்பா லுறாதே - பலகாலுங்

தாம்பிரமங் கண்டவர்போற் றம்மைக்கண் டாங்கதுவே
நான்பிரம மென்பவர்பா னண்ணாதே - யூன்றனக்குக்
கொன்றிடுவ தெல்லாங் கொலையல்ல வென்றுகுறித்
தென்றுமற மேசெய்வ மென்றென்று - வென்றிப்
பொறையே யெனும்புத்தன் பொல்லாத புன்சொன்
மிறையே விரும்பி விழாதே - நிறைமேவி
வாழ்பவர்போன் மண்ணுடலின் மன்னுமுரோ மம்பறித்துத்
தாழ்வுநிலை யாதுதுகி ரூனகற்றி - யாழ்விக்கு
மஞ்சு மகற்று மதுமுத்தி யென்றுரைக்கும்
காரு வஞ்சமணன் பாழி *மருவாதே - செஞ்சொல்புலை
யாதிமறை யோதி யதன்பயனொன் றும்மறியா
வேதியர்சொன் மெய்யென்று மேவாதே - யாதியின்மே
லுற்றதிரு நீறுஞ் சிவாலயமு முள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே - நற்றவஞ்சேர்
வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே - நீட
வழித்துப் பிறப்ப தறியா தரனைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே - விழித்தருளைத்
தந்தெம்மை யாண்டருளுஞ் சம்பந்த மாமுனிவ
ராஉயி னந்தங் கடந்தப்பா லாய்நின்றோ - னெந்தைபிரான்
வீற்றிருக்கு மோலக்க மெய்தியடி வீழ்ந்திறைஞ்சிப்
போற்றி சயசய போற்றியென - வார்த்தகரி
யன்றுரித்தாய் நின்பவனி யாதரித்தா ரெல்லாரும்
வென்றிமத னம்புபட வீழ்வரோ - நின்றிடத்து
நில்லாத செல்வ நிலையென் றுனைநீங்கிப்
பொல்லா நரகம் புகுவரோ - பல்லாருங்
கத்துஞ் சமயக் கணக்கிற் படுவரோ
சித்தம் பலகாற் றிகைப்பரோ - முத்தம்

---

* மதியாதே என்பதும் பாடம்.

பொருத நகைமடவார் புன்கலவி யின்ப
மருவி மயங்கி வருவரோ - விருபொழுது
நாளிருபத் தேழு நவக்கிரக மூந்நலியுங்
கோளிதுவென் றெண்ணிக் குறிப்பரோ - வேலை
யெரித்த விழியாய்நின் னின்பக் கடற்கே
தரித்து மதிமறந்த தையல் - வருத்தமெலாந்
தீரா யெனவுரைத்துச் செங்கமலப் பூந்திருத்தா
டாரா யெனப்பலகாற் றாழ்ந்திறைஞ்சி - யோராரும்
பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்துபுரி நெஞ்சமே
யீங்கொன்ற வாரா யினி.

---

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் றார்வாங்கி—யம்புந்தும்
வஞ்சமே யும்விழியார் வல்வினையெல் லாமகல
நெஞ்சமே வாராய் நினைந்து.

## நெஞ்சுவிடு தூது

முற்றிற்று

உ

திருச்சிற்றம்பலம்

---

## உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# சங்கற்ப நிராகரணம்

---

### விநாயகர் வணக்கம்

திருந்திய வருந்தவம் பொருந்துபன் முனிவர்
கமையாக் காத லமையாது பழிச்சு
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டுத்
௫ தழைசெவி மழைமதப் புழைநெடுந் தடக்கை
வாட்டரு மும்மை நாட்ட நால்வாய்ப்
பாச மங்குசந் தேசுறு மெயிறொண்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்
தங்கதங் கடகம் பொங்கிழை யார
௰ நிரைமணிச் சுடிகைக் கரையணற் கட்செவி
கொண்ட திண்பெரும் பண்டிக் குறுந்தாட்
களிறுத னிருகழல் கருதா
வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே.

---

## பாயிரம்

பெருங்கட லுதவுங் கருங்கடு வாங்கிக்
கந்தரத் தமைத்த வந்தமில் கடவுள்
பாலரை யுணர்த்து மேலவர் போலக்
கேட்போ ரளவைக் கோட்படு பொருளா
௫ லருளிய கலைக ளலகில வாலவை
பலபல சமயப் பான்மைத் தன்றே
யஃதா லந்நூற் றன்மை யுன்னிய
மாந்த ரிதுவே பொருளென் றதனிலை
யறைதலின் வேற்றோர் பனுவ லேற்றோர்க்
௰ கிசையா மாறுபாடு கூறுவ ரதனாற்
புறச்சம யங்கள் சிறப்பில வாகி
யருளின் மாந்தரை வெருளுற மயக்கி
யலகைத் தேரி னிலையிற் றீரு
மீங்கிவை நிற்க நீங்காச் சமய
௰௫ மூவிரு தகுதி மேவிய தாமு
மொன்றோ டொன்று சென்றுறு நிலையி
லாறு மாறா வீறுடைத் திவற்று
ளெவ்வ மில்லாச் சைவநற் சமயத்
தலகி லாகம நிலவுத லுளவவை
௨௰ கனக மிரணியங் காஞ்சன மீழந்
தனநிதி யாடகந் தமனிய மென்றிப்
பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை கிளக்கும்
வாய்ந்த நூல்க ளாய்ந்தன ராகி
௨௫ யாசா ஞகி லீசிய சமத்துட
னேழுஞ் சிருறா றெடுத்த வாயிரம்
வாழுநற் சகன மருவா நிற்பப்

பொற்பொது மலிந்த வற்புத ஞானி
யாரும் விழவிற் பொற்றே ராலயத்
௧௰ தேரு வெண்மர் நிரையி லிருப்ப
மயங்கு வாத மாயா வாதி
முயங்கிட வொருதலை முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணையம் பதிதிகழ்
மெய்கண் டவனருள் கைகண் டவர்களி
௧௫ லொருவ ரொருதலை மருவி யிருப்ப
வஞ்சப் பிறவிக் கஞ்சிவந் தொருவ
னேதிறை யருளென வீதெனு மாயா
வாதியை யயலினர் மறுதலைத் தருடா
மற்றவ ரயலின ரவருரை மறுத்துச்
௨௰ சொற்றா வயலின ரவருந் தொலைவுற்
றின்னே யெவரு முன்னே கழியுழி
யாங்கய லிருந்த வருளின ரழகிது
நீங்கள்சங் கற்ப நிராகரித் தமையென
மற்றவ ருரைத்த சொற்றரு பொருள்கொடு
௨௫ வாத செற்ப விதண்டையு மேதுவு
மோது நால்வகை யுவமையுந் திகழ்தா
வருள்சேர் மாந்தர் வெருள்சே ராமற்
றர்கமும் விடையமுங் கற்க
நற்கவி மாந்தர் நகநவிற் றுவனே. ௨

---

## நூல்

### மாயாவாதிசங்கற்பம்

நவிற்றிய நிரையி னவித்தையி னேனுரை
நித்த னறிவன் சுத்த னகண்டித
னிருவி கற்பனிர்த் தத்துவ னிரஞ்சனன்
சொல்வகை யெவையுந் தொடாத் தூய்மணி
௫ வாம்பில் வேதச் சிரந்தரு பரம்பொருள்
சத்தா யெவையுந் தானா யவித்தை
தொத்தா துயர்ந்த தொல்சுடர் மூவா
வின்ன தன்மைய னேக னநேகன்
கன்னற் பெருஞ்சுவை தன்னிற் பிறவாப்
௰ பெற்றியி னிருந்து பொற்பணி யியல்பினின்
வான்வளி யனனீர் மண்மருந் தன்ன
மான தாது வாறைங் கோசத்
தொகுதி யாக்கைப் பகுதிய தொருபுடை
சுத்தி வெள்ளி யொத்தென மித்தையிற்
௰௫ றானென லாகுந் தன்மைத் துனூதையிற்
சின்னூற் றகையின் வேற்றுமை மரீஇய
தென்னப் பன்மைய தெனினிலை பழம்பூத்
தோனோர் வயிரந் தருத்தருந் தொன்மையின்
வானோ ரந்திரை நுரைதரு வாய்மையிற்
௨௰ கூடு மசித்தைச் சித்துத வாதெனி
னெற்பதர் பலாலத் திற்பரந் தருமிது
தன்னியல் பென்றும் விளையாட் டென்றும்
முன்னுள மறைகண் மொழிதலி னொருநூற்
பன்மணி நிலையும் பசுப்பா லெனவும்
௨௫ பலவக னீரி லலர்கதி ரெனவுங்
கூல வாழி குளஞ்சிறு குழிகால்

வாலி யாவையும் வருபுன லெனவு
மவ்வவற் றடங்கி யாடியு ணிழலெனத்
தோன்றி யாக்கைநற் காந்தத் திரும்பும்
௩௰ கனவிற் றீங்குங் கங்குலிற் கயிறும்
புனலிற் றோன்றும் பேய்த்தேர்ச் செய்தியு
மன்ன துன்பி னன்னிறப் பளிங்கெனப்
பதினாற் காணத் தொருமூன் றவத்தை
நாளு நாளு நயந்துறு மிருபயன்
௩௫ றன்னிற் சாராத் தொன்மைத் தன்மை
தர்ப்பண நிழற்கட் குற்றிபாய்ந் தற்றே
யிவ்வியற் பந்தப் பௌவம தகல
விண்முத றந்த கொண்மூப் படலத்
திருளற வுதித்த காறக விவேகந்
௪௰ தன்னிற் றோன்றிச் சாதக மனைத்தையு
மன்னகப் பிரிப்பு மடியிழை வாங்கலும்
போல ஞானம் பொய்யறக் கழீஇத்
தானே தானாய்த் தன்னிற் றன்னைத்
தானே கண்டு தன்னல முற்று
௪௫ வசையி றத்துவ மசிபதத் தெளிவா
லகமே பிரம மாயின னெனவறிந்
தசல னாகிநற் சலசல மதியெனக்
கண்டிடு முடலம் விண்டகல் கடத்து
மங்குல துடைதர வெங்குமாந் தகைத்தே
௫௰ யிவ்வகை யுணர்ந்து செய்தொழி லரூத
மடவோர் தாமுங் கடனு வியற்றுங்
கன்ம காண்டத் தொன்மைப் புரிவாற்
றோற்றிய வித்தை மேற்கடை யரணியி
லெழுந்தெரி யவற்றை விழுங்கிய தென்னத்
௫௫ தன்னெழிற் றுள்ள தானு யழியு

ம லை யன்றி யழிவறு முத்தி
யேயா தென்றுதன் னியல்பை
மாயா வாதி வகுத்துரைத் தனனே. ௩

## மாயாவாதிசங்கற்ப நிராகரணமும் ஐக்கியவாதி சங்கற்பமும்

உரைதரு பிரம மொன்றெனு முரைக்கண்
வருபிர மாண மறையெனி லருமறை
யொன்றென் றதன்றி யிருபொரு ளுரைத்த
னன்றன் றபேத நாடிய பொருளேற்
௫ பேதமு மபேதமு மோத வேண்டா
பேத மெனினு மபேத மெனினும்
பேதா பேத மெனினு மமையுநின்
னையமி லுரையிற் பையவந் துளதாந்
திகழ்பிர மாண விகழ்வுமுண் டன்றிப்
௧0 பெத்தம் பேத முத்தி யபேதமே
லகவத் திதமா மவையிரு திறனு
மினியப் பழமொழி யிரண்டல வொன்றே
யன்றியும் பெத்தம் பேதத் தறைதலு
மொன்றிய முத்தி யபேதத் துரைத்தலும்
௧௫ பழுதா மித்திறம் பதையா தாய்கமற்
றெழுதா மறையெனு மிப்பிர மாண
மாருரை தானே யாயின தேனுன
தேக மநேக முறுபியம் பாமற்
சத்த ரூபந் தகாதெனில் வானத்
௨0 தொத்தொலி யுறமு மெனில்வறி துதியா
தன்றியும் பதமும் பாழியு மனைத்து
மின்றியோ ரொலியா யெழுந்திடு மதனுக்

கறிவில தருவில தறியா தறையா
தன்றியு மவ்வகை யகண்டித மதுவிது
௨௫ வென்றது குறிப்ப தெவ்வகை யாவு
மொன்றெனு முரையு மொழிந்தனை யன்றே
யருமறை பிரம வுரையெனி லதற்குத்
தந்த தாலு முதனவில் பொறியில
தென்னிலோ ருடற்கண் மன்னிய வலகை
௩0 யறைந்தற் றென்ப தார்சொ லதமலத்
திறம்பெற் றின்றே செய்தோர் பெயராற்
சுயம்பு வென்றுல கியம்புமென் றறியினித்
தற்கீட் டலைவரைத் தான்றொழு துரைக்குஞ்
சொற்கேற் புரவல னேவ லமைச்சரை
௩௫ யடிகண் மற்றெங் குடிமுழு தாண்மினென்
றேத்தி யிறைஞ்சிக் காப்பர்க ளென்றாங்
கீச ஞெசயப் பேசின னன்றி
யினையவை பிறரிற் கனவினு மிலனே
தன்னைத் துதிக்குஞ் சொன்னலந் தானுமத்
௪0 துறையறி வாணர்க் கறைவதொன் றன்றியுந்
தனக்குத் தானே தன்னலம் பகரா
தசத்துக் குரையா தார்க்குரை யுயிர்க்கெனி
லுரைபிர மாண மிறைபிர மேய
நீபிர மாதா நின்பிர மிதியென
௪௫ நால்வகை யுளதுன தேகநன் றன்றே
நற்பிர மாண நிற்பதொன் றன்றா
லப்பிர மேயமு மதனியல் பன்றே
கன்னற் சுவையி லந்நிய மிலதா
லினிமை தோன்றாத் தனிமைத் தென்றனை
௫0 யறிவிற் குவமை யசத்தாங் கட்டி
பிறிவித் தொட்டினும் பேற தாறுதே

தற்பா விரிவு பொற்பணி தருமெனிற்
செய்வோ ரின்றிச் செய்வினை யின்மையிற்
பொன்பணி யாகை தன்பணி யன்றே
௬௩ செய்வோர் போலாச் செயப்படு பொருண்முதற்
செய்வோ ரேயாச் செய்யவும் படுமே
சுத்தி வெள்ளியிற் றோன்றிற் றாயினுஞ்
சத்தில தேதுந் தாரா தருமெனி
னுலக மித்தையென் றோரா துரைத்தனை
௬௪ நிலவுநின் மாபு நினைந்திலை யாங்கொல்
விவகா ரத்தில் வேண்டுது முலகம்
பரமார்த் தத்திற் பகரா மென்னிற்
பரத்துள தேலிவை யும்பா மார்த்தம்
பரத்தில தேலொழி முன்பகர் மாற்ற
௬௫ மதன்முத லிதுவெண வுதவுக வன்றியும்
விவகரிக் குங்காற் றிகழ்பர மார்த்த
நிலையது தெரியி னிதுநீ நீயேற்
றெரியா தாயி னஃதுந் தெரியா
துரையா ளவையு மொழிந்தனை யன்றே
௬௬ யளவை காண்டல் கருத லுரையென
வுளதவை மூன்றின் மொழிவழி நுழையி
னின்பிர மேய மென்ப தெனுங்கொல்
பொற்பிதிர் பிதிர்ந்தும் பொன்னே யாநின்
றற்பா மசித்தைத் தருமா றென்னெனிற்
௬௭ சிலம்பி நூறரு நலம்போற் றோன்று
மென்ற னையது வதன்றொழி லன்றியு
மொன்றத னியல்புல கோரியல் பன்றெனப்
பலமிலை பழம்பூப் பாதவந் தருநீர்
திரைநுரை திவலை சிலதரு மிவைபோற்
௬௮ றானே பலவா மெனநீ சாற்றினை

சத்தசத் தாகவுஞ் சத்தினி லசத்தின்
கொத்துள தாகவுங் கூறின ரிலரால்
வித்திலை கனிநனி விழுதா றருநெறி
சத்தல தொன்று தான்றா வேண்டு
அ௫ நெற்பதர் பலாலத் திற்குபா தானமென்
காரண மின்றிக் காரியம் பிறவா
பாரிடை யொருபடம் பண்ணவும் படுமே
யந்தமில் பிரம மவித்தைகா ரணமெனத்
தந்தனை யவித்தை தானெய் துறுத
௬0 றன்னியல் பென்னில் வன்னிதன் வெம்மையிற்
சத்தின தியல்புஞ் சத்தே யசத்தெனில்
வைத்தத னியல்பெனும் வழக்கொழி யன்றியு
மிருள்பொதி விளக்கென வருமரு விளக்கிற்
கருமை பயந்த பெருகொளி தருமெனிற்
௬௫ றன்னியல் பன்றத னுபாதி வசத்தான்
மன்னிய தன்றிமைத் தான்றனின் மாயா
தொன்று னசுத்த னன்று மன்றே
யாங்கொரு காலத் தோங்கிய தாயி
னந்தமி லவித்தை வந்தணை வதற்கோ
எ ரேது வேண்டும் புயலியல் பெனின்வீ
டோத வேண்டா வொழிந்தோ ரினுமுறுங்
களங்கம துறவுறு மவித்தைதற் கவித்தல்
விளங்கிய பிரம விளையாட் டாயி
னவித்தை யென்பதொன் றன்னியந் தன்னி
எ௫ லுதிக்கு மென்றமுன் னுரையு மறந்தனை
நுண்ணூற் குடம்பை நூந்துழி போலுட்
படுநெறி யதனுல் விடுநெறி யிலதாற்
தலைமையு மறிவு மிலதென வித்தையை
விடுத்தெடுத் தாணரும் வேற்றோ ரன்றே

௱௰ யொளிகொ டாமிரங் குளிகைபெற் றுங்கத
னவித்தையை வித்தை தவிர்க்குமென் றுரைக்கி
னித்த னறிவன் சுத்தனென் றுரைத்த
வித்தக மென்னீ வித்தையும் வேறன்
றெம்ம னோரி லொருவ னின்னிறை
௧௧௫ யம்ம சைவந் தவனீ யன்றே
பன்மணி பசுநற் பாத்திர மெனவு
நன்னூல் பானீர் நற்கதி ரெனவு
முடலையு முணர்வையு முவமித் தனையேற்
றடமணி சரடொடு தாங்கூ டலவே
௧௨௰ யுணர்வுணர் வொழியி னுலகுணர் வறினின்
பாலும் பசுவுஞ் சாலுஞ் சாலக்
கலம்பல வன்றிச் சலம்பல விலதெனக்
காணு நரின்றி வீணின் விளம்பினை
யாடியு ணிழல்போற் கூடுதல் கூறிற்
௧௨௫ றன்னிழல் கொண்டு தற்பணஞ் சலிக்கின்
மன்னிழல் கொண்டுடல் வந்தகன் றிடுமே
மன்னயக் காந்த மெனவுடல் பிரம
சந்நிதி யளவிற் சலித்திடு மாயி
னகண்டிதன் சன்னிதி யலதில தேவையு
௧௩௰ நடந்திட வேண்டுங் கிடந்திடப் பெறாவே
காந்தத் திரும்பு காட்டுநர்ப் பெறிலயஞ்
சேர்ந்திடு நீக்குஞ் செயலதற் கிலதே
கணுத்துயர் கயிற்றர வெனுச்சில தொடுத்தனை
கனவின் பயனு நனவின் பயனும்
௧௩௫ வினையின் பயனவை பொய்யென வேண்டா
வுடன்மா றூட்டக் கடனது கருதுக
வுற்ற புற்று மற்றதிற் கயிறு
முடலுங் கூடச் சடமென வறிதி

யறிவு கயிறென் றறியா தன்றே
க௪௰ யச்சம தடைதல் கொச்சமை யுடைத்தே
யின்னுமக் கனவி லிருளுறு கயிற்றிற்
பின்னுநின் பிரமம் பிரமித் திடுமே
துன்னிய வினையிற் செம்மலர்ப் பளிங்கெனத்
தானுந் தகைமை யானுன் மலமென
க௪௫ வொருபய னன்றிப் பலபயன் மரீஇய
திருவினை தருபய னெனநனி வேண்டி
லாண்ட வித்தையு மவித்தைகொ டாக்கையு
மீண்டிரு வினையு மியம்பினை பாத்தைக்
கள்வரைப் பிணிக்குங் காவல னெனமுய
க௫௰ றெல்வினைத் தொடக்கிற் றென்றுடற் சிறையிட்
டிருவினை யூட்டு மெம்மா னம்மா
னருவினை யுடற்க ணவத்தைக ளுரைத்தனை
யாருறு பவர்பர மகண்டித மடங்கா
தோர்வில துடல்சட முறுநெறி யாதெனின்
க௫௫ மன்னிய கரண மாறுட் டத்திற்
பன்னின மென்னி னிவையோ பரமோ
முதலிய தாயி னிவைபிறழ் வெய்தா
திவையெனி லுனது மொழிபழு துளதே
யுடற்படு பிரம முறுமெனிற் சாளரத்
க௬௰ திடத்தகு முறுவி ரனுதியளி யெறிதுய
ரங்குலி தானே யருந்திடி லுடற்கட்
டங்கிய வறிவு தனித்துறு மன்றே
தற்பண நிழற்கட் குற்றிபாய்ந் தற்று
னற்கணிற் றுயர நணுகாத் தகைத்தெனி
க௬௫ னின்மொழி விரோதமுங் காட்சி விரோதத்
தன்மையு முறுமவை தவறில வாகா
யாமுடைப் பதிவகை யாவரும் பலகலை

*சொல்லுத லெளிதரி தத்தொழில் புரிவெனப்
புல்லிய பழமொழி புதுக்கினை யன்றே
௧௭௦ யகண்டித மெனநீ பகர்ந்தமை தனக்குப்
பந்த மிதுவெனத் தந்தமை கருதில்
வானி னடக்குங் காலினைப் பிடித்துப்
பருவிலங் கிட்ட வொருவனீ யன்றே
பந்தம தகல வுந்து விவேகம்
௧௭௫ வான்வளி யெனத்தனிற் றானே தோன்றின்
முன்புள தாயின் மயங்கா திலதெனிற்
பின்புள தாகா திலதுள தெனின்வெளி
மலாது தருமனல் மரக்கணின் றகித்
தருவது தகுமெனிற் றானே தோன்று
௧௮௦ விறகி னுதித்த கனறகு மாயி
னவித்தையி னுதித்த வித்தை யம்மரத்
துதித்த விவேகம் வித்தையென் றுரைத்த
வெந்தழ லனைய விவேக முதித்த
திந்தன மனைய திறையிலன் றற்றே
௧௮௫ யிற்படப் பிரிப்பின் மெய்ப்படு மொற்றையு
மிதுவன் றிதுவன் றெனக்கழி காலை
யதுவே தானே யாயின தென்றனை
வித்தை முன்ன ரவித்தையு மவித்தைமுன்
வித்தையு மில்லா வியலொளி யிருளென
௧௯௦ விருளல வொளிக்கு மொளியல விருட்கு
மொருகா லத்து மொருபய னிலதா
லிரண்டையு நுகரு முரண்டரு விழியென
வித்தையு மவித்தையு முய்த்ததொன் றுளதே
தானே தானு மானுற் பயனென்

---

* 'சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்' என்பது திருக்குறள்.

௧௯௫ றன்னிற் றன்னைத் தானே காணிற்
கண்ணிற் கண்ணைக் காணவும் படுமே
தன்னல மதனைத் தானே நுகரு
மென்னின் முன்னல மெய்தா திருந்ததென்
கட்டி போலெனக் கதறினை யின்பம்வந்
௨௦௦ தொட்டிடும் வித்தை யுடையையா யிடினே
தத்துவ மசியென வைத்தமுப் பதத்திற்
கொன்றே பொருளென் றன்றே பகர்வது
நீபுலி யாயினை யென்றாங் குணரி
லாயினை யென்றது மாகுவ மைத்தா
௨௦௫ ஞேயா யினமே லாயா யென்று
லகமே பிரம மாயின தென்றாற்
சகமே யறியத் தான்வே றன்றே
யுண்மையிற் சலமில வுடற்சஞ் சலமுறும்
வெண்மதி போல விளங்கிடு மென்றனை
௨௧௦ யசல னாகிச் சஞ்சல சலத்துச்
சலன மேவின மெனமதி காண
வேண்டும தன்றிக் காண்பவர் பிறரே
லீண்டுன தேகமென் செய்த தியம்புக
வுடல்விடக் கடத்துட் படுவெளி போலெனில்
௨௧௫ விட்டென் பெறவுடற் பட்டென் படமற்
றிகலற வொருவ னிவ்வகை தெளியி
லகிலமு முத்தி யடைந்திட வேண்டு
மறிந்தோர் முத்தி யடைந்தோ ராயின்
பிறிந்தோ ருயிர்பல பேதந் தன்றே
௨௨௦ கன்ம காண்டங் காரண மாக
மன்னும் விவேக மென்னி லவித்தைக்
கேது காரண மோதினை யில்லை
யிதற்குங் காரணம் விதித்தல்வேண் டின்றே

யாணியி லுதித்த கனலவை கவர்வென
௨௨0 விரதத் துதித்த விவேக மழித்தல்
வருந்தி யாயினுந் திருந்திய வேத
நீதி யெல்லா நீத்துப் போதமொன்
றறியார் தாமு மவ்வழி நடத்தல்
பொறியோ போத நெறியோ விதுபல
௨௩0 நீங்கிடு நெறிதரு பாங்கினைப் பழித்த
னன்றி கொன்ற லன்றே யன்றியு
ஞால நீதியு நான்மறை நீதியும்
பாலருன் மத்தர் பசாசரி லெனவு
முறங்கி னென்கை வெறும்பாக் கெனவுங்
௨௩௫ தானே தவிரா தானுற் புரியா
தொழிந்திடி னிரயத் தழுந்துத றிடமே
யுய்த்தோ னன்றி முத்தி யுரைத்தல்
பித்தோ பிரமஞ் செத்தோ பெறுவ
துடலையு நீயே சடமெனச் சாற்றினை
௨௪0 வையினும் வாழ்த்தினுங் கொய்யினுங் கொளுத்தினும்
வணங்கினு முதைப்பினும் பிணங்குதல் செய்யாப்
பிரமத் தன்மை பெறுவதெக் கால
மிருக்கு நாள்சில வெண்ணினால் கதறித்
தருக்கம் பேசித் தலைபறி யுற்றுக்
௨௪௫ கண்டோ ரீந்த பிண்டமுண் டலறிப்
பன்னா யாக்கை தன்னா யுற்றுடல்
விடவரு மென்று நடுநடு நடுங்கி
விட்டோர் தெய்வத் தொட்டின் றன்றியும்
யானே யெவரு மானே னென்றவி
௨௫0 னவ்வவர் சீறி யவ்வவர் வாளுட்
செவ்விதி னிரயஞ் சேர்த்துவ ரதனால்
மாயா வாதப் பேயா வுனக்குத்

தேவரி லொருவருண் டாக
மேவரு நரகம் விடுத்தலோ வரிதே
௨௫௫ யரிதேர்ந் துணராப் பெரியோ னுரைத்த
பதிபசு பாச விதிமுறை கிளக்கி
லீச னேக னெண்ணிலி பசுக்கள்
பாச மிருவகைப் பரிசின துலகத்
தாயவ னுயிர்க்கு மாயையி னருளா
௨௬௦ லிருவினைத் தொகையி லுருவினைத் தருமாற்
கருமுகி லடார விரிதரு கதிர்போன்
றறிவா முயிரிற் பிறியா தேயு
மீட்டு மிருபய னூட்டிடு நியதிக்
கொருபொழு திருபய னுகர்வுற மருவுத
௨௬௫ லின்மை யாதன் முன்னிய காலைச்
சத்தி நிபாத முற்றிறை யருளா
லுருவுகொ டுலகு தெரிவுற மருவி
மாசுறுந் தூசு தேசுற விளக்குந்
தன்மையி னுணர்த்தும் புன்மைக ணீங்கி
௨௭௦ நீரு நீருஞ் சேருந் தகைமையி
னறிவினோ டறிவு செறிவுறப் பொருந்தி
யொன்றா மென்பதை யுலகோர்
நன்றா முத்தி யெனநவின் றனரே.

## ஐக்கியவாதிசங்கற்ப நிராகரணமும் பாடாணவாதி சங்கற்பமும்

முத்தி யென்ப தெவனோ சுத்த
வறிவெனிற் பாசஞ் செறியா மாயை
யுருவிரு வினையால் வருமிரு வினையு
முருவா லன்றி மருவா திவற்றின்
௫ முந்திய தேதோ வந்தணை வதற்கோ

ரேது வேண்டுந் தானியல் பென்னின்
வீடுற் றவரினுங் கூடக் கூடு
மீங்கிவை நிற்க நீங்காக் கருவிகள்
கொண்டறி வறியக் கண்டது மன்றி
௰ மருவிய வுருவு துயில்பெறுங் காலைச்
சிறுபொறித் தறுகட் கறையணற் சுடிகைத்
துத்திக் கடுவுட் டுளையெயிற் றுரகக்
கொத்தயல் கிடப்பினுங் குலைதரு நவமணி
யொருபாற் றுதையினும் பெருகார் வத்திறே
௰௫ டச்சமு மணுகாக் கொச்சமை யென்னே
கருவி யாவும் பிரிவுறு நிலையேற்
பொறிபுல ஞறி குறைவற நிறைந்து
காட்சிய தளிக்கு மூட்சியின் முன்னர்க்
கொடுத்தோ ராழி விடுத்தவர் நாடிக்
௨௰ கொள்வோர்க் காணு துள்கி மீண்டுழித்
தந்தவர் கண்டாங் கந்தமி லதனைத்
தருக வென்னும் பெருமதி பிறங்கும
தறிவி லாமையென் றனையது மலமாக்
குறிகொ ளாள ரறைகுவ ரன்றே
௨௫ யறிவிற் கறிவு செறியவேண் டின்றே
யுண்மையி லிருமையு மொளியே யெனிலொரு
தன்மை யாகமுன் சாற்றின ரிலரே
முன்பு நன்றுட னென்றிய காலை
யின்ப மெய்துதற் கிலதுயி ராதலி
௩௰ னீயலை பொருத மாயா வாதி
யாயினை யமையு மருணிலை கேண்மதி
மூல மலத்தாற் சாலு மாயை
கருமத் தளவிற் றருமுரு விறைவன்
செறிந்திரு பயனு நுகர்ந்திடு முயிர்க

௩௫ ளிருளுறு மலத்திற் பருவாம் படுதலி
னிடையிரு நோக்குந் தடைபட் டோரிற்
றுயருறு மதனுற் செயிருறு துன்பங்
கொத்தை மாந்த ருய்த்துறுந் துயில்போற்
காட்சி யென்னக் காணுத் துயர
௪௰ மாட்சியை முத்தி யெனவகுத் தனரே. ௭

## பாடாணவாதி சங்கற்ப நிராகரணமும் பேதவாதி சங்கற்பமும்

வகுத்துரை பெருகத் தொகுத்திடு முத்தி
நன்று நன்றிரு வொன்றிய மலத்தா
முளத்திற் குறுபொறி செறிபுல னுகர்தல்
விளக்கிற் றிகழு மேன்மைய தன்றே
௫ கருவிக ளகல்வுழி மருவிய துயரமு
நன்றென லாகுந் துன்றிய படலத்
திடைதடைப் பட்ட சுடர்விழி மாந்தர்
படல நீங்குதல் கடனு தலினே
காட்சி யென்னக் காணுத் துயர
௰ மாட்சியை முத்தி யெனவகுத் துரைக்கிற்
*காரணு பாவ மரணங் கருமா
மேய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே
யனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா
தனிதரு துயர மெனுமிது திடமே
௰௫ பாடா ணத்திற் கூடா முத்தி
யீசன தருளாற் பாசத் தொகுதி
செறிவுறு செம்பிற் கறையுறு களிம்பு
குளிகை தாக்க வொளிபெற் றாங்கு

* 'காரணந் தப்பினல் மரணம்' என்பது ஒரு பழமொழி.

நித்த சுத்த முத்த ராக
௨௰ வைத்தன ருலகின் மறைவல் லோரே.

## பேதவாதி சங்கற்ப நிராகரணமும் சிவசமவாதி சங்கற்பமும்

மறைக ளாகமத் துறைகண்மற் றெவையு
நாசமில் பதிபசு பாசமென் றுரைத்த
லயர்த்தோர் குளிகைச் சயத்தாற் றும்பிரக்
காளித நாசம் பாசத் தேய்த்தல்
௫ கூடா தன்றியுங் குளிகை சீருணை
நீடா தழித்த நிலைநிலை யாதலிற்
பேத வாத மோதுதல் பிழையே
யின்னு மின்னுயி ரேமங் குளிகை
தன்னி லங்கியந் தருவது திடமே
௰ வீடித் திறத்தினிற் கூடக் கூடா
பாசமும் பசுவு மீசனு மென்றிம்
மூவகை யுணர்வுந் தான்முதன் மையவாய்ப்
பாச வைம்புலன் றேசுற வுணர்த்தப்
பசுத்தனி ஞானம் புசித்திடு மன்றே
௰௫ யினைய ஞானம் பிரிவுற வெரியாச்
செந்தழ றகுநெறி யந்தமி லுயிரு
மறிவா யொன்று மறியா தன்றே
யிவ்வா றெழுகு மேனை யுயிர்க்கு
முன்னோன் றனது முதிரொளி ஞான
௨௰ மறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த
வண்டென வுயிரைக் கொண்டிடு முயிரது
தன்னை நோக்கித் தானது வாகி
யைவகைத் தொழிலு மெய்வகை யுணர்வும்

பிரியா வாறு பெற்றுத்
௨௫ திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே.

## சிவசமவாதி சங்கற்ப நிராகரணமும் சங்கிராந்தவாதி சங்கற்பமும்

சேர்ந்த மும்மை வாய்ந்த ஞானமு
மொருகா லன்றித் தெரிவுற நிற்கி
லொண்பொருள் காணும் பண்பினுக் கொருகாற்
பருதியு மதியு மெரிதரு விளக்கும்
௫ வேண்ட லின்றே காண்டற்கு காலை
யொன்றொன் றாக நின்றறி வுறுமெனி
லந்நிய மறியா மன்னுயிர் பொறிபுலன்
றானே யறியா தலைவர்க் குலகினை
யானே வறிவா லறியவேண் டின்றே
௰ கொழுந்தழ றகுமெனி லழுந்திடு மவத்தையிற்
றிரியாத் தலைவர் தெரியாத் தன்மைவந்
தெய்த லாகா மெய்யுறு பொருட்கு
முன்னர்க் கீடந் தன்னை யெடுத்த
வேட்டுவ னியல்பு கூட்டல் பெறாதே
௰௫ வண்டிறும் பெடாவுட் கொண்டது தனக்கு
மந்திர வாதந் தந்தது மிலதே
யெடுத்திடு மதனை லடுத்ததென் றறையிற்
கருமயிர்க் குட்டி யிருசிறைப் பறவை
யாயினை தெடுத்த தாயர்சாற் றிலரே
௨௰ பிறவிப் பேதத் துறையிவை கிடக்க
வேயு மித்திற ஞயுங் காலை
யோகத் தகுதி யாகத் தகுமே
ஞான மின்மையென் றோதுவ தெவனெனி
லுயிரு முணர்வும் பயிலுத லின்றி

௨௫ வேட்டுவ னுருவ மென்புழு வுணர்வு
கூட்டுத லாலுருக் கூடுத லானு
முத்தியி லிறையிற் பற்றுத லின்றித்
தன்னுரு வணைந்த பின்னத னுணர்வு
மாறுத லானு மூறுடைத் தன்றே
௩௰ யீசன தியல்பரு ளெய்துயி ரியற்றல்
பேசுத றவறெனப் பெருமறை யறைய
வைந்தொழி லுயிருந் தந்திட றகுமோ
யாவதென் முன்னா *ணாவலர் பெருமான்
பண்டொரு முதலை யுண்ட மைந்தனை
௩௫ வரவழைத் தனனென் றாய்பிழைப் பிலததூஉந்
தந்திட வேண்டு மென்றன னன்றே
யின்னவை கிடக்க முன்னவன் றன்மை
யெய்தின ரெல்லாச் செய்தியுஞ் செய்வ
ரிரும்பெரி யெய்தித் தருஞ்செய றகவெனிற்
௪௰ பொருணிலை கிடக்க வொருதிட் டாந்தப்
பேறே யாயிற் சீறாக் கதுவிய
புனலொரு புடைசேர் கனறகு மாயினும்
வேறொரு பொருளை நீறாக் கிலதே
நெருப்பெனு மிதனி னுருத்தனி காட்டுக
௪௫ வங்கியு மொன்றிற் றங்கினின் றல்லது
தன்றொழி னடத்தா தென்றறி யினிநீ
யிரும்பனற் செய்தி தரும்பரி சுளதோ
வதுவெனோ ரலகை பொதிதருங் காலை
யதன்செய லனைத்து மிவன்செய லாமா
௫௰ லவனிவ னாகி லிவனவன் செய்திக்
கென்னவை யென்னிற் பின்னுறு செயலு
மதன்செய லன்றி யிவன்செய லாகி

* நாவலர் பெருமான் -, சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

லிவன்செயல் பேயின் றன்செய லாகி
யிருந்த வாவெனத் தெரிந்திட வேண்டுந்
௬௫ தெரியா தாகிற் புரியிற் கடுங்கன
லெரிந்த தென்னு மிதுதகு மன்றியு
மவனிவ னுகி லிவனவன் செய்தி
யென்று செய்வா னென்றிய மதத்தா
யெல்லா மறிதல் செல்லா துயிர்கள்
௬௰ சிற்றறி வெனுமிச் சொற்றவ றுகு
மென்பதெ னலகை தன்பத மடைந்தோர்
கொண்ட வாறு கண்டன மென்னின்
மூங்கை யந்தருந் றேங்கிய குணங்குறி
செய்வதெ னின்னும் *பௌவமுற் றழுந்தினு
௬௫ நாழி கொள்ளா தாழியி னலைபுன
லதனுற் கருத்து முதலுள தாக
வேண்டு மன்றே யீண்டினி யமையு
மெல்லா மெனுமிச் சொல்லாற் படும்பொரு
ளனைத்துந் தாக்கா தனிப்பாத் துற்றவர்க்
எ௰ கெவ்வகை யுணர்வு செய்வதென் செப்புக
வொன்றி னென்று மொன்று துலகி
னின்ற போதுயிர் நேரா மன்றே
முத்தி யுற்ற நற்றவ ரவையிடைச்
சேர்வ ரென்றனை சார்தரு முத்தி
எ௫ சாலோக் கியமோ சாயுச் சியமெனிற்
பந்த முற்ற கந்தல கழித்த
வறிவினோ டறிவு பிரியாப் பெற்றி
வேண்டு மென்றதற் கீண்டிவ ரிவ்வா
றிருப்ப ரென்பதற் குருத்தான் வேண்டு

---

*'ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடலி, னாழிமுகவாது நானாழி' என்னுஞ் செய்யுள்.

௮௰ மண்ணல தருளி னண்ணி யிருப்பினுஞ்
சிவன் முத்தரென் றோதின ரகன்று
நீங்கியு முருவ நீங்கா தாயி
னோங்கிய முத்தி யாவதென் னுரைக்க
செடியுட லணுகாக் குடிலை கொடுக்குமென்
௮௫ றோதினை நீயே பேதாய் பகட்டொ
லொளிர்சினை முச்சித் தளிரொறு மிதுதகு
மிச்சா ரூபா நச்சின ரொன்னின்
மும்மலத் தேது மின்மைய தன்றே
யிதுவனர் முத்திப் பதமென வியம்புவ
௯௰ நீங்கிவை நிற்க நீங்கா தொளிருயிர்
விளக்கென நிற்கு மளப்புறு மறிவின்
றிறைவர்க் கேது மறியவேண் டின்றே
மன்னு மான்ம சந்நிதி யளவிற்
காந்த பசாசத் தேய்ப்ப வாய்ந்த
௯௫ வுயிருட லியக்குஞ் செயலுறு பூட்டைப்
பலவகை யுறுப்பு மிலகிய தொழில்போ
லைம்பொறி புலன்க ளின்புறு மன்றே
யினைய வாய்தலி னிகழ்தரு பயனவை
யந்தக் கரண முந்தி யுணர்ந்திடு
௱ மிவையகல் வுழீஇயைம் பொறிபுல னிகழா
வுயிர்நீங் கிடினுடல் செயலில தன்றே
யிவ்வகை வினையின் செவ்விதி நடத்தும்
பழமல நீங்க நிகழுங் காலை
யெற்றோர் முகவொளி தோற்றுங் கலனெனத்
௱௫ தலைவன தருளுயிர் நிலவிடு நிலவக்
காட்டத் தங்கி மாட்டத் தங்கிய
தன்மையு மனத்துப் புல்லையி னீப்பும்
போன்றது வாகித் தோன்றிடு மதனாற்

பசுகரணங்கள் சிவகரணங்க
௫௰ ளாக மாறி யறிவு
மேக மாமுயி ரியானென றின்றே.

## சங்கிராந்தவாதி சங்கற்ப நிராகரணமும் ஈசுவரவவிகாரவாதி சங்கற்பமும்

இன்றுனை துரையி னன்றி யுயிரொளிர்
தீபம் போலத் தாபந் தரினிருள்
செறியுந் தன்மையெ னறிவில தாகி
லொளியென *வுரைத்த தெளிவதற் கேதாஞ்
௫ சந்நிதி யளவின் மன்னுஞ் செயலுடல்
காந்தம் போல வாய்ந்த தென்ற
தன்மையு முணராப் புன்மைய தன்றே
யுயிருட லியக்கிற் றுயில்பெறுங் காலைச்
செய்ததென் மனுதி யெய்துயிர் பொறிபுல
௰ னடத்த வாவியுஞ் சடத்தன வாயிற்
பூட்டையிற் பூணி கூட்டல் பெறாதே
புலனைம் பொறியி னிலவிடு மென்றனை
யஞ்சு மொருகாற் றுஞ்சா தறிதற்
கழிவென் றருச்செழு மலரிலை யொடுபலங்
௰௫ கனிதரு வதுபோ லினையவை யைந்து
மொன்றொன் றாக நின்றறி வுறுமெனி
லொன்றின் பயனனி யொன்றறி யாதா
லிதுவே யல்லது கதுமென விருசெவி
யிருகூற் றொருகாற் றெரியாத் தன்மைவந்
௨௰ தெய்து மனுதியு மெய்யுயிர்ச் செயலுந்
தனக்கில தொருவற் கெனத்தெளி கிலையே
நோக்கு முகவொளி நீக்கா தாளெனக்

* உரைத்தல் என்பதும் பாடம்.

கவருந் தன்மை முகுரம் போலக்
கொடுத்தது கோடற் கடுத்துண் டன்றே
௨௫ காட்டத் தங்கி கூட்டக் கூடி
யிந்தனத் தியற்கை வெந்தழ லுங்கா
வுப்பளத் தடுத்த புற்பலா லங்கள்
சடத்த வேனுங் கொடுத்தது கொள்ளுந்
தன்மை யுண்டுனக் கின்மைய தன்றே
௩௰ யவமுறு கருவி சிவமய மாமெனக்
கூறினை யாகம் வேறுருக் கவரா
தென்பதெ னவைமுற் றுன்பந் துடைக்குந்
திருவருண் மருவ வுரியன வென்னி
லருளுரு மாயா விருளின தாங்கொல்
௩௫ சத்த பரிச ரூப ரசநறை
யெத்திறத் தினதரு ளியம்புக வன்றியு
*நிறைந்து நீயாய் நின்றனை யேனு
மறைந்தைம் புலனும் வாரா யென்றுங்
†கரண மெல்லாங் கடந்தனை யென்று
௪௰ ‡மரணமை யைந்தி னப்புறத் தென்று
முன்னருட் டலைவர் பன்னின ரெனவு
மினையவை யொழிய வறிகுவ தெவ்வா
றென்ற நிற்கலிக் கொன்றிய வின்பங்
கூறுத றகுமருட் பேறினை யன்றே
௪௫ யேக முயிரறி வாக மொழிந்தனை
யிருபொரு ளொருமை மருவிய தில்தே
யிவ்வகை யிடக்க மெய்வகை கேண்மதி

---

* கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி. ௪௩.

† திருக்கோத்தும்பி. ௧.

‡ திருநாவு: திருவாரூர். பண் - காந்தாரம். ௰.

பஃறுளைக் குடத்தி னுள்விளக் கேய்ப்ப
வறிவுளா தாகு முருவுறு முயிர்கள்
௫௰ கண்ணு லோசையுங் கந்தமுங் கருத
வொண்ணு தென்னு முணர்வுடை மையினு
லவ்வப் புலன்கட் கவ்வப் பொறிகள்
செவ்விதி னிறுவிச் சேர்ந்தவை நுகரு
மூல மலத்தின் பாகம்வந் துதவுழீஇ
௫௫ யிருடரு மிற்புக் கொருபொருள் கவரத்
தீபம் வேண்டு மானவா போல
மோக மாமலம் போக ஞான
விளக்கா னருளாற் றுளக்கறப் பொருந்தி
நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளைச்
௬௰ *சலமில ஞகிச் சார்ந்தவர்க் கென்று
நலமிக நல்கு நாதனை யணைந்து
பூழி வெம்மை பொருந்தா துயர்ந்த
நீழல் வாழு நினைவினர் போலத்
திருவடி நீழல் சேர்ந்து
௬௫ கருவுறு துயரங் களைந்திருந் திடுமே. ௧.

## ஈசுவரவவிகாரவாதி சங்கற்ப நிராகரணமும் நிமித்தகாரண பரிணமவாதி சங்கற்பமும்

இருந்துன் கேள்வி திருந்திடு முயிர்க
ளறிவெனில் வாயிற் பொறிபுல னென்னை
மற்றவை பற்றி யுற்றறிந் திடுதலி
னறிவென வழங்கு முயிரென வுரைத்தல்
௫ காணுங் கண்ணினன் கைகொடு தடவிப்

* 'சலமிலன் சங்கரன்' என்று தொடங்கும் தேவாரம் - திருநாவுக்கரசு. பஞ்சாக்கரப்பதிகம்.

பூணும் பொருளின் பெயர்பல புகற
லென்னுங் கிளவி தன்னொடு தருமே
யவ்வப் புலன்கட் கவ்வப் பொறிகளைச்
செவ்விதி னிறுவலி னறிவெனச் செப்பினை
௰ யறிவி லாமைகண் டனமனை புலற்குப்
பொறிக ளேவலி னறிவொடு பொருந்திற்
கண்டதோர் பொறியாற் கொண்டிட வேண்டு
முதவிய தொன்றாற் கதுமென வியற்றின
ருண்டோ வென்னிற் கண்டன மேனாட்
௰௫ கடவுளிற் கடிமலர் முடுகிய மதன
னங்க மனங்கந் தங்கிடக் கிடந்தது
வையின் றிரளிற் செய்ய சிறுபொறி
மாட்டி மூட்டின தன்றே மீட்டுந்
தேனமர் தவிசி னான்முக னுச்சி
௨௰ யறுத்துங் கருவி பொறுத்தோ வன்றே
யீசன தியல்பு பேசுத றவிர்க
காழி மாநகர்க் கவுணியர் கடவுண்
ஞான மாகிய நற்பதி கங்க
ளெழுதுறு மன்பர்த மின்புறு மொழியாற்
௨௫ களிறென வினைந்த கன்மனப் புத்தன்
முருட்டுச் சிரமொன் றுருட்டின ரன்றி
வாய்ந்த வாளொன் றேந்தின ரிலரோ
வென்றது மீர்வாள் கொன்றதென் பதுபோற்
றனித்துணை யருளாற் றுணித்தன ரென்ப
௩௰ வாதலின் வாயி லளவினி லறிதலி
லேதமி லறிவுயிர்க் கெய்துத லிலதே
யிருட்கு விளக்கொன் றேந்தினர் போல
மருட்கு ஞான மன்னுத லுளதே
யென்றனை கருவிக ளியாவு மசேதனங்

௩௫ தூன்றிய வுயிருந் துரியத் தன்மைய
ஞூதலி னந்த ரனைவருங் கூடித்
தீதற வருநெறி தெரியுமென் றற்றே
நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளைச்
சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடு மென்றனை
௩௬ பாதவ மென்றுஞ் சேதன மின்மையி
னிளைத்தோர் வம்மி னென்பதுந் துன்பம்
விளைத்தோர் தம்மில் வெறுப்புமொன் றிலதே
பொடித்திடு கொப்புள் வெடித்திடு பாதம்
வெய்ய பூழியி னுள்ளுற வழுங்கி
௩௭ யாற்றுத லின்றி யாறியங் கினர்முன்
ரேற்றிடு மென்று சொல்லவு மிலதா
லிவ்வகை கடவுட் கியம்புத றவறே
பாச ஞானப் பழிவழி யொழிக
வீசன தருள்வழி யியம்புவன் கேண்மதி
௩௮ புவன மியாவையும் புனிதன துருவாஞ்
சிவமுஞ் சத்தியு மெனத்தெளி யவற்று
ளசேதன மென்றொன் றறைதற் கிலதது
சேதந னுகர்பொழு திரண்டுமோர் திறத்தே
யிதுவெனு மொன்றை யதுவாய்ப் படுத்துப்
௩௯ பொதுமையி னிற்கும் போதமென் றறிக
பொற்பணி பேதம் புரைவழி யொருவழி
நற்பொனிற் றிகழ்வென நயப்பதொன் றன்று
லாவது மாகா தொழிவது மெனுமிப்
பாவக முண்மை பாரா தோர்க்கே
௪௦ பாரா தோரெனப் பல்லுயிர் பகர்தலி
ஞராய்ந் துரைக்கி னவைபிற வல்ல
பலபல பேத மிலவென் போருமில்
கண்ணினை தொளியைக் கண்ணின தெனிலது

திண்ணிய விருளிற் செறிபொரு டெரித்தலு
௬௫ மின்மை மின்மினி யெனவிரு கண்மணித்
தன்மை தானுந் தாவில தகளுற்
கண்ணின துருவு மதிற்கதி ரொளியு
நண்ணருஞ் சத்தி சத்தர்க ணடிப்பே
[1]யுலகே ழெனத்திசை பத்தென வொருவன்
௭௰ பலவாய் நின்ற படியிது வென்று
[2]மூன்று யுயிரா யுணர்வா யென்று
[3]மானக் கண்ணே மணியே யென்றுந்
[4]தாமே தாமாய்ச் செய்தன ரென்று
[5]நாமே சிவமாய் நண்ணின மென்றுங்
௭௫ [6]காயாய்ப் பழமாய்ச் சுவையாய் நுகர்வு
மோயா துண்போன் றானே யென்று
[7]மறிவோன் றானு மறிவிப் போனு
மறிவா யறிகின் றோனு மறிவுறு
மெய்ப்பொரு டானும் வியந்திது வெனப்படு
௮௰ மப்பொரு ளியாவு மவனே யென்றுந்
[8]தாய்தலைப் பட்டங் கொன்றாய்த் தென்று
[9]மேதம தறநான் கெட்டே னென்று

---

1 திருவாசகம். திருத்தோணோக்கம். ௫.
2 திருநாவு. தே. திருவானைக்காத்தாண்டகம். ௨.
3 ஷை திருவாவடுதுறை. ஷை க.
4 (?)
5 திருவாசகம். திருத்தெள்ளேணம். ௪.
6 திருநாவு. தே. நின்ற திருத்தாண்டகம் ௫. [வந்தாதி. ௨௰.
7 பதினொராந் திருமுறை. காரைக்காலம்மை. அற்புதத்திரு
8 கருவூர்த் தேவர் திருவிசைப்பா. கங்கைகொண்ட சோ. ௭.
9 திருவாசகம். திருத்தென்னேணம் ௧௮.

மின்னு மின்னு மிறையோ னளித்தவை
பன்னி லெண்ணரும் பான்மைத் தாதலிற்
அரு றருபொருள் கொள்பொரு டருவோன் கொள்வோ
னொருபொரு ளிவ்விய லுவப்பென வுணர்க
நுகர்பொருள் சத்தி நுகர்வோன் சத்தனென்
றிகலறு முணர்வுநந் தெய்துத லரிதே
நானவ னெனுமிது நவைவழி நல்வழி
௧௰ தானவ னுகை யிதுசா யுச்சிய
மித்திறன் றெளிய வுய்த்திடு மளவு
மியாதொரு வகையி னீதிய தாகத்
தானறி வழியே தலைநின் றென்று
மூனுயிர் சிவத்தி லொடுங்கிட நடத்தி
௧௫ மூடு முழுமலம் வீடுங் காலைக்
கருவிக ளளவிற் புரிதரு மறிவு
சாக்கிரங் கனவு நீக்கமில் சுழுனை
துரிய மென்றவை பயிறரு மறிவு
துரியா தீதந் திரியாத் தன்மையி
௨௰ லிறையரு ளுதவுங் கறையற மாறி
யறிவே யாகும் பிறியாக் கருவிக
ணிறைமுத லவத்தையி லறிவில தாகத்
துரியா தீதத் தோற்றந்
திரியா ததுநற் சிவகதித் திறனே. ௰

## நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்ப நிராகரணமும் சைவவாதி சங்கற்பமும்

திறம்பெற நீயிங் கறைந்தமை கருதிற்
புவன மியாவையும் புனிதன தருவெனி
லவன்முதற் காரண மன்றா மென்னி
னிமித்த காரண நிகழ்த்துக வெனநீ

௫ யவனே காரண மனைத்துமென் றறைந்தனை
மண்டணிக் குலாலன் றண்டசக்க ராதி
காரண மூன்று மோர்பே ரணைந்ததித்
தாரணி யதனிற் கண்டது சாற்றுக
வுத்த னியற்று மித்தொழில் பிறர்க்கோ
௰ தனக்கோ வீணே யெனக்கீ தியம்புக
வீணெனிற் பித்தர் மாண்பறுந் தொழில்போற்
றலைமையு மறிவு மிலதென விகழ்வர்
தனக்கெனி லஃதுமூ னிற்பதொன் றன்றே
தன்போ லறிஞருந் தலைவரு மிலரான்
௰௫ மின்போ னிலைமையை வேண்டலும் பழுதே
பிறர்க்கெனிற் பிறரும் பிறர்க்காம் பொருளும்
பொருட்கமை கருவியு மதற்குபா தானமுஞ்
செய்கையு மென்றே ரைவகைத் தாரொடு
மாறாச் சைவர் கூறு மொன்று
௨௰ னின்சித் தாந்த மவசித் தாந்த
மென்சித் தான்ற வசித்தைமற் றீண்டு
தசித்தில தென்னி லசித்ததென் னுலகி
லுலகா யதனும் பூதக் கூட்டஞ்
சலமேற் கொப்புட் டகுமெனச் சாற்றினன்
௨௫ றீய கருமச் சீனர்சா வகர்பிறர்
ரேய மில்லென நிகழ்த்தின ரிலரே
காண்டல் விரோத நிற்பிறர் கணித்தில
ரீண்டுனை துரைக்குமற் றியார்கரி யுடலுஞ்
சித்தோ சித்தின் சேர்வாற் சித்தெனிற்
௩௰ கடப டாதியு முடற்கட் சிதைவென்
றாபா வுயிர்போற் றருவொழிந் திவற்றின்
மேவிய வுணர்வு விரவிடு மென்னிற்
சடத்துயிர் போலெனச் சாற்றினை யாகலி

னுடற்குயி ரிறையை யொழிந்துண் டன்றே
௩௫ தருதிட் டாந்தமுந் தாட்டாந் திகமு
மொருபொரு ளாகி லுவமை பெறாதே
யொன்றே யாகி லுடற்கிறை தாபரத்
தொன்றிய நிலையில் விசேடமென் னுரைக்க
பூதச் சேர்வைப் பேதமென் றறையிற்
௪0 சேர்வைப் பேத மென்கொடு செப்புக
கருமத் தளவில் வருமெனிற் பித்த
ருரையிற் றிகழு முணர்வொழிந் தனையே
கருமஞ் செய்வோன் கடவுளன் றுடலு
மருவினின் றிருவினை வளரா நுகரா
௪௫ கடவுளு முடலின் கண்பட றுஞ்ச
லிடர்நல முறுத லிறங்குத லேறுத
லெவ்வகை யேனுஞ் செய்கையின் றாதலும்
பலகலை யுலகி னிலவுத லானு,
மெண்ணரும் பொருளு மிரவியு மொழியக்
௫0 கண்ணென வொன்று காண்கையி னாலும்
பாசப் பகுதியு மீசனு மொழியப்
பசுவு முண்டென் றிசையவேண் டின்றே
யிதுவெனு மொன்றை யதுவாய்ப் படுத்துப்
பொதுமையி னிற்கு மாயையின் பொற்பெனப்
௫௫ பொற்பணி யாவும் பொன்னாந் தன்மையி
னிட்கள சகளத் திருவுரு நிலையு
மீச னெனப் பேசுவ ரன்றி
யருவுரு வாகி வருமுல கென்னி
லனைத்து மாயை யெனத்தெளி கிலையே
௬0 யாவது மாகா தொழிவது மிலதெனும்
பாவக முலகா யதனது பான்மை
கட்கொலை வெகுளி காமங் களவுக

ளுட்படு மிவைவிட மொழியா தாரிலர்
சோம பானஞ் சுராபா னங்க
௪௫ ளாமென மறைக ளார்செவிப் பறைந்தன
மறையோன் புலைச்சியை மருவு மென்பது
முறையோ வெனிலது புனைமொழி யென்னிற்
சாதி பேத நீதிநீ தவறினு
மேதியை யேறு விழையா விரும்புங்
௭௰ கண்ணின துருவு மதிற்கதி ரொளியு
நண்ணருஞ் சத்தி நாடக மெனிலதற்
கேதுவும் பயனு மோத வேண்டு
நின்மொழி விரோதமு நீடுல கியற்கையுந்
தன்மசாத் திரமுஞ் சகலமு மென்செயு
௭௫ *மூலமே ழெனவிறை பலவாந் தன்மை
கடமொடு சராவங் கலச மாதிக
ளடலுறு குயவ னயின னென்றாற்
றானே யாகா வவைதா னகா
னயின னென்ப தாக்கின னெனவே
அ௰ யானு யென்ப தனைத்து மவ்வகை
தானு காமையைச் சாற்றிடு மென்க
தாமே யெனுமித் தனியே காரம்
அழிந்தில ரதுவே யாய்த்தில ரதுவிட்
டொழிந்திலர் பிரிவில ரெனுமிவை யுணர்த்துங்
அ௫ காயும் பழமுஞ் சுவையு நுகர்வ
தாயவன் றானு மவன்முதற் றென்னு
மகிலமுந் தெளிய வறிவோன் றானு
மகிலமு மறிஞரை யறிவிப் போனு
மறிஞர்க் கறிவா யறிகின் றோனு
௯௰ மறிவிற் கறிபொரு ளாவோன் றானு

---

* திருவாசகம் திருத்தோணோக்கம். ௫,

மகிலமு மேனி யானவ னென்னுந்
தருபொருள் கொள்பொருள் தருவோன் கொள்வோ
னொருபொரு ளாயி னுவப்புண் டென்க
நுகர்வோன் றனக்கு நுகர்பொருள் வேண்டிற்
௯0 றிகலறக் கிடையா திருந்தனெ னிறையமும்
வேண்டா ராயினு மெய்யுறு வியாதிக
ளீண்டா தொழியா திறைக்கிவை யீடல
சத்தியுஞ் சிவமுந் தாமே நுகருமென்
றித்திற னுணர்வுந் தெய்துவ தெவர்க்கோ
௯ தமக்கே யென்னிற் றமுண ராமையு
மமைப்பற வுணர்தலு மவர்க்கடை வன்றே
நானு மவனு நவையு நலனுந்
தானவ னுகையு நின்சா தனத்தில்
சகயோ கத்தைச் சாயுச் சியமெனப்
௯௫ பகர்வது பதிபசு பாசத் தவர்க்கே
யாதொரு வகையென வோதிய திறைநூல்
சொன்னவற் றொன்றன் றென்னில்வீ டெளிதே
தானறி வழியே தலைப்பொருள் பிடித்து
மேனிகழ் பலமும் வீடளித் திடுமே
௯௯ நிலையாக் கருவியை நிலையாக் கருதிப்
புலையா மெதலு முலகா யதன்பொருள்
குட்டிய மின்றிநற் கோல மெழுதுத
லிட்டம தாயிற் கருவியு மிடங்களுங்
கருத்துற வுரைக்கத் தெரித்திடு மதீதத்
௧௧0 தறிவொன் றில்லோர்க் கிறையரு ளுதவுதல்
பிறிவறி வரிய செறியிரு ளிடத்தோ
ரந்தகர் காண வந்தோ ரெம்மை
நீவிருங் காண வேண்டு மென்றுங்
கெடுத்தோர் தீபங் கொடுத்ததை யொக்கு

கஉ௰ மிச்செயற் கிறைவன் கொச்சைய னன்றே
கருவி வசத்திற் றெரிவுறக் காணா
வேண்டுந ரிலரா லீண்டறி வியாவுஞ்
சிவமே யென்று செப்பினை யவமுறு
பொறிபுல னறியா வறிவது பிரம
கஉ௫ மென்றோர்க் குன்போ லிடர்ப்பட லிலதே
யேற்றங் கருவி யிருபதோ டிரண்டும்
போற்றுமைந் தவத்தையும் புகறிரி மலமு
மீசனு முயிரும் பேசினை யஃதொழிந்
தொன்றே யாகு மென்றநின் னியல்பு
கங௰ தாயர் மனைவியர் தாதியர் தவ்வைய
ராயவ ரெவரையு மோர்மையிற் காணுங்
கோகழி தூர்த்தர் கொடுந்தொழி றகுமே
யாக மற்றத னருணிலை தன்னிலை
யேக நாயக னாகிய விறைநிலை
கங௫ நாசமில் பாசம் வீசிய வியனிலை
யினையவை யொன்று நினைவினு மின்றி
யுண்டெனு முணர்விற் கண்டது கருதி
விழுக்கெனும் புலன்வழி யொழுக்கமு மதுவாக்
கொண்டு பண்டையி லெண்டரு மடங்கு
கச௰ வந்தவர் செய்த தந்தையை யன்றே
புன்மைக ணீங்க வுண்மை கேண்மதி
யறிவா யறியு மறிவுயிர் கேவலத்
தறிவில னிருளொடும் பிரிவில னண்ணல்
கலைமுத லாக நிலவிய கருவிகள்
கச௫ விளக்கென வுதவுந் துளக்கறப் பொருந்தி
யிருவினை நுகர்வில் வருவினை செய்து
மாறிப் பிறந்து வருநெடுங் காலத்
திருண்மல பாகமுஞ் சத்தி நிபாதமு

மருவுழி யருளுரு மன்னவ னணைந்து
௧௰௰ செல்கதி யாய்ந்து பல்பணி படுத்திக்
கருவியு மலமும் பிரிவுறப் பிரியா
ஞான நல்கலுந் தானது நோக்கித்
தன்னையு மதனையுந் தன்முதற் பொருளையு
மின்னவென் றறியா விருவரு முயங்கி
௧௰௫ யொன்றா யுறுபய னுவப்பு
மின்றாய் நிற்கு மிதுசிவ கதியே. ௰௧

## சைவவாதிசங்கற்ப நிராகரணமும் சித்தாந்த சைவாசாரியார் அநுக்கிரகமும்

இதுகதி யாக முதலறி வுயிரேற்
பொறிபுல னீங்க வறிவுயி ரன்மேற
யடைகாய் நூறி னிடைசேர் சிவப்பென
விந்தியத் தொகையின் வந்தறி வொன்றுநின்
௫ றின்றா மென்ற லன்றே யெந்தை
யறிவில னதீதச் செறிவிலென் றுரைத்த
நின்மொழி விரோதமும் பின்முன் மலவு
மன்வயி னிகழா மலமிரு ளிறையொளி
யான்மா விளக்கிற் றகுமருட் கலாதிக
௰ ளீனமி லிவனிடத் தெவ்வா றிசைந்தன
விசைந்த தாயினு மிசையா தாயினு
மசைந்திடு முத்தி சாதன மவமே
சத்தி நிபாதமோ தகுமல பாகமோ
வுய்த்த காரண காரிய மோதுக
௰௫ பாகங் காரண மாகின் மற்றது
காலா வதியிற் காயா வதியின்
மேலா மென்னும் வினையுறு மவதியிற்
றாயமொன வுயிர்க்குத் தோன்றிடு மவதியி

னயமிகு மிறைவ னல்கிடு மவதியி
உ௰ லேதிற் கூடு மோதுக விருவினை
யொத்த வெல்லையில் வைத்தன ரென்னி
லருவினை தூக்க வருவினை நில்லா
வொருவினை புரிகா லிருவினை யாகா
வொப்புறு மாறு செப்புக தேசிக
உ௫ னருளுரு வென்ற பொருளினை யாயின்
மாயா வொருவன் மாயா வுருவினை
யேயா னெய்ந்தவ ரெம்ம ளோரே
பல்பணி ஞான காரண மென்னிற்
றொல்பணி தொறும்பயன் றொடுப்பத னாலு
௩௰ மொருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரு
மரச ராய தருணத் தலைவரு
முதிர்பா சமயத் திதமுறு மாசரு
ஞானம் பெற்ற நன்மையி னாலு
மீனமில் பணியருட் கேதுவன் றென்றான்
௩௫ ஞானேற் பத்தி நிமித்தமித் தொழிலென
வேனோர்க் கிறைநூ லியம்பிற் றென்னாங்
கருவியு மலமும் பிரிவுற வருடரு
மென்றனை கேவலத் தேது மறிவிலன்
றுன்றிய சகலத் தருணிலை தோன்றா
௪௰ வெவ்வ வத்தையி லிறையருள் பெறுகுவஞ்
செவ்விய ஞான தரிசந மாவது
நால்வகை மாயைப் பால்வரு ஞானம்
பண்டை ஞான மிதுவறி தாவாக்
கண்ட ஞான மிதுவாக் காணி
௪௫ லீன ஞானிக ளென்போர் யாருமின்
ஞான வேற்றுமை நாடலு மரிதே
தானு ஞானமுந் தலைவனு மென்றனை

யானபி னிவனு மிவனது ஞானமும்
பாசமும் பாச ஞானமு மென்றிவை
௫௰ பேசுவ ரொன்றாப் பெற்றிய வாகலின்
மும்மைப் பொருட்கு மும்மைத் தன்மை
செம்மைத் தென்னிற் செலவுக ளெழுதுக
விருவருங் கூடி யொருபய னுய்த்தென்
றருளினை யிவ்வா றபேதிக னிலையே
௫௫ பதிபசு பாச முதிரறி வுகளுட
னாறு முன்னர்க் கூறாப் பின்ன
ரிருபொரு ணீத்துமற் றொருநால் வகையு
மீனமின் ஞாதுரு ஞான ஞேயமென்
றிசைய மூன்றாய்ப் பசுபதி யென்றவற்
௬௰ றிரண்டா யிரண்டு மொன்றிஞென் றாகத்
திரண்டாம் பயனெனுந் திருவரு டெளியிற்
*சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றா
மென்றிறை யியற்கை யியம்புத றகுமே
யொன்றா மென்ற லன்றியு முவப்பு
௬௫ மின்றா மென்றா லென்பய னியம்புக
வென்றனை விறவு மியாவும் விளங்க
வென்றிகொள் கருத்தின் விரும்பினை யாயி
னதிக்கரை யானெனக் கொதித்தல மந்து
வெண்ணையம் பதிதிகழ் மெய்கண் டவனரு
௭௰ ளுண்ணிலை யுடையோ னொருவ னுரைத்த
தவப்பிர காசத் தன்மையில் விரித்த
சிவப்பிர காசச் செழுந்தமி ழுண்மையை
யருளுட னுய்ந்து கொள்ளத்
திருவருள் வினவ விருந்திடு மன்றே. ௰௨

முற்றிற்று

---

* திருவாசகம்.

# அனுபந்தம்

## சிவஞானபோதம்

### நூற் சிறப்பு

நேரிசை வெண்பா

வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் றிறம்.

### நூற்கருத்து

முதற்பதி யரனே யைந்து முன்னத்து விதமி ரண்டே
யிதற்பினே யனுமா னத்தா லெண்ணிலா வுயிர்கண் மூன்றே
யதற்பினே யவத்தை நான்கே யகமறுத் திடலே யைந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்த லுயிரை யேழே,

மறைப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்த லெட்டே
சிறப்புடை யுபாயந் தம்மாற் றெளிவித்த லுயிரை யொன்பா
னறுத்திடன் மலங்கள் பத்தே யழுந்தலே சிவத்தி லொன்றே
திறப்பணி கொளலி ரண்டே சிவஞான போதஞ் சித்தி.

## உதாரண வெண்பாக்களின் றொகை

நேரிசை வெண்பா

ஐயொருப தேழுழு மாங்கமைந்த நாலாறு
மையொன்ப தோரெட்டோ டாறுறுந்—துய்யவெட்டோ
டெண்பத்து மொன்றுஞ் சிவஞான போதத்தின்
மன்னருளும் வெண்பா வகை.

## சூரணை - சிவஞான போதத்துள்ள சூத்திரம்

## வெண்பாக்களாகிய இவற்றின் றொகை

நேரிசை வெண்பா

சூத்திரமீ ராறினுக்குச் சூரணைமுப் பானொன்பா
னேத்தவெண்பா வெண்பா னிரண்டனைத்துஞ்—சேர்த்ததொகை
நூற்றுமுப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வி னய்ந்துணர்ந்தோர்
வேற்றுருக்கொள் ளாருறுவர் வீடு.

## சைவ சித்தாந்த சாத்திரம்

## பதினன்கனையு முணர்த்துஞ் செய்யுள்

நேரிசை வெண்பா

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று.

திருவாவடுதுறைச் சுவாமிநாத தேசிகர்

அருளிச்செய்த

# சிவஞான போதச் சூரணைக் கொத்து

## முதற் சூத்திரம்.

க. சகம் பிறப்பிருப்பிறப்பாகிய முத்தொழிலை யுடையது.

உ. அது அரனாலே யுடையது.

௩. மற்றிருவரு முத்தொழிற்படுவர்கள்.

## உ-ம் சூத்திரம்.

க. அரனுயிர்களி லிரண்டற நிற்பன்,

உ. உயிர்களுக்குக் கன்மபலனை யரனே கொடுப்பன்,

௩. உயிர்க ளச்சுமாறியே பிறக்கும்.

௪. அரன் சர்வ வியாபகன்,

## ௩-ம் சூத்திரம்.

க. இல்லையென்கின்ற வறிவுடனே சொல்லுகையினாலே யறிவுயிருண்டு,

உ. எனதுட லென்ற பொருட் பிறிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே யுடற்கு வேறாயுயிருண்டு,

௩. ஐந்தையு மொருவனே யறிதலி னெவ்வொன்றை மாத்திர மறிகின்ற வைந்திற்கும் வேறாயுயிருண்டு.

௪. கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே கனவுடலுக்கு வேறாயுயிருண்டு,

௫. நித்திரையிலும் பிராணவாயுத் தொழிற் பண்ணவுஞ் சரீரத்திற்குப் புசிப்புந் தொழிலு மில்லாதபடியி னாலே பிராண வாயுவுக்கு வேறாயுயிருண்டு.

௬. மறந்து மறந்து நினைக்கின்றபடியினாலே மறவாம லிருக்கிறவானுக்கு வேறாயுயிருண்டு.

௭. எல்லாத் தத்துவங்களுக்கும் வெவ்வேறு பெயரிருக்கிற படியினாலேயந்தத்தத்துவங்களுக்குவேறாயுயிருண்டு.

௪-ம் சூத்திரம்.

௧. அந்தக் காரணங்களுக் குயிருடனே கூடினா லன்றித் தொழிலில்லாதபடியினாலே யந்தக்காரணங்களுக்கு வேறாயுயிருண்டு.

௨. மலமறைப்பாலுயிர்க்கறிவில்லை.

௩. உயிர் மூன்றவத்தைப்படும்.

௫-ம் சூத்திரம்.

௧. உயிரால்ல தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும்.

௨. அரனாலே உயிர்களெல்லாமறியும்.

௬-ம் சூத்திரம்.

௧. உயிரறிவினாலே யறியப்பட்ட வெல்லாமழியும்.

௨. அப்பிரமேயமாக வறியப்பட்டவனே யரன்.

௭-ம் சூத்திரம்.

௧. அரன்பாசத்தை யனுபவியான்.

௨. பாசமரனை யனுபவியாது.

௩. உயிரவ்விரண்டினையு மனுபவிக்கும்.

௮-ம் சூத்திரம்.

௧. உயிர்க்கு நல்லறிவு தவத்தினாலேவரும்.

௨. உயிர்க்குச் சற்குருவாய் வருவதரனே.

௩, உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையு மறியமாட்டாது,

௪. உயிர்பஞ்சேந்திரியங்களிற்பற்றற்றாற்றன்னையுமறியும்,

## ௯-ம் சூத்திரம்.

௧. உயிர் அரன் ஞானத்திலே யரனைக்காணும்.

௨, உயிர் பாசத்திலே பற்றற்றா லரன் வெளிப்படுவன்,

௩. பஞ்சாட்சர செபம் பண்ணினால் வாதனைமலம் போம்.

## ௰-ம் சூத்திரம்.

௧, அரனுட னொன்றாகி நில்.

௨, உன்றொழிலெல்லா மரன்பணி யென்றே கொள்,

## ௰௧-ம் சூத்திரம்.

௧, ஞானிக்குவருகின்றவிடயங்களை யரனே யனுபவிப்பன்.

௨, அரனை மறவாம லன்பிருந்தா லவ்வரனிடத்திலே யைக்கமாய்ப் போவன்,

## ௰௨-ம் சூத்திரம்.

௧, மும்மலங்களையுங் களைக.

௨. சிவஞானிகளுடனே கூடுக,

௩.. சிவ ஞானிகளையுஞ் சிவ லிங்கத்தையுஞ் சிவனென்றே தேறி வழிபடுக,

௪, வழிபடாமையை யொழிக,

# சிவஞானசித்தியார்

## பரபக்கத்தின் பாடற்றொகை.

முகவுரையிற் றசமெழுமூன் றதன்முப்பா னென்று
மூதுலகன் முப்பானென் றெண்ணைந்தாம் புத்தன்
றிகழ்மூவர்க் கோரெட்டா நிகண்டனுக்கெட் டேழ்
சீவகனுக் கீரைந்தோ டிருமூன்றாம் பாட்டன்
பகர்பதின்மூன் றீரைந்தே பாகரனீ ரிரண்டாம்
பரிணாம நான்கிருநான் கேமாயா வாத
நிகழைம்மூன் றறுமூன்றும் பாற்கரியற் கேழா
நிரீசுரற்குச் சதுராத்திரி யெழுமுப்பா னென்றே.

## சுபக்கத்தின் பாடற்றொகை.

ஐந்துதுதி யீரேழு மளவை யாகு
மாதிதனி லெழுபதுபின் றெண்ணூற் றாறு
நந்துசதுட் டயநாற்பா னவமும்பின் னவமு
நனிநான்கு நாற்பதினி லொன்றிழிந்தீ ராறுங்
கந்தன்முக மோராறுங் கரமங்கி ராறுங்
கருதிடுவங் கணபதியைங் கரமுமிரு பதமுஞ்
சிந்தையிவை மூவொன்ப தொடுமுந் நூறுஞ்
சிவஞான சித்திசுப பக்கமெனத் தெளியே.

# செய்யுள் முதனிலை அகராதி

## திருவுந்தியார்



## திருக்களிற்றுப்படியார்

## சிவஞானபோதம்

## சிவஞானசித்தியார் பரபக்கம்

## சிவஞானசித்தியார் சுபக்கம்

## இருபா விருபஃது

## மெய்கண்ட சாத்திரம்



## உண்மை விளக்கம்

## சிவப்பிரகாசம்

## திருவருட்பயன்

## வினாவெண்பா



## போற்றிப் பஃறொடை



## உண்மைநெறி விளக்கம்



## கொடிக்கவி



## நெஞ்சுவிடுதூது



## சங்கற்ப நிராகரணம்



---

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௧௬ | ௧௫ | நீத்தோகண் | நீத்தோர்கண் |
| ௩௧ | ௪ | ணிருடீர்ந | ணிருடீர்ந் |
| ௪௧ | ௧௩ | கனவின்கட் | நனவின்கட் |
| ,, | ௨௫ | துன்பஞ் | இன்பத்துன்பஞ் |
| ௬௨ | ௧௨ | தன்னுருவை | தனதுருவை |
| ௬௯ | ௬ | வெண்ணெய் | வெண்ணை |
| ௯௨ | ௨௧ | நூலின்றிலறையா | நூலின்றியறையா |
| ௯௫ | ௧௨ | நினைந்து | நிறைந்து |
| ௱௬<br>,, | ௧௩<br>௧௭ | இகலினுத | இகலினுத்த |
| ,, | ௧௯ | ணின்ற | ணின்ப |
| ௱௰ | ௧௨ | தருமலர் | தருமவர் |
| ௧௩௪ | ௭ | பொயம்மா | பொய்ம்மா |
| ,, | ௧௨ | யாசறுத்தானை | யாசறுத்தானை |
| ௧௪௧ | ௰ | வெண்ணெய் | வெண்ணை |
| ௧௫௰ | ௫ | வித்தை ஈசர் | வித்தையீசர் |
| ௧௫௬ | ௧௨ | அத்திர | அத்திற |
| ௧௫௯ | ௨௰ | முன்ப | முன்ன |
| ௧௬௨ | ௭ | ணெங்கும்வாழ | ணெங்கும்வாழ் |
| ,, | ௨௧ | மறைசளீ | மறைகளீ |
| ,, | ,, | வுயிறை | வுயிரை |
| ௧௬௭ | ௰ | முன்று | மூன்று |
| ௧௬௮ | ௪ | விடயமாத | விடயமாக |
| ௧௬௯ | ௧௫ | போக சயித்திரத்தோ | போசயித்திரத்தோ |
| ௧௭௬ | ௨ | வேம்மை | வெம்மை |
| ௧௮௫ | ௩ | அந்நியமாக | அநநியமாக |
| ,, | ௧௩ | உறைப்ப | உரைப்ப |
| ௧௮௭ | ௧௮ | சத்திணி பாதத்தால் | சத்திநிபாதத்தால் |
| ௧௯௧ | ௨௫ | பெறும்பிதற்று | பெரும்பிதற்று |
| ,, | ௨௬ | வீழந்திடுவ | வீழ்ந்திடுவ |
| ௨௱௧ | ௪ | முளத்தவன்றோ | முளத்தவன்று |
| ௨௱௫ | ௧௯ | லாயழிந்நு | லாயழிந்து |
| ௨௨௪ | ௨௨ | வெண்ணைநல்லூர் | வெண்ணெய் நல்லூர் |

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௩௱௯ | ௧௭ | தெண்ணீரருவிழச் | தெண்ணீரருவிவிழச் |
| ௩௱௰ | ௧௫ | சமையங் | சமயங் |
| ௩௧௧ | ௩௰ | ணுள்ளொளிவாய் | ணுள்ளொளியாய் |
| ௩௧௨ | ௰ | மாட்டாரும் | மட்டாரும் |
| ௩௧௯ | ௨௧ | தர்கமும் விடையமுங் | தர்க்கமும் விடயமுங் |
| ௩௨௨ | ௧ | ம...லை | மங்கிலை |
| ,, | ௨௩ | முறுபியம்பாமற் | முறுமியம்பாமற் |
| ௩௨௭ | ௨௫ | தற்பணை | தர்ப்பணை |
| ௩௩௭ | ௧௭ | தாக்கா | தாக்காத் |
| ௩௪௮ | ௧௪ | சாரவங் | சாரவங் |
| ௩௪௯ | ௫ | ணிரையமும் | ணிரயமும் |

சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை.